சிவமயம்.

தோலாமொழித்தேவர்

இயற்றிய

சூளாமணிக்காவியத்தை

மாணாக்கர் எளிதிற் கற்றுணரும்படி

கத்தியரூபகமாகச் செய்த

# திவிட்டகுமாரன்கதை

அல்லது

# வசனசூளாமணி.



"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு."—குறள்.



ராவ் பஹதூர்

## சி. வை. தாமோதரம்பிள்ளை

பதிப்பு.



PRINTED AT THE V. N. JUBILEE PRESS,
BY A. VAJRAVELU PILLAY.
1898

சென்னபட்டணம்
விளம்பி௵. ஆவணி௴.



*All Rights Reserved.*



☞ இப்புத்தகந் தபாற்செலவுட்படப் பிரதி க-ரு ரூ ஞ் ஆக முன்பணம் அனுப்பிச் சென்னபட்டணத்தில் வெ. நா. ஜூபிலி அச்சியந்திரசாலையில், இதன் அடியிற் கையொப்பம் இட்டவரிடத்திற் பெற்றுக்கொள்ளலாம். பத்துப்பிரதி ஒரே முறையில் எஉ ரூபாவிற்கு வாங்குகிறவர்களுக்கு ஒருபிரதி கூட்டிப் பதினொருபிரதி அனுப்பப்படும்.

சென்னபட்டணம்
விளம்பி௵. ஆவணிமீ. }   ஆ. வச்சிரவேலுப்பிள்ளை.

(1898)

# புறவுரை.

தமிழிலே சிறந்த இலக்கியங்களென நிலைபெற்றன சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை வளையாபதி குண்டலகேசி என்னும் பெருங்காப்பியங்கள் ஐந்தும் நீலகேசி சூளாமணி உதயணன்கதை நாககுமாரகாவியம் யசோதரகாவியம் என்னுஞ் † சிறுகாப்பியங்கள் ஐந்துமே. இச்சிறுகாப்பியங்களுட் தோலாமொழித்தேவர் இயற்றிய சூளாமணியென்னும் இரண்டாவது காவியத்தை ஸ்ரீ கைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துச் சற்குருநாதசுவாமிகள் ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகளின் கட்டளைப் பிரகாரம், அடியேன் அச்சிடுவித்து வெளிப்படுத்தியபொழுது, அந்நூலை மாணவர்கள் எளிதிற் கற்றுணர்தற்கு உதவியாக, அதிற் கூறிய திவிட்டகுமாரன் சரித்திரத்தைக் கத்தியரூபமாக இயற்றிப் பகிரங்கஞ்செய்தால் மிகவும் உலோகோபகாரமாகுமென்று அனேகர் விரும்பிக் கேட்டுக்கொண்டனர். அதுகாலத்திற் புதுக்கோட்டை மகாராசாவின் ஹைகோர்ட் நியாயாதிபதிகளில் ஒருவராக இருந்த யான் இடையிட்ட நேரங்களில் எல்லாம் இலக்கணவிளக்கத்தைப் பரிசோதனைசெய்து அச்சிடுவித்துக்கொண்டிருந்தமையால் எனக்குச் சாவகாசம் நேரிடாமல், என்னோடு கூட இருந்த வித்துவான் ஸ்ரீ தாவ்டி அம்பிகைபாக உபாத்தியாயரைக்கொண்டு, அங்ஙனே அதனைச் சிறுவரும் வாசித்துத் தமிழ் பயிலத்தக்க தெள்ளிய நடையில் எழுதுவித்தனன்.

---

× இவற்றுள் முதலன மூன்றும் கும்பகோணம் அரசாங்க வித்தியாசாலைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத் உ. வே. சாமிநாதையரவர்கள் தமது பெருமுயற்சியினாலே அச்சிடுவித்துப் பிரசுரித்துத் தமிழுலகத்தை மிக்கக் கடமைப்படுத்தியிருக்கின்றார்கள்.

† சூளாமணி இரண்டாவது காவியமென்பதற்கன்றி எஞ்சியவற்றின் பெயர்முறைகட்குச் சமணவித்துவான்கள் கூறும் ஐதிகமொழிய வேறுபிரமாணங் கிடைக்கவில்லை.

பின்னர் அதனைச் சென்னைச் சர்வகலாசங்கத்திற் பிரவேச பரீக்ஷைக்கு நியமிப்பிப்பான் கருதி அச்சங்கத்திற் திராவிட பாடசபையாருக்கு அனுப்பினேன். அவர்கள் அதிற் தற்கால வித்தியாகிரமத்திற்கு ஒவ்வாதனவும் பூகோள ககோள சாஸ் திர உண்மைக்கு மாறுனவுமான சத்த சமுத்திர தீவக அச லாதி பழைய தமிழ்நூற் கோட்பாடுகள் பலப்பல ஆங்காங்கு விரவியிருப்பதை நோக்கி மறுத்துவிட்டனர்.

அதன்மேல் அக்கோட்பாடுகளை நீக்கியுந், திவான் பஹதூர் வன்பாக்கம் கிருஷ்ணமாசாரியாரவர்கள் மாதாந்தரம் பதித்து வரும் மஹாராணிபத்திரிகையின் போக்குக்கேற்ப வாக்கியங்க ளையும் மொழிகளையும் மாற்றியும், அப்பத்திரிகையின் சென்ற வருடச் சம்புடத்திற் பாகம் பாகமாக அச்சிடுவித்தேன். அச் சில்வந்தபின் சபையார்சிலர் நடையைமெச்சிச் சரித்திரத்தை இன்னும் பெருக்கியும், பஞ்சதந்திரக்கதைபோலத் திரிசொற் பிரயோகத்தால் அர்த்தத்தைச் சற்றே அருக்கியும், ஒருபொ ருட்பன்மொழிகள் நெருக்கியும் வரைந்தாற், பிரதமவித்தியா பரீக்ஷைக்கு இனி நியமிக்க அருகமாகுமெனக் கருதினர்.

ஆதலால் முதனூற்கு விரோதமாகாது கதையைப் பல்லாற் றுல் அகல விரித்தும், நடையைப் பெரும்பாலும் உயரத் திரித் தும், இடைக்கிடையே ஒருபொருட்குப் பல பரியாயங்களைத் தெரித்தும், மூலநூலிலுள்ள அனேகஞ் செய்யுட்கள் அங்கும் இங்குங் கமழ வரித்தும், முழுவதும் மாற்றி எழுதலாயினேன். ஆயினும் இடந்தொறும் இடந்தொறும் உபாத்தியாயர் புத் தக வாக்கியம் இன்னும் இருத்தலாற் பாஷைநடை இரண்டு பட்டுத் தோன்றும். அஃது யான் மேற்கூறியதற்குச் சான்று. அக்குறைவை ஆன்றோர் மன்னித்தல் வேண்டும்.

சென்னபட்டணம்
விளம்பி௵ ஆவணிᏞீ. }

சி. வை. தா.

(1898)

திருச்சிற்றம்பலம்.

# சூளாமணி.

## தற்சிறப்பு.

**க**ள்ளவிழும் வெள்ளைமரைக் காரிகைமே லுங்கனிந்த
தெள்ளுதமிழ்க்கொள்ளோவாஞ் சேர்ந்திலங்குதுர் -மெள்ளவருந்
தோலா மொழித்தேவர் சூளா மணிச்சரிதந்
தோலா னனத்தாற் றொழு.

## காவியசாரம்.

**வெ**ன்றான் வினையின் றொகையாகி விரிந்து தன்க
ணொன்றாய்ப் பரந்த வுணர்வின்னொழி யாது முற்றுஞ்
சென்றான் றிகழுஞ் சுடர்சூழொளி மூர்த்தி யாகி
நின்றா னடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்.

## முதலாவது குமாரகாலச் சருக்கம்.

கல்விசெல்வங்களாற் சிறப்புற்றோங்கிய பரதகண்டத்திற்கோர் முடிபோல விளங்கியதும், மேகங்கள் நாற்றிசையாலும் மலிந்துபடிகின்ற கோடிக்குன்றத்தைத் தன் கைகளினால் அகழ்ந்தேந்திய திவிட்டகுமாரன் வீற்றிருந்து அரசாண்ட பெருமை பொருந்தியதும், நீர்வளநிலவளமுதலியவற்றாற் குறைவின்றி நிறைந்ததுஞ் சுரமை நாடென்ப. அந்நாட்டிற்குச

சிரோரத்தினம்போன்று, எல்லாச் சிறப்புக்களையும்
உடைத்தாய்ச், சுவர்க்கலோகத்தையும்
தும் பேரழகுள்ளது அதன் போதனமாநகரம். இதன்
மாடமாளிகைகூடகோபுரங்களின் அலங்காரமும்
கள் கடைகளின் விநோதக்காட்சியும் வித்தியாதரவுல
கில் நித்தியந் திருவிழா நிகழ்வதை ஒத்தது. நிதி
யெனப்படுவவெல்லாம் அங்கே ஒருங்குவந்து இளைப்
பாறிக் கண்படைகொள்ளும். அவற்றின்மாட்சிமை
ஆயிரநாவுடையோராலும் விரித்துரைதரத்தகன்று.
அந்நகரம் அரதனாதிகளின் ஒளியால் இரவுபகல் வேற்
றுமைதெரியாது, இந்திரபுரியே அந்தரபுரியாய் ஆண்
டிறங்கிவதிந்தாற்போல விளங்கிற்று.

அந்நகரத்திற் தன்னுயிர்போல மன்னுயிரை ஓம்பும்
பயாபதி அபிதான அரசன் தன்கீழ்வாழும் மன்பதை
கட்கு உயிர்போல இருந்து அரசுபுரிந்தொழுகுவானா
யினான். அவன் இராச்சியத்தில் மதனவேளின் பூங்
கணையாலல்லாது வயவேந்தரின் கொடுங்கணையால்
நலிபவரிலர். தத்தம தருமநெறிநோக்கிக் குடிகடா
மாகவே ஆறிலொன்று கடமைகொடுத்துவந்ததன்றி,
அரசன் இறையென்று பிறிதொன்றும் பிரசைகளை
வருத்திவாங்குதல் கிடையாது அதனாற் பிரசாபதி
யெனும்பெயர் அவற்குக் காரணச்சிறப்புப் பெயராய்
வழங்கியதுபோலும். அஃது அவற்கே தகும்.

அவ்வாறொழுகும் நாளில், அவன் விவாகஞ்செய்
யத்தகுந்திக், குலங்குடி முதலியவற்றாற் சிறுந் தாழ்

வின்றித் தனக்கிணையாகிய அரசகுலத்தில் உதித்த மிகாபதிதேவியை முதன் மனையாளாகவும், அவளுடைய தங்கை சசிதேவியை இரண்டாம் மனையாளாகவும் வரைந்து, பின்னுஞ்சில சுகுணசௌந்தரிய மாதரைக் காமக்கிழத்தியராக அமைத்து வாழ்ந்தான். வசந்தகாலத்தில் மாங்கொழுந்தும் அசோகந்தளிருமன்றோ புஷ்பவனங்களெல்லாம் அணிபெற இலகுவது! அதனையொப்ப இவ்விருதேவிமாரும் பூங்குழை மகளிர்க்கெல்லாம் பொன்மலர் மணிக்கொம்பு மானவும் அன்னோர் திலதமெனவுந் திகழ்ந்தனர். பெண்மையழகாற் திருமகளேபோலவும் நாடோறுங்கேட்பினும நவீனமாகவே பொலியும் மழலைச்சொற்களாற் சரஸ்வதியேபோலவும் இருவரும் அரசனுள்ளமே குடிக்கொண்டுறைந்தனர். அரசனுக்கு அவர்கள் ஆவியாயினர். அவர்களுக்கு அரசன் உயிராயினன். இவர்கள் மனத்தினுட் பிணிக்கப்பட்ட அரசனும் இவர்களுங் கற்பகமுங் கொழுந்துங் காமவல்லிக்கொடியும் போல வாழ்க்கைச்சிறப்புற்றனர்.

அப்படி வாழுநாளில், அவன் முன்னியற்றிய தவப்பேற்றால், பூலோகஞ் சிறப்படையும் வண்ணம் அமரர்கள்வாழுங் கற்பலோகத்தை அரசாண்ட தேவர்களில் ஒருவன் மிகாபதி அரசனுடைய முதன் மனைவி வயிற்றினும், மற்றொருவன் இரண்டாம் மனைவியாகிய அவள் தங்கை வயிற்றினும் அவதரித்தனர். அவருள் மிகாபதி புதல்வன் சந்திரன்போன்ற வெண்ணிறமுடையனாய் பலபத்திரனெனும் நாமமுடையனும், சசிபுத்திரன்

காயாமலர்போலும் நீலநிறமுடையனாய்க் கிருஷ்ண னென்பவனாயுந் தோன்றினர். தேவர்கள் பூமாரிபொழிந்து வாழ்த்தச், சுபமுகூர்த்தங்களிற் பிறந்த இவ்விரு குமாரரில் மூத்தவனுக்கு விசயனென்றும், இளையவனுக்குத் திவிட்டனென்றும நாமகரணஞ் செய்யப்பட்டது. இவர்கள் வளர்ந்து, காளைப்பருவம் அடைந்து, தங்களைக்கண்ட மங்கையருடைய மனமுங்கண்ணுந் தம்மாட்டுப்பிணிப்புண்ணத்தக்க பேரழகுடையராய் வயங்கினர். ஒருநாட் பயாபதியரசன் துயிலொரீஇக் கைகால் சுத்திசெய்து கடவுள் வழிபாடியற்றித், தன்புதல்வர் இருவருந் தன்னருகேவர, அரசவரிசையுடன் போய்ப்,

பளிங்கொளிகதுவப்போழ்ந்தபலகைகண்குலவச்சேர்த்தி
விளங்கொளி விளிம்பிற் செம்பொன் வேதிகைவெள்ளிவேயுட
ளெங்கொளி பவழத் திண்காற் சுடர்மணி தவழும் பூமி
வளங்கவின் றனைய தாய மண்டப மலியப் புக்கான்.

மண்டபம் புகுந்து தன்னோடுவந்த புரோகிதன் மந்திரிமார் முதலியோரை அவரவர்க்கியன்ற ஆசனங்களில் இருக்கும்படி கட்டளையிட்டுத் தானும் ஓர் இரத்தின சிங்காசனத்தில் வீற்றிருந்தான்.

மற்றைவேந்தர்களும் அரசன் பதமலரைச் சிரமேற் சூடி அவன் ஏவலின்படி தத்தம் ஆசனங்களில் இருந்தார்கள். இராசகுமாரர்கள் இருவருந் தந்தைக்கு அருகாசனத்தினராயினர். இவ்வாறு கொலுவில் வீற்றிருந்த அரசன் வாயில் காப்போனைநோக்கி "ஏடு

நாழிகையளவும் இங்கியாவர்வரினும் அவர்களை உள்ளேசெல்ல விடுக்குதி" என்று கட்டளைகொடுத்துப், பாடகர்களுடைய இன்னிசைமுதலியவற்றைக்கேட்டு, ஆனந்தபரவசம் அடைந்திருந்தான்.

அத்தருணத்திற், சோதிடசாஸ்திரம் முழுதுங் கரைகண்டவனுங், திரிகாலஞானமுள்ளவனுமான ஒரு நிமித்திகன் வாயிலில்வந்து, தான் உள்ளேசென்று அரசனைக்காண்டற்குச் சமயமுண்டோவென்று வினவக், கடைகாவலன் அரசன் உத்தரவின்பிரகாரம் அவனை உள்ளே புக விடுத்தனன். அரசன் நிமித்திகற்குக் கைக்குறிப்பால் ஓராசனங்காட்ட, நிமித்திகன் அதினுட்கார்ந்து, சமயம்பார்த்துத், தான்கற்ற சோதிடசாத்திரத்தின் மேம்பாட்டைக் காட்டக்கருதி, அரசனை நோக்கி இஃதொன்று கூறுகின்றான்.

மகாராசனே! சென்றுபோன கங்குலில் ஓரியானையானது விசும்பிடைநின்றிழிந்துவந்து தங்கள் இளையகுமாரனுக்கோர் வெண்மாலை சூட்டி அவனை விண்ணுலகிற்குக் கொண்டுபோக யான் ஒரு சொப்பனங் கண்டேன். அதன்பயன் யாதெனில், ஒரு விஞ்சையராசன் தன்மகளைக் கொணர்ந்து தங்கள் இளையகுமாரனுக்கு விவாகஞ்செய்து கொடுத்துப்போவான் என்பதே. அதற்காக, இன்றைய தினமுதல் ஏழுநாட் சென்றபின் ஒரு விஞ்சையதூதன் திருமுகமொன்று கொண்டுவந்து தங்களுடைய புட்பமகாமண்டபமென்

னுஞ் சோலையில் இறங்குவான்; அதனை நீவிர்யாவ
ருங்காண்மின் என்றுகூறினன்.

இங்ஙனங்கூறக்கேட்ட அச்சபையிலுள்ளோர் மிக்க
வியப்படைந்து அரசனைநோக்கி இராசாவே! தங்கள்
இளையகுமாரன் அத்தகைமையனேயாம், அதற்கை
யமில்லையென்று போற்றினர். இவ்வாறுரைத்து யாவ
ருஞ் சிறிதுநேரம் பேச்சடங்கி இருக்கப் பயாபதியர
சன் நாழிகைப்பறையைக்கேட்டு அனைவருஞ்செல்ல
விடைகொடுத்து, அமைச்சருந் தானுந் தமது மந்திர
சாலையைச்சார்ந்தனர். அரசன் அமாத்தியரைநோக்கி
இந்நிமித்திகனுரைத்தது சம்பவமோ அசம்பவமோ
எனவினவ, மந்திரிமார் அரசனைநோக்கி எம்பெருமா
னே! தங்கள் இளையகுமாரன் கடலாற்சூழப்பட்ட இப்
பூலோகமுழுவதையும் ஏகசக்கிரேசுவரனாய் அரசாள்
வானென்று நாம் அக்குழந்தை பிறந்தபொழுதே
சோதிடர் சொல்லக்கேட்டிருக்கின்றோம். அதுவேயு
மன்றி அக்குமாரனுடைய கரத்திலே சங்கரேகை சக்
கரரேகையென்னும் இரண்டிரேகையுள்ளன. ஆத
லால் அவன் சங்கபாணியனேயாம். சக்கரத்தை ஏந்
துவானென்றதற்குஞ் சங்கையில்லை. நிமித்திகன் ஈண்
டு உரைத்தவாறே விஞ்சையராசன் தன்மகளைக்கொ
ணர்ந்து விவாகஞ்செய்து கொடுப்பானாயின், அதற்கு
நிகராவது பிறிதொன்றின்று. இப்பொழுது யாங்கள்
இந்த நிமித்திகன் உரைத்த பொழிலிடத்தில் ஒரு கன்
மண்டபத்தை அலங்காரப்படுத்திக் குறித்த ஏழுநாள்
காறும் அப்பொழிலிடைத் துருமகாந்தனைக் காவலா

கவைக்கவேண்டுமென்று உரைத்தார்கள். அரசனும் மகிழ்ந்து அவ்வாறே தருமகாந்தனைப் புட்பமாகாண் டத்திற் காவலிருக்க உத்தரவு நல்கித் தன் கோயி லையடைந்தான்.

தருமகாந்தனும் அரசன் கட்டளைப்படியே புட்ப மாகாண்ட உத்தியானத்தையடைந்து காவல்செய்து கொண்டிருந்தான்.

## இரண்டாவது இரதநூபுரச்சருக்கம்.

அஃதங்ஙனமாக, இந்நிலவுலகத்தைப் போன்ற விரிவுடைத்தாய்க் கடலைத்தீண்டி மேனுயர்ந்துபோய்ச் சூரியன் சஞ்சரிக்குந் திக்கெல்லாம்விளங்கி விஞ்சைய ருலகெனப்படும் ஒருமலையுளது. அம்மலையில்,

மஞ்சு தோய்வரை மைந்தரொ டாடிய
அஞ்சி லோதிய ராரள கப்பொடி
பஞ்ச ராகம் பதித்த பளிக்கறை
துஞ்சு பாறைகள் மேற்றுதை வுற்றதே.

அப்பாறைவழிப் பாய்கின்ற புனல்முழுதும், நாடோ றும் நாககன்னியர்வந்து நீராடுதலால், மல்லிகையின் நறு நாற்றமே கமழ்வனவாயிருக்கும் ஆண்டுள்ள பூக்களெல்லாம் பொற்றாமரைபொப்பனவாம். நந்தவ னமனைத்துங் கற்பகச்சோலைகளாம்.

மதியந் தன்கோடுரினும் பொற்பிற்றூங்கிய அவ்வி லங்கலினது தென்றிசையிலே இரதநூபுரச்சக்கரவா ளப் பெயரியதோர் பொன்னகரமுண்டு. பெருமையில் ஈடில்லாத அந்நகரத்திற்கு இறைவன் சுவலனசடி. அவன் மூன்றுலகத்தாருந் தன்புகழைக் கொண்டா டும்படி அரசாண்டுவரும் நாளிலே, அவனதுபட்டத் துத்தேவியாகிய வாயுவேகையென்பாள் வயிற்றில் அருக்ககீர்த்தியென்று பெயர்போந்த ஒரு திருக்குமா ரன் அவதரித்தான். அதன்பின்னர்ச் சிலகாலஞ்

சென்றபின் காமவல்லியெனுங் கொடிபோன்ற பேரழகுபொருந்திய சுயம்பிரபையென்னும் ஒரு பெண்ணாங்கு பிறந்தாள். இம்மாது தோன்றியபின் அவள் தந்தை சுவலனசடியரசனுக்கு அநேக சம்பத்துக்களோடு பிற அரசர்கள் வணங்கும் பெருமையும் உண்டாயிற்று. உலகத்துமங்கையர்க்கெல்லாம் ஏற்றம வந்ததென்று யாவரும் வியக்கும்படி இப்பெண் வளர்ந்து பேதைப்பருவம் நீங்கிப் பெதும்பைப் பருவத்தினை அடைந்தாள்.

இப்படியிருக்க வசந்தகாலமாயிற்று. சொயம்பிரபையின் செவிலித்தாய் வசந்தமாதிலகையென்பாள் வந்து அரசனை வணங்கி வசந்தகாலம் வந்ததென்று சொன்னாள். அதைக்கேட்ட சடியரசன் தன்மக்களோடும் மனைவி வாயுவேகையோடும் மனைவியுடைய தாதியர் தோழியரோடுங் கூடி, அன்னோர் அழகிய தேரினுங் களிற்றினும் விமானங்களினும் இவர்ந்து வரத், தான் பட்டத்துயானையின் மேலேறித், தன்னகரத்தைநீங்கி, மனோவனமென்னுஞ் சோலையைச்சேர்ந்தான். பின்னர் அங்குத் தன்னோடுவந்த மடவாரோடு பொழில்விளையாடல்செய்து, அச்சோலையிலுள்ள அசோகந்தளிரை இவை உங்கள் கைகள்போலுமென்றுங், குருக்கத்திக் கொடிகளை இவை உங்கள் இடையொக்குமென்றும், மாந்தளிர்களை இவை நும் மேனிமானுமென்றும், முருக்கிதழை இவை நும் வாய்ப்பகையாமென்றுங், குயிலோசையை இவை நும் வார்த்தையுறழுமென்றுங், கோங்கரும்பை இவை நுங்

கொங்கையேய்க்குமென்றும், இன்னோரன்ன விநோத வார்த்தைகளை அன்னோர்மனமுவப்பப்பேசி அம்மனோ வன வனப்புக்களை அவர்கண்டு பெரிதுமகிழ்வுறக்காட்டினன். பூக்கொய்வோருங் கண்ணிதொடுப்போருமான பெண்களுந் தாங்கருதியவாறே விளையாடிமுடித்து வந்துசேர்ந்தார்கள். இவர்கள் யாவருந் தற்சூழச், சடியரசன் ஆங்குள்ள அருகக்கடவுளின் ஜினகரத்துக்குப் பூப்பலிகொண்டுசென்று, கோயிலைப்பிரதக்கணஞ் செய்து வாயிலில்வந்தான். ஜினகரத்தின்கதவு திறக்கப்பட்டது. உடனே கடவுள் பேரொளிவடிவாய்க் காட்சிகொடுத்தார். அரசன் மெய்ம்மயிர் சிலிர்க்கக், கரமிரண்டுஞ் சிரமீதேறிக் குவிய, அக்கடவுளுடைய கீர்த்தியைச்சொல்லித் தோத்திரஞ்செய்தான். இவ்வாறு தோத்திரம் இசைத்து அவ்வருகக்கடவுளின் அடியின்மீதிட்ட நிருமாலியத்தைத் தன் சிரமேற்சூடிக் கபாடபந்தனஞ்செய்து கோயிலைவிட்டு வாயிலின்கண் வரத், திகம்பரராகிய இருசாரணர்கள் விசும்பினின்றும் இழிந்து, கோயிலைப் பிரதக்கணஞ்செய்து வாயிலில் வந்துநின்று, அருகக் கடவுள்மேற் துதிகள் சொன்னார்கள். சொல்லிமுடிந்த பின்னர் அரசனை நோக்கிக் களிப்படைந்து அசோகமரத்தடியிற் பொருந்தியசீதார் சிலாதலமிசைச் சென்றிருந்தனர். சடியரசன் அச்சாரணர் அடிகளிற் தன்முடியுற வணங்கினான். சாரணர்கள் மிகமனமகிழ்ந்து அரசனுக்கு ஆசிகூறி இருத்தியென, அரசன் மகளிர் எல்லாருந் தன்னைச்சூழ உட்கார்ந்து, சாரணர்களுட் பெரியராயினருடைய முகத்தை ஏறிட்டுப்பார்த்து அடியேற்

கோர் வேண்டுகோளுளது என்முன். சாரணர் அவனைநோக்கி அரசனே நின் வேண்டுகோளாவது தீவினையாகிய வலியபகையைத்துணிக்கும் இன்னுரையை எற்கு உபதேசியுங்கள் என்பதேயாமென, அரசன் கைகூப்பி அஃதாமென்முன். அப்போது அந்தச்சாரணர் வினையினது திறத்தையும் அவ்வினையின் வேறுபாடுகளையுங்கூறி, அவ்வினையைத் தீர்க்கும்வாயில் கடவுளுடைய திருவடித்தியானமேயன்றி வேறின்றெனப் போதித்தனர். போதனையைக் கேட்ட அரசனுள்ளத்திற் காட்சியாயசுடர் கிளர்ந்தது. அவனுடைய மனைவியும் அறிவுடையவளானுள்.

அவர்கள் சற்போதனையை உற்றுக்கேட்டுக்கொண்டிருந்த அரசகன்னிகை சொயம்பிரபையும் அனந்தரம் மனமுருகி அவர்கள் முன்னிலையிற் சக்கிரவாளமென்னும் ஒருவிரதம் நோற்கச் சங்கற்பித்தாள். இவர்கள் இவ்வாருக, ஆங்கடைந்த அந்தச் சகதபிநந்தனரென்னுஞ் சாரணர்கள் அரசனை ஆசிர்வதித்து விசும்புழிச்சென்றனர். அரசனும் அவர்களை வணங்கிக் கோயிலை வலங்கொண்டு தன்னகரமடைந்தான்.

அதன்பின்பு சுயம்பிரபை தான்கொண்ட நோன்பை அனுட்டித்து மூவுலகினுந் தனக்கிணையில்லையென்று சொல்லும் பேரழகும் பெருங்கீர்த்தியும் அடைந்து, தானுறையும் மலையிலே அருகக்கடவுளுக்கோர் ஆலயங்கட்டுவித்து, அவரை வழிபட்டு, அன்புகசிய வியர்வு பொழிய ஆனந்தபாஷ்பஞ்சொரிய,

ஆதியங்கடவுளை அருமறைபயந்தனை
போதியங்கிழவனை பூமிசையொதுங்கினை
போதியங்கிழவனை பூமிசையொதுங்கிய
சேதியஞ்செல்வநின் றிருவடிவணங்கினம்.

காமனைக்கடிந்தனை காலனைக்காய்ந்தனை
தேமலர்மாரியை திருமறுமார்பனை
தேமலர்மாரியை திருமறுமார்பனை
மாமலர்வண்ணநின் மலரடி வணங்கினம்.

ஆரருள்பயந்தனை யாழ்துயரவித்தனை
யோரருளாழியை யுலகுடையொருவனை
யோரருளாழியை யுலகுடையொருவனை
சீரருண்மொழியநின் றிருவடிதொழுதனம்.

என்று துதித்தனள். பின்னர் அக்கடவுளுடைய திரு மாலியத்தைத் தனது சிரமேற்றாங்கிச் சென்று தந்தையாகிய சயயாசனுக்குக் கொடுத்து வணங்கினாள். வணங்கிய மகளை அரசன் எடுத்து உச்சிமோந்து, மகளே! நீ எனக்குப் புதல்வியாகத் தோன்றிய பின்னைதான் நான் அநேக நன்மைகளையும் பெருஞ்சிறப்பையும் அடைந்தேனென்றுசொல்லிக், கருணைகூர்ந்து, நீ உன்தாயாருடைய மாளிகையிற்சென்று போசனஞ் செய்குதியென்றனுப்பினான். அவள்போனபின்னர் மகளுடைய பிரதாபகற்குணநற்செய்கைகளையும் அவள் மணப்பருவம அடைநதமையையுங் க(
எவ்வருங்கலங்களினும் பெண்ணருங்கலமே பெறு தற்கரிய பேறாதலின், இவள் அழகுக்குத்தக்கதோர்

ஏந்தலைநாடி மணஞ்செய்யவேண்டுமென்று எழுந்த பேரவாவினால் வித்தியாதரர்களிலுள்ள விடலைகட்குள் ஒவ்வொருவரையும் பற்றித் தன்மனதிற்றானே நெடுகவும் ஆலோசிப்பானாயினான். ஒருவராயினுந் தன் மகட்கிசைந்த இலக்கணமுள்ளவர் அல்லரென்றும், ஒரு பெண்ணுடைய தந்தைதாயர்கள் அவளுக்கு ஓர் குரூபியை மணவாளனாக்கினும் அப்பெண் தன்விதியை மனத்துள் நொந்துகொள்வதல்லது பிறர்க்குப் புலப்பட இவன் எனக்கு வேண்டாமென்று சொல்லாள், மாணிக்கத்தைத் தகுதியான இரத்தினாபரணங்களுக்கு நடுவே பதியாமல் ஈயத்திலே பதித்தாலும் அது தான் மாட்டேனென்று சொல்லாது, பதிப்போர் அதன் தகுதி அறிந்து பதித்தால் எழிலடைந்திருக்கும், அதுபோலத் தந்தைதாயாரும் தம்மகளுக்கு அவளுக்கேற்ற சௌந்தரியமுள்ள ஒரு கணவனை விவாகஞ்செய்து வைத்தால் அக்குடும்பஞ் சிறப்புற்று வாழுமென்று நினைத்து, இன்னும்

அந்தணரொழுக்கமு மரசர்வாழ்க்கையும்
மந்திரமில்லையேன் மலருமாண்பில

என்றிருத்தலால் யாமும் இதனை மந்திரிமாரோடு ஆலோசித்தலே அத்தியாவசியகமெனக் கருதிக், குற்றேவலரைநோக்கி நஞ்சொல்லேருழவரை அழைத்து வாருங்களென்று கட்டளையிட்டான்.

## மூன்றாவது மந்திரசாலைச்சருக்கம்.

அவர்கள் அங்ஙனேசென்று தேர்ச்சித்துணைவரை அழைத்துவந்துவிட, அரசன் அவ்வுழையரோடு ஓரிரகசிய மண்டபத்தை அடைந்து அவர்களைநோக்கி முதுவர்காள்! அரசர் எவ்வளவு தருமசீலராயிருந்தாலும் நுண்ணிய நூலறிவினரன்று. எத்துணைப் பெரியராயினும் அவர்க்குப் பழிபாவம் வாராது விலக்கிக் காப்பார் நூல்களை நனகாராய்ந்தறிந்த புலவரன்றோ? எரிகின்ற செம்பொன்மேல் நவமணிகள் இழைத்துச் செய்த கிரீடம் பிரபை சொலிக்க அணிந்து வெற்றி வெண்குடை நீழலில் வீற்றிருப்பினும் அவர்க்கு மனமுங் கண்ணும் வாழ்க்கையும் வலியும் மேன்மையும் அரசுங் கோலுமாபவர் நும்போல்வாராய் அப்புலவரை நிகர்த்த ஏனையரே. இப்பூபாரமாகிய சகடத்தின் நுகமானது அரசன் ஒருவன் ஒரு பக்கத்தில் நின்றிழுத்தால் உருளாது. ஒரு சிறை அரசனும் மற்றொருசார் அவன்விதியருமாக நின்றிழுத்தாற்றான் அச்சகடஞ்செல்லும். ஆதலால் அரசன் ஒருகாரியஞ் செய்யுங்கால் நுண்ணியரோடு உசாவி இருதிறத்தாரும் ஒத்தே அதனைச் செய்யவேண்டும். யான் உங்களையின்றி ஒருகாரியஞ் செய்தலியலாது. அரசன் வையகத்தைஆளும் வாயில் தோள்வலியுஞ் சூழ்ச்சியுமென்றிரண்டு. அவற்றுட்சூழ்ச்சியே குணமுடையது. பலவுமுரைத்தாவதென்னை? நீங்களே என்னை இறைவனுக்கி எல்லாவற்றையும் நடத்துதலாலன்றோ யான்

இத்துணைச் சிறப்படைந்தேன். அது நிற்க, நீவிர் எல்லீருங் குன்றின்கணிட்ட தீபம் ஒப்ப நங்குடியைவிளக்கவந்த என் புத்திரி சுயம்பிரபையினுடைய குணத்திற்கும் அழகுக்குந்தக்க மணவாளன் யாண்டுள்ளான் கருதிச்சொன்மின் என்றுரைத்தனன். அப்பொழுது அன்னோர் மன்னனை வணங்கி, மகாராசனே! நின் சீர் இவ்வுலகத்தில் நீடூழி நிலவுக என்று வாழ்த்திச் சில வார்த்தைகள் பேசத்தொடங்க, முதலிலே சுச்சுத நாமகுரவன் சொல்வானாயினன்.

மகாராச! சூரியகாந்தம் அழலுமிழ்வதுஞ் சந்திரகாந்தம் நீர்கால்வதுஞ் சூரியசந்திரர் சன்னிதியிலன்றித் தனித்தியலாவாறுபோல, நின் உறுதிச்சுற்றமாகிய யாமும் நின் சன்னிதியால் எல்லாச் சிறப்பும் அடைவதன்றி நம்மால் ஆவதொன்றுமின்று. யானைகதுப்பால் உரிஞ்சலாற் சந்தனமரமானது தன்மணம் மிகுத்தாற்போல அரசருந் தங்கீழ்வாழும் அமைச்சர் முதலியோர் செய்த பிழையைப் பொறுத்தலால் அவர்கட்குப் புகழ்வளர்கின்றது. உலகத்துக்குக் கண்கள் மூன்று. ஒன்று சூரியன், ஒன்று கல்வி, ஒன்று அரசன். இம்மூன்று கண்களில் ஒன்று இல்லையாயினும் உலகம் நடவாது. கல்வியறிவோடு கூடிய அரசன் இருகண்ணோடு கூடியிருத்தலால் அவன் சூரியனிலும் அதிகனாவான். வெற்றிபொருந்திய வேலாயுதத்தைக் கையிற்தரித்த அரசர்க்குச் சொல்லிய நற்குணங்களெல்லாம் ஒருங்குதிரண்டு அவதரித்த மூர்த்தியே! நின்முன் யாம் உலகநீதியெடுத்துரைப்பது

நூல்களைக்கற்றுக்கரைகண்ட பெரியோர்க்குமுன்னை விழலர் [illegible] கர்க்கசமொழியன்றோ? என்றின்னோ ரன்னபல உபசாரவார்த்தைகளைச் சொல்லிப், பின் அவனைவணங்கி, அரசனே! தங்கள் திருமகட்கேற்ற புருடனை யான் அறிவேனென்றுரைப்பானாயினன்.

இவ்விஞ்சையர் ஊரிலே, உத்தர சேடியிலே பொன் னுலகினுஞ் சிறப்படைந்த இரத்தினபல்லவம் என் றோர் நகரமுளது.

மண்ணியல்வாழ்நர்க்கு வானுலகொப்பது
புண்ணியமில்லார் புகுதற்கரியது
கண்ணியகற்பகக் கானங்கலந்தது
விண்ணியலின்பம் விரவிற்றினிதே.

அந்நகரத்தை அரசாண்ட மயூரகண்டன் தேவிமாருள் நீலாங்கனையெனும் பட்டத்துத்தேவியீன்ற புதல்வன் அச்சுவக்கிரீவன். அவன் தானையாலும் ஆணையாலுஞ் சூழ்ச்சியாலும் இவ்வுலகம் எவற்றையுந் தன்னடிப்ப டுத்தி எல்லாரினும் மேற்பட்டவனாய் இருக்கின்றான். அதுவன்றி, அவனிடத்திற் சருவோபாய தந்திரமு டைய அரிமஞ்சு எனப் பெயரிய பெருமந்திரியுளன். அவற்குநிகர் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை. அதுவு மன்றித் திரிகால சம்பவங்களையும் அறியுஞ் சதவிந்து நிமித்திகனும் அவன் வசமுளன். ஆதலால் எல்லா அரசருந் திறையிடத் தான் ஏகசக்கிரவர்த்தியாயிருக் கின்றான். அரசனே! நமதுகுமாரத்தி பிறந்த பின்பு தான் நம்மிடத்துத் திறைகொள்ளா தொழிந்தனன்.

அது தங்களுக்குந் தெரியுமே. ஆதலால் அந்த அச்சுவகண்டற்கு மணம்புரிதலே தக்கதென்று சுச்சுதன் கூறப் பவச்சுத முதுவன் சொல்லுவான்.

அரசே! சகல நூல்களையுங் கற்றவனும் நுண்பொருளைக் கண்டு சொல்ல வல்லவனுங் காரியாகாரியங்களைச் சீராய் ஆராயும் நிபுணனுமாகிய சுச்சுதன் உரைத்தது மிகச்சகசமே. ஆனாலும், அவ்வச்சுவகண்டன்மீது யானோர் குற்றங்கண்டிருக்கின்றேன். அதைக் குற்றமல்ல என்று யார்சொல்லினும் உடம்படேன். அக்குற்றமாவது அவனுக்கு வயது ஊழிகாலஞ் சென்று விட்டதேயாம். அஃதோர் பெருங்குற்றம். அல்லதூஉங் கனகசித்திரையென்பவள் அவனுக்குப்பட்டத்துத் தேவியாயிருத்தலானும் அவள் மக்கள் ஐஞ்ஞூற்றுவருள் இரத்தினகண்டனென்பான் இளவரசுப்பட்டம் பெற்று அரசர் எவரும் பயப்படத் தக்கவனாய் வாழ்தலானும் அவன் இப்பெண்ணுக்குத்தக்க மணவாளன் அல்லன். அன்றியும் நங்கோமானே! தங்கள் புதல்விபிறந்தபொழுது எழுதிய சாதகத்தில் இவள் ஓர் இராசகுமாரனுக்குப் பட்டத்துத் தேவியாய் இருப்பாளென்றும் இவள் புதல்வன் உலகெல்லாந் தனிச்செங்கோல் ஓச்சுவானென்றுமன்றோ எழுதப்பட்டிருக்கின்றது! அதனாலும் அச்சுவகண்டன் இக்கன்னிகைக்குரியவனல்லனென்று பவச்சுதன் சொன்னான்.

சடியரசன் கேட்டு அவனை நோக்கி இவட்குரிய கணவன் வேறியாவனென்று வினவ, அவன் அரசனை

நோக்கி வந்தலே! இம்மலைக்கு மேலைச்சாரிலுள்ள கின்னரகீதத்தை அரசாளும் அரசனிடத்துப் புரவி விஞ்சை வல்ல பவனஞ்சன் என்றோர் செம்மலுளன் அமிழ்தமாபதியரசன் புதல்வன் வேகமாரதன் என்பா னொருவனுளன். அவனை இப்பேருலகம் இளங்களி யுழுவையென்று புகழும். மேகமாபுரத்தரசன் புத்தி ரன் பநுமரதன் என்றொருவனுளன். அரசர்யாவருப் அவனை ஊழித்தீயென்றுசொல்லி அஞ்சுவர். இரத் தினபுரத்தரசன் குமாரன் இடியேறுபோன்ற சுவர்ண தன் ஒருவனுளன். கீதமாநகரத்தரசன் மகன் செங் கண்மாலுஞ் செயித்தற்கரிய அரிகண்டன் மற்றொரு வனுளன். திரிபுரத்தரசன் சேய் இராசசிம்மமும் கல் விக்கடலுமாகிய அளிதாங்கன் பின்னொருவனுளன் சித்திரகூடத்தரசன் நந்தனன் இந்திரன் மதலையாகிட சயந்தனையொத்த வமாங்கதனுளன். அவற்குமாறாக உலகத்தில் ஒரு மன்னருமிலர். அச்சுவபுரத்தரசன் காதலன் கனகசித்திரன் என்று பூவுலகிற்கோர் திலத மான காளையுளன். திருநிலையகத்தரசன்சிறுவன் சித் திராதன், கனகசித்திரனன்னோன், இன்னொருசெம்ம லுளன். கனகபல்லவத்தரசன் மருமான், செற்றவர்ச் செருக்குஞ் செருவல்லான், பூமிதேவி மனங்களிக்கப் பிறந்தான் அரிகேது வேறொருவனுளன். இந்திரசஞ் சயபுரத்தரசன் கான்முளை அருஞ்சயன் என்றொருவ னுளன். அவன் இவ்விஞ்சையருலகத்திற்கோர் சூளா மணி. சுவாமீ! இப்போது யான்கூறிய இக்காளைய ருள்ளே தங்கள் கன்னிகைக்கேற்ற மணவாளனைத் தெரிந்து மன்றல்புரிகவென்று பவச்சுதன்பகர்ந்தான்.

எஞ்சியோரும் அஞ்சலியஸ்தராய், இதுவே தக்க தென்று ஒத்துக்கொண்டார்கள். அப்பொழுது சுதா கரன் உரைப்பானாயினான்.

அரசனே! பவச்சுதன் அச்சுவகண்டனுக்கோதிய குற்றம் மெய்யானாலும் அவனுக்குப் பகையாக இந் நங்கை தோளைச் சேரவல்லன் ஒருவனுமிலன். சேரில் அவன்பகை நமக்கும் உண்டாகும். அவனுக்கு மாறாக விவாகஞ்செய்யில், இவ்வுலகமெல்லாவற்றையும் ஏகசக்கிரவர்த்தியாய் ஒருகுடை நிழற்கீழ்ப் புரக்குஞ் சுரேந்திரகாந்த அரசன், வேகம்பொருந்திய மதகளிற் றினும் வலியன், மேகவாகனென்றொருவனுளன். அவ னுடைய பட்டத்தரசி மேகமாலினியென்பவளுடைய தெய்வவழிபாட்டினால் அவள் வயிற்றில் இயமனையும் அடிமையாக ஆளுகின்ற வலிமையையுடைய விச்சுவன் அவதரித்திருக்கின்றான். அவன் தேவருலகை அர சாண்டு, பூமியிலுள்ளோர்க்கு உய்யும் வழியுணர்த்தும் பொருட்டு இங்கே தோன்றியவன். அவனால் இவ்வை யகம் இஞ்ஞான்று அனர்நீங்கி வாழ்கின்றது. அவனுக் குப் பகைவர் ஒருவருமிலர். காம்பின் மென்றோளி நின்புதல்வி சுயம்பிரபை அன்னோன் மருமமருவுமாயின் ஆம்பன்மலரும் அவிர்கதிர்த்திங்களுமாய் விளங்குவர். அவன் தங்கை சோதிமாலையோ சகலசற்குணாலயம்.

நம்பி தங்கை நகைமலர்க் கற்பகக்
கொம்பி னன்னவள் கொங்கணி கூந்தலாள்
அம்பி னீண்டரி சிந்திய மாக்கயல்
வம்பி னீண்டமை வாளெடுங் கண்ணினாள்.

கோதின் மாலைகள் மேற்குதி கொண்டெழு
கீத மாலைய கின்னர வண்டினம்
ஊதி மாலைய வாயுறை யுங்குழற்
சோதி மாலையென் பாள்சுடர்ப் பூணினாள்.

அவளோர் அங்கனாரத்தினம். அவ்விச்சுவனைச் சுயம்பிரபைக்கும் சோதிமாலையைத் தங்கள் குமாரன் அருக்ககீர்த்திக்கும் மணஞ்செய்வதே நன்றென்று சுதாகரன் சாற்றினான். அவனைக் கையமைத்துச் சடியரசனது தோழரில் ஒருவனான சுமந்திரி சொல்லுகின்றான்.

அரசனே! அச்சுவகண்டன் வயோதிகனாதலின் அவன் மனத்தால் நினைக்குந்தகையனுமன்று. அவன் சொற்படி நடப்பவராதலிற் பவச்சுதன்சொன்ன ஏனை இராசகுமாரர்களும் உரியரல்லர். பெண்ணலங்களிந் தொழுகாநின்ற தங்குமாரத்தி ஓர் அண்ணலங்களிற் றரசனை வதுவைபுரியாதிருப்பதும் பெருமையன்று. இவர்கள் யாவரினும் அதிகன் சுரேந்திரகாந்தத்தரச குமாரன். அவன் கடவுளர் தகைமையன். உலக வாழ்வை வெறுத்திருக்கின்றான். அவன் பிதா தன் மகனுடைய காரியங்களைச் சித்திரகூடத்திலுள்ள அருகக் கடவுளாலயஞ்சென்று அணிவிழவயர்ந்து, ஆண்டிருந்த அசோதரமுனிவனைவணங்கிக்கேட்ப, அம்முனிவன், இவன் முன் பங்கயப்பழனிவேலிப் பவகிரிபுரலுவன் சயசேனனுடைய மனைவி பிரீதிமதிபயந்த புதல்வன். மிக்க மதம்பாயும் யானையினும் வலியன். அன்னோன்பெயர் விசயபத்திரன். அவன் தவஞ்செய்து இவ்வுலக அரசாட்சியைத் துறந்து சாசாரம் என்னும்

இந்திரலோகமடைந்து, அவ்வுலகைப் பதினேழுகடற் ைெறுகை வருடமளவாக அரசாண்டு வந்தவன். அமரர் போகம் நுகர்ந்தவனுதலால் அவன் அரசர் செல்வத்தை விரும்பான். தவஞ்செய்து மேற்கதியையே அடைவானென்று அம்முனிவர் கூறினர். ஆதலால் அவன் நமக்கு வேண்டற்பாலனல்லன். அரசனே! இவைகளெல்லாவற்றையும் இனிவிடுத்து வார்பூட்டிய முரசங்களார்ப்ப வயிரொடு வளைகள் சப்திக்க அரசர் குழாங்கள் ஈண்டிமொய்க்கச் சுயம்வரம் என்றொன்று நாட்டினும் அவ்வச்சுவகண்டனே மணம்புரிவதன்றி வேறொருவர் துணிகலர். "யாமொன்றெண்ணத் தெய்வமொன்றெண்ணும்" என்னும் பழமொழிப்படி ஊழானது எவ்வாறு முடிக்கின்றதென்று நமக்குவிளங்காது. ஆயினும் நங்குலத்தார்க்கெல்லாம் முன்னுட்டொடங்கி இந்நாள்காறும் மேல் வருவனவற்றை ஆராய்ந்து சொல்லுகின்ற சதவிந்து நிமித்திகனிடைச் சென்று வினவில், அவன் இக்கன்னிகைக்கு நடக்க இருக்குங் காரியம் எவற்றையுஞ் சரியாய்ச் சொல்லுவானென்று சுமந்திரி உரைத்தான். ஏனை அமைச்சர்களும் இதுவே நல்ல புத்தி,

இந்திரனனையநீரோயினிப்பிறிதெண்ணல்வேண்டா
மந்திரநீளுமாயின்வருவனவறியலாகா
சந்திரன்றவழநீண்டதமணியச்சூலநெற்றி
யந்தரந்திவளுஞாயிற்கோயில்புக்கருளுகென்றா.

அரசன் அவர்கட்குச் செலவுகொடுத்து வண்டுந்தேனும் விண்டிசைபாட வீரக்கழல் ஆரவாரிக்க, அரமக

ளிர்கவரிவீசத் தன்கோயிலையடைந்தான். பொழுது உச்சிக்காலமாயிற்று. போசனஞ்செய்தானபின்னர்க் கன்னலங்கரங்கவி ஒலித்த நாழிகை அறிந்து மல்லிகை மாலைசூடிச சதவிந்து நிமித்திகனுடைய கிரகத்துக்குப் புதுமலரிதழ்கள் கொள்ளைகொள்ளையாய் அள்ளித்தூவிய வீதிமீது பாதசாரியாய்ப் போதலாயினன். அரசன் நடக்கவே வில்லுமிழ் மணிக்கழல் ஒல்லென்றொலித்தன. சுரும்புந்தேனுஞ் சரந்தொறும் இரைந்தெழுந்தன. மகரகுண்டலங்கள் பகபகென விட்டுவிட்டொளியுமிழ்ந்தன. எஃகமும் வாளமும் ஈட்டியும் ஏந்தினராய் மெய்காவலாளர் இருமருங்கும் நெருங்கி வந்தனர். இங்ஙனஞ்சென்று கரும்பினும் இன்மொழிக் காரிகையார் அரும்பவிழ் மருமலர்ச்சரங்களும் நிரம்பிய சுண்ணச்சாந்தும் பெரும்புயல் மாரிபோல வாரிவீச நிமித்திகனுடைய மாடநீள் மந்திரம் மலியப்புக்கனன். சதவிந்து கண்டு எங்குலம்விளங்க இங்கருளிவந்த கொங்கலந்தெரியலாய் கொற்றங்கொள்கென அரசனுக்கு ஆசிகூறி ஆசனத்திருத்தி வந்தகாரியம் யாதென வினவினன். அரசன் நிமித்திகனை வேறோர் மண்டபத்திற்கு அழைத்துப்போயினன். உழையர்கள் அரசன் குறிப்பறிந்து நீங்கினார்கள்.

சடியரசன் தன் கன்னிகையின் கருத்தைப்பற்றிக் கேட்க மனத்தில் நினைக்கவே நிமித்திகன் அதனைத் தன் சோதிட வல்லபத்துணர்ந்து அரசனை நோக்கி நுவல்கின்றான். அரசனே! தாங்கள் மனதில் நினைத்த விடயந் தங்கள் புதல்வியைக் குறித்ததேயாகும்,

தாங்கள் வரும்போது வீதியில் ஒரு பெண்கொடி எதிரில் வலங்கொண்டுவந்தாளே, அவள் இலக்குமி யேயாம், உமது கன்னியைப்பற்றிய சுபகாரியம் என் நாவினுற் சொல்லிமுடியாது, ஆதிநாளிலே அருகக் கடவுள் உயிர்களுக்காகச் சொல்லியருளிய புராணத் திலே இவளுக்குக் கணவனுகவரும் இராஜகுமாரனு டைய சரித்திரங் கூறப்பட்டிருக்கின்றதென்றனன். அரசன் மகிழ்ந்து என் கன்னிகைக்குக் கணவன்யார்? அவனுடைய சரிதம் எவ்வாறு சொல்லப்பட்டதென நிமித்திகன் உரைக்கின்றுன்.

அரசனே! அப்புராணத்துட் தீவுகளையும் அவற்றின் பெயரையும் இச்சம்புத்தீவின்கண்டங்களையும் வகுத்து இவற்றிற்கெல்லாம் உயர்ந்தது பரதகண்டமென்றும், அப்பரதகண்டம் போக பூமியாய் மூன்றாழியளவும் இருந்த பின்னளிலே பிரமர்கள் தோன்றிச் சூரியசந் திரர்முதலிய பிரபஞ்சங்களைப் படைத்தார்களென்றும் அம்மூன்றுவது ஊழி முடிவிலே மன்னுயிர் துயர்பல வுங்கெடச் சோதிமூர்த்தியாய் அருகக்கடவுள் தோன் றினரென்றும், அவர் அருள்வழிப்பட்டு அரசாண்ட வன் பரதன் என்றும், அப்பரதன் அருகக்கடவுளை வேண்டுதல் செய்து தனக்குப் பிற்கால நிகழ்வனவற் றைக்கேட்டபோது அவர் அவனை நோக்கி, யான் மு தலாக இருபத்துநால்வர் நாதர்கள், நீ முதலாகப் பன் னிருவர் அரசர்கள், கேசவர் முதலாக ஒன்பதின்மர் மாற்றலரென்றும், உன்மகன் மரீசியென்பவன் போத [illegible] ர் அரசனுவான், அவன் குலத்தில் ஒரு காளை

அவதரிப்பானென்றும், அவன் ஒரு கன்னிகையின் காரணமாக அச்சுவக்கிரீவன் பச்சுயிர் நுகர்ந்து அவன் கையாழியை ஏந்துவானென்றும், அவன் கேசவனென்றும், அவன்பெயர் திவிட்டனென்றும் பரதன் களிப்படையும்படி கடவுள்கூறினர் என்று புராணத்திலே சாற்றப்பட்டிருக்கின்றது ; மன்னவனே! அக்காலே சுவர்க்கநாட்டினை விடுத்துப் பூமியிற் போதனமாநகரத்தரசனுடைய இளையகுமாரனுகத் தோன்றியிருக்கின்முன் ; அக்குமாரனுடைய புயங்களைச் சேருதற்குரியவள் தங்கள் புதல்வியே. அவன் இவளை மணம்புரிந்தபின் அச்சுவகண்டனைச் சிரகண்டிதஞ்செய்து தங்களுக்கே உத்தரதக்கிணசேடிகள் இரண்டையும் அரசாளத் தருவானென்று நிமித்திகன் மொழிந்தனன். அரசன் பெருமகிழ்வடைந்தான்.

நிமித்திகன் பின்னும் அரசனை நோக்கி, அரசனே! யான் கூறியதற்கு அடையாளம் இன்னும் ஒரு மாதத்துள் அத்திவிட்டகுமாரன் ஒரு சீயத்தின் வாயைப் பிளப்பன், அதனையும் அறிகுதியென்று கூறினன். இதுகேட்ட அரசன் மேலும் மகிழ்வடைந்து அந்த நிமித்திகனுக்குச் சோதிமாலை என்னும் ஓர் ஊரை நல்கி, அவ்விடம் நீங்கிச் சூரியன் அத்தகிரிசெல்லத் தன் மனைவியாகிய வாயுவேகையிருக்கும் கோயிலையடைந்தான். அப்போது எதிர்கொண்டு தொழுத மனைவியை நோக்கித் தான் நிமித்திகனகத்துச் சென்றதும் அவன் தனக்குச் சொன்னவைகளையுந் தெரிவித்துத்,

தொக்கிள மலர்துதைவிலாதசோலையும்
புக்கிளந்தாமரைநகாதபொய்கையும்
மிக்கிளம்பிறைவிசும்பிலாதவந்தியும்
மக்களையிலாதநோர்மனையுமொக்குமே.

தலைமகன்றுடனக்காகச்சாகைய
நிலைமைகொண்மனைவியாநிமிர்ந்தபூந்துணர்
நலமிகுமக்களாமுதியர்தேன்களாக்
குலமிகுகற்பகங்குளிர்ந்துதோன்றுமே.

தகளிவாய்க்கொழுஞ்சுடர்தனித்துங்கோழிரு
ணிகளவாய்ப்பிளந்தகஞ்சுடரநிற்குமே
துகளிலாச்சுடர்மணிதுளும்புபூணினுய்
மகளெலாத்திசைகளுமலிரமன்னினுள்.

வலம்புரிவயிற்றிடைப்பிறந்தமாமணி
நலம்புரிபவித்திரமாகுநாமநீர்
பொலம்புரிமயிலனுய்பயந்தபூங்கொடி
குலம்புரிந்தவர்க்கெலாங்கோலமாகுமே.

மாவினைமருட்டியநோக்கினின்மகள்
பூவினுண்மடந்தைபொற்பூவைநாளொளித்
தேவனுக்கமிர்தமாந்தெய்வமாமென
வோவினூற்புரோகிதனுணரவோதினுன்.

இதுவெல்லாம் உன்னுலே எனக்குவந்த பெருமை
யென்று அரசனுரைத்தனன். வாயுவேகை தன்மனத்
துவகைபெருகித்தேம்பியும், ஒளிமுகிழ்முத்தொத்துத்
தோன்றிய நகையை அடக்கி அரசனைவணங்கி எம்பெ
ருமானே! இக்கன்னிகை தேவரீருடைய திருவருளி

ஞாலே தான் இத்தனை பெருமையடைந்தனள். தந்தையருடைய பெருமையே பிள்ளைகட்கு வருமன்றித் தாயால் ஆவதோர் பயன் உளதோவென்றனள். அரசன் கேட்டு மனமகிழ்ந்து புட்பசயனத்திலே பாயல் கொண்டு மறுநாட் காலையில் மகன் அருக்ககீர்த்தியையும் அமைச்சரையும் அழைத்துத் தான் முதனாட் புரோகிதனிடைச் சென்றதும் அவனுரைத்தவைகளுங் கூறித் தன் மகளுடைய திருவையும் அவளுக்கு வருந் திவிட்டகுமாரனுடைய புகழையுஞ் சொன்னான்.

கேட்ட மந்திரிமார் மகாராசனே! இக்கன்னிகை தெய்வமாதென்பதற்கோரையமில்லை. இனிமேல் அத் திவிட்டகுமாரன் தந்தை பயாபதியரசன் மாட்டோர் தூதனை அனுப்புவதே முறையாகும். சகலநூல்களையுங் கற்றவனுங், கற்றவரைத் தொடுத்த வினாவிற்கு அடுத்தவிடை கொடுப்பவனும் மரீசி என்பவனே. அவனைத் தூதாக அனுப்பினால் அவன் எல்லாக்காரியங்களையுங் குலமுதல் வரலாற்றையுஞ் சொல்லவல்லனென்றுதேற்றினர். சடியரசன் மரீசியை அழைத்து அவன்கையிற் றன்கையெழுத்தால் ஒரு திருமுகம் வரைந்துகொடுத்து ஆவனவற்றையுங் கூறியனுப்பினான். மரீசியுந் தன்கோமகன் அடியிணையை முடியிற் சூடித் திருமுகங்கைக்கொண்டு விசும்பாறுகச்சென்று சுரமைநாட்டைச்சேர்ந்த போதனமாநகர்க்கடுத்த புட்பமாகாண்டமென்னுஞ் சோலையில் இறங்கினான்.

# தூதுவிடுசருக்கம்.

இங்ஙனம் பொழிலிடத்திறங்கியமரீசி இனிய மருக் கமழத், தேன்மாரிபொழிந்தாற்போல மதுவொழுக, அக்காவினகத்து மலர்மலிர்ந்துநிற்கும் வகுளந், தேமா, நாகம், புன்கு, சந்தனஞ், சண்பகங், குரா, மரா, இருப்பை, புன்னை முதலிய பாதவங்களின் மேதகவை யும், மல்லிகை, முல்லை, அனிச்சம், மாதவி, கொகுடி, ஓடை முதலிய தட்பமிக்க புட்பங்களின் ஒட்பத்தை யுங் காவின் வளத்தையுங் கண்டுமகிழ்ந்து, ஆண்டுள்ள தோர் பொய்கையை அடைந்து அதன் மனோக்கியத் தை நோக்கினன். அப்பொய்கையானது கரையோடு பொருகின்ற திவலைப்பனிநீரைத் தன் திரைக்கரங்க ளால் அவனுக்குத் தெளித்து, அயல் மரக்கிளைகளான் வியல் மலரிதழ்களை அவன்மிசைத்தூவிச், சுரும்பினங் களினால் அரும்பண்பாடி, இளந்தென்றலை உளங்களி கொள அனுப்பி மரீசியை உபசரித்தது. ஆண்டோர் அசோகமரம் நின்றது. அப்பிண்டியின் நீழலில் அன் னோன் புக்கு அதனடியில் இயற்றப்பட்ட மணிச்சிலா தலத்தைக் கண்ணுற்றான். பிரசாபதியரசன் ஏழுநாளைக் குமுன் ஆங்குக் காவலிருக்கவைத்த துருமகாந்தன் மரீசியை வரக்கண்டு அவன் பாதங்களில் மலர்தூஉய் வணங்கி மேடையைக்காண்பித்து அதன்மிசை இருக்க என்றுரைக்க, விஞ்சையன் இதனை மனுடர் இருக்கும் இடமென்று யான் கருதவில்லை, நம்மடிகளாகிய அரு கக்கடவுள் வீற்றிருத்தற்காம் இடமென்று கருதுகின்

றேன் என்றான் துருமகாந்தன் அப்படியன்று, ஒரு வன் நம்மரசன் பிரசாபதியின் இளையபுதல்வன் திவிட்டனுக்கு மணம்பேசி ஏழுநாளைக்குள் ஒரு திருமுகங் கொண்டு இப்பொழிலிடை வருவானென்று அங்கத புரோகிதன் அரசற்கு உரைத்தமையால், அவன் நம் வரவைநோக்க அடியேனை ஈங்கிருத்தி நமக்காகவே இச்சிலாதலத்தையும் இயற்றினனென்றுசொல்ல, மரீசி அப்படியாவென்றுசொல்லி அதிலிவர்ந்திருந்தனன்.

இவனிவ்வாறிருக்க இதனையறிந்த அரசன் அவன் வழி இளைப்பை நடனகீதங்களால் ஆற்றுமினென்று வயந்தமாதிலகை, கல்யாணிகை, வியந்தசேனை, கமலமாலைதை என்னுங் கணிகையர் நால்வரை அனுப்பினன். பூந்தட்டிற் பனிநீர் சந்தனக்குழம்பு சிற்றுண்டி பேருண்டி முதலிய பதார்த்தங்களை உழையர் கொண்டுவர, அவர்கள் நால்வரும் அன்னம்போல நடந்துவந்தார்கள். அவர்கள்வரும் பவனியையும் உல்லாசத்தையும் நோக்கிய மரீசி இதுவே அமரருலகு இவர்களே அரமாதர்களென்று கருதினனிருப்ப, அம் மடவார் நால்வருந் தாஞ்செய்யும் பக்கப்பார்வை சிறுநகைவிளைத்தல் முதலிய விநோதங்களைவிட்டு அடிமைகள்போன்ற ஒற்கத்தோடு அவன் முன்னிலையில் நின்று, அவனது முடிதொடங்கி அடிகாறும் பனிநீர் சிதறிச் சந்தனக்குழம்பணிந்து நறுமலர்மாலைசூட்டித் தாங் கொண்டுபோந்த சிற்றுண்டிபேருண்டிகளை நுகர்வித்தார்கள். விஞ்சையன் இவ்வரிய உபசாரங்களை அங்கீகரித்து இன்புற்றிருக்குந் தருணத்

ந்த பிரசாபதி மகாராசனுடைய உத்தரவின்படி விசய திவிட்டராகிய இராசகுமாரர்கள் இருவரும் இரதகச துரகபதாதிகள் சூழ, மடவார் கவரிவீச, வெண்மதி யுங் கருங்கொண்மூவும் ஒரு செம்பொன்மலையின் மீது இவர்ந்து வந்தாற்போல அரசயானையின்மீது ஆரோகணித்து, முன்னும் பின்னும் வலமும் வாமமும், பாடுவாரும் ஆடுவாரும் பல்லாண்டுகூறி வாழ்த்து வாரும் வணங்குவாருங் கெழும, அச்சோலையிடத்து வந்து, மரீசி இருந்த அசோகமரத்தை அணுகினார் கள். அப்பொழுது,

ஆர்த்தபல்லியக்குழாமதிர்த்தகுஞ்சரக்குழாந்
தேர்த்தவீரர்தேர்க்குழாந்திசைத்தபல்சனக்குழாம்
போர்த்தசாமரக்குழாம்புதைத்தவெண்கொடிக்குழாம்
வேர்த்தவேந்தர்பல்குழாம்விரைந்தகூந்தன்மாக்குழாம்.

இங்ஙனம் அரசகுமாரர் வந்ததும் மரீசி இருக்கைவிட் டெழுந்து அஞ்சலிசெய்தனன். அப்பொழுது அரச குமாரர்களில் மூத்தவனை விசயன் ஐய! நீர் எல்லா நற்குணங்களையும் உடையீர், எங்கட்குக் குரவராயும் இருக்கின்றீர் ; ஆக, நீர் எங்களை வணங்கியது யாது காரணத்தாலென்று வினவினான். விஞ்சையன் அக்கு மாரர்களின் பாதாதிகேச சாமுத்திரிகாலக்கணங்களை உற்றுநோக்கி விண்ணுலகம் ஒரீஇ மண்ணுலகம் மரீஇய அற்புத குமாரர்களே! நும்மையும் எம்மை யும் ஒப்பிட்டுப்பார்க்கிற், சூரியன்முன்னே சந்திரன் நின்றாற்போல யாம் அழகு குறையப்பெறுவமன்றி

மேலாமாறில்லை ; நீவிர் தேவவடிவையொழித்துவிட்டு னுடரூபங்கொண்டு வந்தீரேனும், இன்னுந் தேகங்களே! ஆதலால் நுமது திருவடிகளை வணங்கப்பெற்ற நவர்களே பூருவசனனத்திற் புண்ணியஞ்செய்; நும் மென்றுசொல்லி மீண்டுந் தொழுதனன். அப்பெவே து குமாரர்களிருவரும் இனி நுங் கையாறு அமைமீ நும்மை எந்தை அழைத்துவரச்சொன்னார், ஆதலால இவ்வியானையின்மீது இவர்மினென்றேற்றிக்கொண்டு, நானுவித தூரியங்கோஷிக்கவும் மங்கையர் செம்பொற் சுண்ணஞ்சிதறி வாழ்த்தவும் அரண்மனைவாயிலில் வந்தார்கள். அஃதறிந்து வாயில்காவலன் அரசனுக்கு அறிவித்தான். அரசன் பொன்மாலை முத்துமாலைநாற்றி ஒப்பனைசெய்த நீர்மையான் அருவிதூங்குங் குளிர் மணிக்குன்றம் போன்றதோர் பொன்மண்டபத்திற் சென்று வீற்றிருந்து, தன்குமாரர்களையும் விஞ்சையனையும் உள்ளேவரும்படி அனுமதியருளிச்செய்தான். இவர்களும் மண்டபத்திற்சென்றனர். விஞ்சையன் கன்னவிரோளினுன் றன் கழலடியைத் தொழுதுநிற்ப, அரசன் அவனுக்கோர் ஆசனங்காட்டி அதன்மீது உட்காரவைத்து யோகக்ஷேமம் விசாரிக்கும்போது, அம்பரசரன் எழுந்து தனதரசனுடைய வெள்ளிமலைத்திசையைநோக்கி வணங்கி, அரக்குமுத்திரையிட்ட திருமுகத்தை நீட்டினன். அரசன்குறிப்பினுல், ஆங்குநின்ற லேககன் ஒருவன்சென்று, அதனைவாங்கி, முத்திரையைநீக்கி அத்திருமுகப் பாசுரத்தை முன்னொருமுறை தான் மனதில் வாசித்துப்பார்த்துப் பழகிக்கொண்டு பின் அரசன் எதிரே வாசிப்பானாயினன்.

ந்து அதுவருமாறு ; போதனமாநகரத்தரசன் காண்க. விஞ்சையர் உலகை ஆளும் இரதநூபுரமன்னன் எழு

புங் ரசற்குச் செல்வமும் மேன்மையும் மன்பதையும் இவ கோங்குக. என்னுடைய புதல்வி சௌபாக்கியவதி சுயம்பிரபை தமது இளையபுதல்வன் செல்வச்சிரஞ்சீவி திவிட்டகுமாரனுக்கு மனைவியாக நியமிக்கப்பட்டாள். ஆதலால் மருமகளை அழைத்துத் தம் மகற்கு மணஞ் செய்திடுக. இன்று தொடங்கி அக்கன்னிகை தமக்கே உரியளன்றி எமக்குரியளல்லள். தாமும் மணமகனும் அவளும் நீடூழிவாழ்க, என்பதே.

இது வாசித்ததைக்கேட்ட அரசன் மிகப்பிரமித்து, வித்தியாதரர் எம்மிலும் உயர்ந்தவரன்றே? அவ்வாறாக, இவன் நம்மிடத்து மணம்பேசிவிட்டது பேரதிசயமாயிற்றென்று சிறிதுநேரம் ஒன்றும் பேசாதிருந்தனன். அப்பொழுது விஞ்சையன் நம் அரசன் திருமுகத்தை இவன் நன்கு மதித்திலனென்று கொதித்த மனத்தனாய் அதி உக்கிரத்துடன் கூறுவான்.

நரபதியே! யாவராயினும் மனிதரிடம் ஒரு கருமம் வேண்டித் தாமாகமொழிவராயின் அவர் மனிதரால் இகழப்படுவர்போலும். இஃது உலகவார்த்தை. தேவராயினுந் தம்மோடு நட்புக்கொண்டால் அவரையும் மனிதர்கள் தமக்கு நிகராகவே நினைப்பார்கள். இது மனுடரதியல்பு. இதற்குப் பிரமாணம் யான் இன்று நும்மிடத்துக் கண்டேன். பித்தநோயினாற் சுவையி

ழந்திருப்பார்க்குப் பாலைக்கொடுத்தாலும் அவர்க அதன் சுவையை அறியார். அதுபோல விஞ்ஞ ருடைய செல்வத்தைப் பொள்ளல்யாக்கையையு மனுடர் அறிவது எங்ஙன்? அறத்தின்வழியொழு மனத்தினையுடையார்க்கன்றித் தீவினையில் அழுந் வர்க்குப் பிறவியை வேரறுக்கும் ஞானக்காட்சி டைத்தற்பாலதோ! வித்தியாதரர் இருக்கப்பெற்று விளங்குகின்ற ஸ்தானத்தின் மேம்பாட்டை நித்தி மறவியில் உழன்று மயங்கும் மனிதர்க்கு உணர்த் லாமா? மதகளிற்றின் ஆற்றல் அஃதடமுரிந்துவீழ்ந்த மரத்தின் குழைகளைத்தின்று திரியுங் கயந்தலைக்குத் தெரியுமா? எம்மவர் மகத்துவம் இந்நிலத்தவர்க்கு வரங்கிடந்தாலும் வருமா? மண்ணுலகிற் சிறந்தவர் தாமுந் தக்கதுணர்வாரலர். அரசனே! இரசதகிரி எங்கோன் நின்னிடம் ஒரு தூதனுப்பியபடியாலோ நீ அவனை இகழ்ந்து ஒரு மாற்றமும் வழங்காதிருந்தனை என்று மிகு வெகுளியுடன் கழறினன். இங்ஙனங் கூறியன கேட்ட அரசன் அவனைநோக்கி, ஐய! யான் வாளா இருந்தமையால் நும்மரசன் வார்த்தையை அலட்சியம்பண்ணினேனென்று நினைவற்க. உலகத்து வாழும் மானுடருக்கு விஞ்சையர் செல்வங் கிடைப் பது அரிது. அது வேண்டுமாயின் அநேககாலம் அருந்தவமியற்றிப் பெறற்பாலது. நீர் கூறியவாறே பொள்ளல்யாக்கையையுடைய நமக்கு அஃது அகப் படாது? நீவிர் கொணர்ந்த திருமுகப்பாசுரத்திற் குத்தக யாது ஒதுவதென்று அறியாதிருந்தேனன்றி வேறன்றென்றான். மரீசி பொறையினுற் பெரியன்

பூபன், சிறியன் யானேயென்று நாணிக், கோபந்த ணிந்து என்னபாவம்! அரசன் கருத்தை அறியாது இங்ஙனங் குரூரவார்த்தைகள் பேசினேனேயென்று துக்கித்து, அரசனைநோக்கி மகாராசனே! மலைச்சிகர வாசிகளாகிய வித்தியாதரர் தமது விஞ்சையினாலே மேலானவர்களன்றி வேறொன்றானும் மேலோரல்லர். அவர்களும் மனிதர்களே! அதனைக்கேளுமென்று சொலலவாரம்பித்தான்.

மன்னனே! யான் பவபுரம்என்னும் நகரத்தை அர சாளும் பவனவேகராசன் மனைவி வாயுவேகை என் பாளோடு ஒரு வயிற்றுதித்தவன். என்பெயர் மரீசி, என்தந்தைபெயர் (அளவில்லாத கல்வி கேள்விகளையு டைய) அஞ்சுமான், தாய்பெயர் அருசிமாலை. கலைமகள் பொருவும் அப்பெருமகளினால் யான் அநேக நூல்க ளைக் கற்றுள்ளேன். அவற்றுள் உலகசரித்திரமனைத் தும் ஓதி ஆதிகாலந்தொடங்கி இந்நாள்காறும் உல கை அரசாள்வார் தொடர்ச்சியெல்லாம் ஆதியோடந் தமாக அறிந்திருக்கின்றேன். அவ்வரலாற்றைத் தெ ரியச்சொல்லுகின்றேன். விட்டுவிட்டொளிரும் வயிரத் திலதம் வீற்றிருக்கப்பெற்ற திருமுடியணிந்த செல்வ வேந்தனே! கேட்பீராக.

ஆதிகாலத்தில் அரசகுலம் ஐந்தையும் உண்டாக்கி அவற்றிற்குரிய ஒழுக்கத்தையும் அமைத்தருளிய நம் பெருமான் திருவடிவழியொழுகி நீதி தவறாது உலகு புரந்த காசிநாட்டரசன் கச்சனென்றொருவன் இருந்

தான். அவன் மனைவி பெயர் சுதஞ்சனை. அவ்விரு வருக்கும் பிறந்த குமாரன் இராசசிங்கமாகிய நமி என்பவன். அவன் அரசவாழ்வில் உதாசீனனாய், அறக் கடவுளாகிய நம்பெருமான் திருவடிக்கண் அன்பு வைத்து, அவரது தியானச்சோதியையுடையவனாய், அக்கடவுண்மேல்,

அலகிலாஞானத்தகத்தடங்கநுங்கி
உலகெலாநின்னுளொளித்தாயுநீயே
ஒளித்தாயுநீயேயுயிர்க்கெலாங்கண்ணாய்
அளித்தாயுங்காத்தாயுநீயேவாழியறவேந்தே.

அழலுறும்வெங்கதிரோனணவலராது
நிழலுறுமூர்த்தியாய்நின்றாயுநீயே
நின்றாயுநீயேநிறைபொருளெல்லைக்கட்
சென்றாயும்வென்றாயுநீயேவாழிதிருமாலே.

நிறைதருகேவலத்தோய்நின்னடியார்க்கெல்லாங்
குறைதலிலின்பங்கொடுப்பாயுநீயே
கொடுப்பாயுநீயேயெங்குற்றேவல்வேண்டாய்
விடுத்தாயுநீத்தாயுநீயேவென்றபெருமானே.

என்று கீதம்பாடினன். பாடக்கேட்ட குறிஞ்சியும் இறைஞ்சின. விலங்கு சாதிகள் தலம்பெயராது நின்றன. ஆகாயத்துப் பறவைகள் வாகாய் அம்பரிடைத் தம்பித்தன. கின்னரர்கள் தந்நிலையில் மெய்ம்மறந்தனர். வானவர் போனகங் காணுமிழ்தமாயினது.

அதேவேலையிற் பன்னகலோக மன்னவனை ஆயிரம்பணமுடி ஆதிசேடனும் ஆங்கடைந்து பரமன்

பாதத்தை வலம்வந்து வணங்கிக்கொண்டிருந்தான். அவன் அருகக்கடவுளின் ஆணையால் அரசனைநோக்கி நீ நம் அறக்கடவுளைத் துதிக்கின்றாய், உனக்கு வேண்டியது என்னென்று வினவ, அதுகேட்ட அரசன் சுவாமீ! விண்ணுலகத்துள்ளவர்கள் தாம் வேண்டிய வேண்டியாங்குப் பெறுமாறுபோல யானும் மண்ணுலகத்திற் பெறுதற்கான செல்வத்தை அளிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். ஆதிசேடன் அவனுக்குத் தேவனாதற்குரிய மந்திரமும் மணியும் வெள்ளிமலையுங் கொடுத்து வேந்தனாய் என்றும் இரு என்றருளித் தன்னுலகெய்தினன். அந்த நமிகுலத்திற்றோன்றியவனாதலின் நம்மரசனும் மனிதனே! நீயிருஞ் செல்வத்தினாலும் பெருமையினாலும் நம்மரசனை நிகர்ப்பீர். ஆதலால் நீவிர் இருவருங் கலத்தல் பாலும் நெய்யுங் கலந்தாற்போல ஆகும் எனக்கூறினன்.

அரசனுடைய புரோகிதன் விஞ்சையனை நோக்கி, நுங்குலத்தொடர்ச்சி கூறினிர். நங்குலத்தொடர்பினை யான் கூறுவல் கேட்டருளுகவென்றுரைக்கின்றான். ஆதிகாலத்தே உலகமெல்லாம் எவனதோ, அவை எவையும் எவனால் ஆக்கப்பட்டதோ, அவற்றை எவன் பகுத்துவைத்தானோ, எவனால் அவையாவும் வணக்கப்பட்டதோ, திரு எவனது மார்பைச்சேர்ந்து அதன் பொறியாயினளோ, எவன் நம்மைப் புண்ணிய லோகம் மேவுவானெனினோ அவனது திருவருளால் உதித்தவன் மரகத மலைபோல இலங்குஞ் சோதிபொருந்திய வாகுவலி என்னும் அரசன். அவன் இருந்து

உலகோம்பி உண்டாக்கிய அரசநீதிநூலையே இற்றை வரையும் அரசர்கள் கற்று அரசாள்கின்றனர். அவ்வ ரசன் தன் இறைத்தொழிலை மகனுக்கீந்து தான் கயி லைக்கட்சென்று திண்ணிய தியானுக்கினி சுடர்விட்டுத் திகழப், பாதத்திற் பற்றியெழுந்த புற்றுக்களிற் கரும்பெரும் பாம்புகள்பயில, வல்லிகள் பொழின்ம ரக்கட் கோழரையென அவன்மீது படரக், குஞ்சியிலே குருவிக்குழாங்கள் குடியேற, நினைத்தற்கரிய கொடுந் தவமியற்றித் தேவர்க்கதிபனாயினான். அவ்வாகுவலி யின் குலத்தவனே நம் அரசன் என்று கூறினன்.

ஆங்கிருந்த வேந்தர் யாரும் இருகுடித்தொடரும் கேட்டு மயிர் சிலிர்ப்ப ஆனந்தக் கண்ணீர் சொரிய அரசனைப் புகழ்ந்தனர். அரசன் வாயெடாமுன் இது கேட்ட கேசரன் அப்படி அரிய தவஞ்செய்த வாகு வலி என்னும் நுங்குல அரசன் நங்குல நிருபனாகிய கச்சன் என்பவனுக்கு மருகனென்று புராணநூலில் உரைத்திருப்பது யான் அறிவேன். இருகுலமும் ஒத் திருக்கையால் அதிக மகிழ்ச்சியடைந்தேன் என்றான்.

அப்போது அரசன் மிகக் களிப்புற்று இறைவனை மனத்தால்வணங்கி வாழ்த்திச் சொல்லுவான். உலக நூல்களுங் குலங்களுங் குலமுறையும் அறிந்தோர் நின்னிகர்வாரிலர். இராச சொரூபம் ஓர் எந்திரம், அதன் கண்கள் மந்திரக்கிழவர், தாள்கள் பிள்ளைகள், இருபுயமுந் தோழர், ஒற்றர் செவிகள், உணர்வு நூல், வாய் தூது. அதில் அமைச்சருக்கு ஒதிய நீதிகளும்

அமைந்து நின்றுனொருவன் தூதனுயில் அவன் சொல்லமாட்டாத சூழ்ச்சியிலது. என்னென்று சம்பவித்தபோதிலும் அரசனைத்தேற்றி அததற்கேற்ற உபாயந்தெரிந்து அறிவுகொளுத்தல் பிறரால் முடியுமோ? இவ்விலக்கணமுடைய நின்னைத் தூதாகப்பெற்ற மன்னன் தான் கருதியதெதனைப் பெறமாட்டான். நீநம்பாற் தூதனாக வந்ததும் யாம் இப்பிறப்பிற்பெற்ற பயன். இனி யான் யாதும் ஓதல் அனுவசியம். நும் அரசற்கு இன்றுதொடங்கி என்மகார் அடிக்குற்றேவலர்களே. வேண்டுமாயின் அவர்களை அழைத்துத் தம் பணிவிடைகள் செய்வித்தலில் எனக்கு யாதுந் தடையில்லை என்றனன். மரீசியுங் களிப்படைந்து யான் இனி உத்தரவுபெற்றுக்கொள்ளுவலெனக் கேட்கப் பயாபதி அவனை அன்றைக்கு அங்கேதரிக்கச்செய்து, தன்னகரத்துள்ள வேடிக்கைகளைக்காட்டி மற்றநாள் அவனுக்கு எண்ணிறந்த ஆபரணாதிகள்கொடுத்து வேறும் வேண்டிய சிறப்புக்கள்செய்து முதியோருடன் வழிகூட்டி அனுப்பினன். மரீசியுந் தென்றிசைச்சேடி அரசன் சுவலனசடியின் நகரத்தையடைந்தான்.

# சீயவதைச்சருக்கம்.

மரீசி இரதநூபுரநகரை அடைந்து, அந்நகரரண் மனைக்கோயிலின் வாயில் மூன்றையுங் கடந்து, தன் அரசனைக்கண்டு வணங்கி, அரசன் கைச்சமிக்கையி னால் ஓர் ஆசனத்தில் இருந்தனன். மரீசியின் முகப் பொலிவினாலே அவன் சென்ற காரியஞ் சித்தியடைந்த தென்று அரசன் அனுமித்தான். மரீசி அவனைநோக்கி அரசனே! தேவரீருடைய திருவடிகள் நீடூழிவாழ்க வென வாழ்த்திப், பின் தான்போய்ப் புட்பமாகாண்ட மென்னும் பொழிலில் இறங்கியதும், வண்டினங்களி ரைத்துகக்கண்டு வண்சிறைப்புள்ளினம் வாய்விட்டொ லிப்பதோர் பொய்கைக்கரை சார்ந்ததும், நித்திலம் நிரைத்து வெள்ளிவேய்ந்த பத்திகள்பொருந்திய சித் திரப்பலகை வேதிகைகளை அண்டையிலுடைய பிண் டிமரத்தைக்கண்டதும், அசோகமரத்தடியிற் பொன் னினிழல் மண்ணில்விழ அமைக்கப்பட்ட சிலாதலந் தன் கண்ணைக்கவர்ந்ததுந், துருமகாந்தன்வந்து தன் னை அதன்மீது வீற்றுவைகுக எனப்புகன்று அச்சிலா தலவரலாறு கூறியதும், அரசனேவலால் அணங்கனை யார் சிலர் அஃ்டமங்கலத்தோடுஞ் சோடசோபசாரத் தோடுந் தன்னிடம் வந்ததும், இராசகுமாரரிருவரும் எதிர்கொண்டேகுந்து வேந்தனதனுமதியுரைத்துத் தன் னை அழைத்ததுந், தான் இளங்கருங் கைம்மாவின் களந்தரும் மொய்மெரிங் இவர்ந்து இராசசபையடைந் ததும, மன்னனை கழல்வணங்கி அன்னவன் அளித்த

தோராசனத்தமர்ந்து தன் இறையை மனத்தாற் றொழுது பொன்னிறப்பொறித் திருமுகமீந்ததும், ஓலை வாசகங்கேட்டதே அவன் விம்மிதத்தனாய் ஒருமொழியுங் கொடாது மோனியாயிருந்ததுந், தான் சினந்து அவனை இகழ்ந்துரைகூற அவன் தன் மெய்ந்நிலை புகன்று நன்மொழிபகர்ந்ததும், பொற்குவால் பொலிய ஈந்து தனக்குச் சிறப்பருளிச்செய்ததும், அருங்கலம் ஒளிருந் தேவிமார் பெயர்ந்து தன்னைத் தரிசித்ததும், மற்றுளோர் அங்கு உரைத்தவார்த்தைகளுந், தான் அரசன் அனுமதிபெற்றுத் திரும்பியதும் ஒன்றுந்தவறாமற் சொல்லியதுமன்றி, அவ்வரசனது பெருமையையும் அவனுலகுகாக்கும் ஆற்றலையும் அவனது நற்குணமுதலியவற்றையும் புகழ்ந்து, அவ்வரசகுமாரர்கள் இருவர் அழகையும் மிகவியந்துகூறி, இளைய புதல்வனை திவிட்டனுடைய மார்பகத்திற் சேர்தற்கு நங்குலமங்கை என்ன தவஞ் செய்தாளோ அறிகிலேன், அவனுக்கு நம் நங்கையும் நம் நங்கைக்கு அவனுமேயன்றி வேறிலர், இவ்விரண்டு குலமுஞ்செய்த புண்ணியம் புணர்த்தவாவென்று மகிழ்ந்தான். இவ்வாறு கூறி ஆனந்தித்த மரீசிக்கு இறப்பச் சிறப்பளித்து அவனை அவன் மனைக்கேகும்படி அனுப்பிச் சுவலனசடி யாம் இனிச் செய்வது யாதெனத் தன் மந்திரிமாரோடு உசாவ, அவர்கள் அரசனே! நிமித்திகனாகிய சதவிந்து இன்னும் ஒரு மாதத்தில் அத்திவிட்டன ஒரு சிங்கத்தின் வாயைப் பிளப்பான் என்று கூறியிருத்தலால் யாம் ஒரு தூதனைப் பூமிக்கனுப்பி அவன் கூறிய அவதியளவும் அங்கிருக்கும்படி செய்வதே நல்

லதென்று கூறினர். இதுகேட்ட அரசன் அவர் கருத்தின்படியே ஒரு தூதனையனுப்பினன். இஃது இவ்வளவில் நிற்க உத்தரசேடி அரசன் அச்சுவகண்டன் ஊரில் நடந்த சமாசாரங்களை இனிக் கூறுவாம்.

இவ்வச்சுவகண்டன், தனம்பயார் கூறும் பகைவர் நடுங்கும்படி அவர்களை வென்றும், அநேக மங்கைமார்களை வதுவைசெய்தும் இன்புற்றிருக்கும் நாளில் நிலமடந்தை அவனோடே அவனை நீங்கும் அற்றம் பார்த்திருந்தாள். அப்படியிருக்கும்போது அவன் புரோகிதனாகிய சதவிந்து, அரசனை அடைந்து மன்னனே! அரசர்க்கு உட்பகையென்று சொல்லத்தகுவனவாய காமம் முதலிய அறுபகையையும் வென்ற அரசரைப் பின்வெல்லும் பகைவர் வேறின்று. அவர் வாழும் ஊர் எப்பொழுதும் பொன் மழையே பெய்து கொண்டிருக்கும். அவ்வாறன்றி முற்கூறிய அறுபகையையும் வெல்லாது அநீதிபுரிவானாயின், நிலமகள் அவனைவிட்டு நீங்க முயலுவாள். ஒருவன் காம முதலியவற்றுற் களிகூருமிடத்து அவைகளினாலே முன்பு கெட்டவர்களை எண்ணுகவென்று தருமநூலிற் கூறப்பட்டிருக்கின்றது. நீதிவழியினின்றும் அரசாளுதலை நீர் நன்கு அறிகுதிர். என்மீது கோபமுறினுந் தங்கட்கு யான் சொல்லவேண்டிய காரியம் ஒன்றுளது என்று நிமித்திகன்சொல்ல அரசனுஞ் செவிதாழ்த்திக் கூறுதியென்றனன்.

நிமித்திகன் அரசனே! பூமியிற் போதன மாநகரமென்றோர் நகருளது. அந்நகரரசற்கு இரண்டு புதல்

வர் உளர். அவருள் இளைய குமாரனே நமக்கு அரும் பகையாமென்பதோர் புன்சொல் நிமித்தம் எனக்குப் புலப்பட அஃது அடியேற்கு மிகவும் மனவிசனத்தைக் கொடுக்கையால் அதற்கேற்றவைகளை ஆலோசித்து அறியக்கடவீரென்றான். அதைக் கேட்டு நச்சரவ மன்னன் நச்சரையரசன் சபாசு! நன்றாயிருக்கிறது! பூமியிற் புழுக்களாம் மானிடரா நம்மை வெல்லுவ ரென நீ சொல்லியதென்று நக்குக், கையோடு கை தட்டி உரைப்பானாயினான். ஆலவட்டத்தெழுங் காற்றி னால் மகமேரு துளங்குமோ? பெரியமலையையும் பிளக் கத்தக்க மதயானைக்கொம்பு வாழைத்தண்டில் ஊன் றினால் மழுங்குமோ? பிரசண்டமாருதந் தாக்கும் போழ்து சிறியமேகக்கூட்டம் அதனெதிர் நிற்குமோ? தானவர் தானையை அட்ட என் பருத்த புயங்கள் மனி தனுக்குப் பயப்படுமோ? உன்நிமித்தநூல் பொய்ச்சலா மென்றே கருதவேண்டும். யான் அஞ்சுவதேற்றுக் கெனின், மந்திரிமார்களுடைய சொல்லைக் கேட்டா னல்லன் என்னும் பழிமொழி ஒன்றற்கே. வேறொன் றற்கும் அஞ்சுகில்லேன். ஆதலால் இதனை மந்திரி மாரிடஞ் சொல்லி, அதற்கேற்றபடி நீ ஆலோசனை பண்ணுகவென்று அனுப்பினான். இவ்வாறு அரசன் கூறியதனை நிமித்திகனால் அறிந்த மந்திரிமார் யாவ ரும் ஒருங்குகூடி இங்ஙனம் ஆலோசிப்பாராயினர்.

நெருப்புச் சிறிதாயினுந் தனக்கு ஒரு பற்றுக்கோ டுண்டாய்க் கனலுமாயின் ஊரையுஞ் சுடும். அது போலப் பகையுஞ் சிறிதாக இருப்பினுங் காலம் இடம்

வாய்த்துழி வென்றுவிடும். ஆதலால் அப்பகை புலப்பட்டபொழுதே அடக்காவிடின், நச்சுமரத்தை முளையிலே களையாமற் காழ்ப்பேறவிட்டாற் குடாரத்தினுந் தறித்தல் இயலாததுபோல, இப்பகையும் முற்றினுல் நம்மை வென்றுமேற்படும். அதனை இப்போதே அடக்கிவிடல் வேண்டுமென்றனர். அத்தீர்மானத்தைக்கேட்ட முதன்மந்திரியாகிய அரிமஞ்சு அரசனை நோக்கி, மகாராசனே! இவர்கள் கூறிய எல்லாந்தேறிய ஆறே ஆயினும், யாம் அதற்குமுன் செய்வனவுஞ் சிலவுள. நிமித்திகனுற் கூறப்பட்ட அம்மனுடர் நமக்குப் பகைவர்தாமோ அன்றோ எனத் தெரிந்த பின்பே அதற்கேற்ற ஆலோசனை செய்யவேண்டும். அஃதன்றி ஆலோசியாது சிநேகிதரைப் பகைவரெனக் கருதுதலும், பகைவரை நண்பரெனப்போற்றுதலும், பின்னர்ப் பெரியதோர் இழுக்கைத் தரும்.

நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுதல் - தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

ஆதலால் யாம் இப்பொழுது சுரமைநாட்டதிபதியிடத்துத் திறைவாங்கிவரும்படி சிலரை ஏவுவோம். அவ்வரசன் அவர்களை எதிர்கொண்டு திறைகொடுப்பானுயின் அவனிடைக் குற்றமொன்றும் இன்றாகும். திறைகொடாதொழியில் அஃதுடையனுகக் கொள்வோம் என்று உரைத்தனன்.

அச்சுவகண்டனும் அதற்கிசைந்து தூதரைநோக்கிப் பயாபதியிடஞ் சென்று திறைவாங்கி வம்மினென்று அநுமதிசெய்து திருமுகமுங் கொடுத்தனுப்பினன். செம்மெழுகூட்டிய கோலினராயும், இருமுகம்பொறி வைத்தெழுதிய திருமுகம்பரித்த கையினராயும், நாட்டியமுணர்ந்தவராயும் நால்வர் வித்தியாதரர் தமதுத் தரசேடியை நீங்கித் தக்கிணசேடியையுங் கடந்து எல்லையற உயர்ந்த கோபுரத்தையுடைய போதனத்தை அடைந்தார்கள். அடைந்து இராசகோயிலின் வாயிலிற்புகுந்து அந்நகரவீதிகளையும் அரதனமாளிகைகளையுங் கண்டபின் விஞ்சையர்செல்வமும் ஒருசெல்வமோவென்று வெறுப்புற்றனர். அந்நகரமாக்கள் அணிந்துநீத்த மணியும் மாலையுந் தெருக்களை மூடிக்கிடத்தலிற் கால்வைத்துச் சேறலரிதாய் இடர்ப்பட்டனர். விஞ்சையருரை அரசாளும் அச்சுவகண்டனுடைய தமராஞேர் சிலர் வாசலில்வந்து நிற்கின்றனர் என்று அரசற்குத்தெரிவிப்பான் ஆண்டுநிற்கும் வாயிலாளனை வேண்டினர். வாயில்காவலன் உள்புக்கு அதனையறிவிக்க, அரசன் அவர்களை உள்ளேவருமாறு உத்தரவு செய்தான். அவர்கள் சென்று அரசனைவணங்கி அச்சுவகண்டன் வரைந்த திருமுகத்தை ஈந்தனர். அவ்வோலையை இலேககன் ஒருவன் வாங்கி வாசித்தவுடனே அச்சுவகண்டனுடைய தமராய்வந்த நால்வரும் அவ்வாசகத்துக்கேற்கத் தம் வாயினாலும் "ஆயிரங்கோடிபொன்னும், நாடகக்கணிகையரான நங்கைமார் ஆயிரவரும், சங்கராசியுஞ், சங்குகளீன்ற முத்துக்குவாலும், பவளத்திரளும், அழகிய பீதாம்பரம் முதலிய

ஆடைகளும், வெள்ளிகளும், முத்தங்களையுடைய யானை மருப்புக்களும், வெண்சாமரைகளும் இன்னும் இங்குள்ளவேறு நூதனமான பலபண்டங்களுந் தந்தனுப்புக. இஃது எம்முறையன்று. அரசனுடைய கட்டளையென்றார்கள்.

இதனைக்கேட்ட பிரசாபதி வேறொருவன் எறிந்த கல்லைப் புறத்தே நீக்காமற் காதினுள்ளே அடக்கி வைக்கின்றயானைபோலத் தன மனத்திடையடக்கிப், புகையும் மனமுடையனாய்ச் சிந்திப்பான். நல்லறிவும், நற்குணமும், நற்கீர்த்தியும், நற்கல்வியும், நல்லழகும் ஒத்திருத்தலால் ஒருவராலும் பழிக்கப்படாத பெருந்தகைமையுடையவராயினும், அவரும் வேறொருவன் கூறுவகேட்டும் அன்னோன்பணிபுரிந்தும் வாழ்வுறுதற்கு இறைவன் அமைத்துவைத்தனன். அதுவேயுமன்றித், தன்மதியினாலே அநேகம் முயற்சிகள் செய்து சம்பாதித்த பொருளைத் தான் அநுபவிப்பேன் என்றிருக்குங்கால் அதனைப் பறித்து வேறொருவன் கைப்படநீட்டும் விதியை யாவரால் விலக்கமுடியும்? தன்னினும் மிக்கபுகழையுடைய வேறொருவனைச் சந்தோஷப்படுத்தி வாழ்வேனென்றிருக்கும் அற்ப அரசன் என்னைக்காட்டினும்வேறியாவனுளனென்று இன்னோரன்னவற்றையெல்லாம் மனதில் ஆலோசித்து, முற்சனனத்தில் யாஞ்செய்த தீவினைப்பயன் இவ்வாறாயின் நாம் பிறிதுகருமங்களைச் சிந்தித்து ஆவதென்னை? அதுவுமன்றி இந்த விஞ்சையராசனுக்கு நம்மேலோருந் திறைகொடுத்தே அரசாண்டனரென்று கேள்வி

யுற்றிருக்கின்றோமே என்று தன் கருத்திடை இருத்தித் தன்முன்னேநின்ற விஞ்சையரைநோக்கி, இவ்விடத்துள்ள பொருட்களை யாந் தரப் பெற்றுக்கொண்டு சென்று அவைகளையும் நம்முடைய வாயிற் பிறக்கும் இன்சொல்லையும் நும்மரசற்குக் கொடுங்கள் என்று சொல்லிப், பின்பு புதல்வர் இதனை அறியிற் கோபஞ் செய்வார்களென்று இவர்களை விரைவில் அனுப்பக் கருதி, அச்சுவகண்டன் எழுதியபடி பேரழகுள்ளவர்களும் நடனம் முதலியவற்றில் அதிக வல்லமையுடையோருமாகிய நாடகக்கணிகையர் ஆயிரவரையும் மிக்க ஒளியையுடைய சாதிப்பவளங்களையுஞ் சங்கின்ற முத்துக்களையும் அகிற் கட்டைகளையும் யானைக் கோடுகளையுஞ் சாமரைகளையும் அச்சுவகண்டன் உவக்கும்படி கொடுத்து, விஞ்சையர் அனந்தரம் அந்தரவழிப் போமாறு விடைகொடுக்கலாயினன். அவர் தமது விமானத்தில் அப்பொருள்களையுங் கணிகையர்களையும் ஏற்றிக் கவழிகையால் விமானத்தை மறைக்குந் தருணத்தில், அரசகுமாரராகிய விசயதிவிட்டர் அதனைக்கண்டனர். இளையவன் திவிட்டன் அங்கு நின்றவர்களைநோக்கி, இவர்கள் யார்? இங்கே நடந்தது என்ன? என்றுவினவ, அதற்கு அச்சத்தால் ஒருவரும் உத்தரஞ் செப்பாதிருந்தனர். அப்போது அவ்விடத்துநின்ற பூதம்போல்வாள் ஒருத்தி குறமகள் "ஐயனே! விஞ்சையர் ஊரை ஆளும் அச்சுவகண்டன் திறைதரவேண்டுமென்று சிலரை அனுப்ப, நம் அரசன் திறை கொடுத்தருளினன். இதுவே இங்குநடந்தது" என்று மிக்க வணக்கத்துடனே கூறினள்.

அதைக் கேட்டதே திவிட்டன் மனத்தில் அளவடங்காத கோபம் மூண்டது. முடித்தலையிருந்து முத்துக்கள் உதிர்ந்ததென்ன நெற்றியிலே கோபத்தாற் சிறுவியர்ப்புண்டாயிற்று. அக்கோபாக்கினியினால் உடல் உருகினாற்போலக் கண்களும் நீர் சொரிந்தன. விரிந்த படத்திடை அரதன சதனத்தில் எறிகல்லுப்பட்டாற் கோபிக்கும் அரவத்தைப்போலக் கனலாநின்ற வதனத்தோடு, கண்களினின்றும் பொறிப்பறக்கச் சிரித்து உறுக்கினான். உலகத்திற் பயிர்த்தொழில்செய்து சீவனம்பண்ணி அரசரை வழிபட்டிருக்கும் ஏழைக்குடிகள்போல யாமும் வேறொருவற்கு அடிப்பட்டிருந்து அவன்கேட்ட திறைகொடுத்து வாழ்வேமாயின், நமது அரசவாழ்க்கை நல்லழகாய் இருந்ததேயென்றுரைத்து விஞ்சையரைநோக்கி, மயக்கத்தையுடைய விஞ்சையர்களே! யாங்கள் எந்நாளினும் உங்களுக்குத் திறைதந்து வாழ்கில் வாழலாம், அன்றேல் உயிர்வாழ்வில்லையெனில், எங்களுடைய புயங்களினாலும் எமது வலிமையினாலும் எங் கையிலுள்ள வாட்படையினாலும் யாதுபயன் அடையக் கருதியிருக்கின்றேம். நும்மரசன் விடமுடையரவின் படநடுமணியைக் கைக்கொளக்கருதிய மடமை உடையன். பொருளின்மேல் விருப்புடையனாயின், இப்படிப்பட்ட செருக்கினாற் பொருள் கவர்தல் இனி அரிது அரிது. நீவிர் முன்னிருந்த ஏழைகளை ஆழியால் வெருட்டிக் கப்பங்கவர்ந்தாற்போல நம்மையும் வெருட்டித் திறைவாங்கக் கருதாது உயிர்வாழும் நல்வழியறிந்து வாழக்கடவீர். அன்றெனின் நும்மரசன் வறிதாக ஆங்கிருந்

தென்பயன்? ஈங்குவந்தால் அவன் விரும்பிய அளவு பாஞேபசாரஞ் செய்து விண்ணுலகையும் அரசாளக் கொடுப்பேன் என்றின்ஞோரன்ன மொழிகளை எடுத்துக் கழறிப் பின்னும் ஒருவார்த்தை சொல்கின்ருன். தூதர்களே! ஒருவனைக் காணுத இடத்தில் இகழ்தலிற் பிரயோசனமென்னை? நீவிர்சென்று நும்மரசனுக்கு அவர்கள் கப்பந்தருதல் இனித்தம்மால் இயலாதென்றும், பாகுடம் இருதார்க்குப் பார்த்திவன் இயற்றுந் தண்டம் எவையோ அவைக்கெல்லாந் தாம் ஈடாகின்ருேமென்றுந், தம்முடைய இக்குறையை அரசனுக்குத் தெரிவியுங்களென்றும் வேண்டிக்கொண்டார்கள் என இயம்புமினென்று வந்ததூதரும் நொந்து அஞ்சுமாறு கூறிஞன். அவர்கள் அச்சமடைந்து நாணி இனி நம் அரசனுக்கு இப்பகை வலிதாய் முற்றிய தென நினைத்துத் தம்மூர் நோக்கிச்சென்ருர்கள்.

போனவர்கள் அரசனுழைச் சேறற்கு அச்சமுடையராய்ச் சமயங்கட்குத் தக்கன ஆய்ந்தறியும் விவேகத்தினையுடைய அரிமஞ்சுவைக் கண்டு வணங்கித் தாங்கள் போதனமாநகர்க்குச் சென்றதும், பிரசாபதி ஈந்த மங்கையர்முதலிய நிதிகளைமீட்டு இளையகுமாரன் திவிட்டன் தங்களுடன் சினந்து கண்களிற் தீப்பொறிபறக்கக் கூறியதுஞ் சொன்ஞர்கள். அதைக் கேட்டு அரிமஞ்சு என்பான் இதனை நம்மிறைவன் கேட்கிற் சிறிதும் பொறுக்கமாட்டனே! இப்பகையை வெல்லுதற்கு உபாயமென்னவென்று சற்றே ஆலோசித்துத், திவிட்டன் மிக இளையவனுதலின் தக்கதிது,

தகாததிதென்று ஆலோசிக்காமல் நேர்ந்தவாறேபே சினன், நான் இன்றோர் மாயஞ்செய்து அவனை மலை யில் இருக்குஞ் சிங்கத்திற்கு இரை கொடுக்கிறேன் என்றுரைத்து, அரிகேதுவென்னும் வித்தியாதரனை ஆண்டு அழைத்து, நடந்த வர்த்தமானங்களைக் கூறி, நீ ஒரு மாயச்சீய வடிவங்கொள்ளுதியென்று ஏவிச், செய்யவேண்டுவனவற்றையும் அவனுக்கு உணர்த்தி னன். அவ்வேளையில் அரிகேது அக்கினிச் சுவாலை யை ஒழுங்குபடுத்திவிட்டாற்போலும் உளையினையும், மலையையுங் கிழித்துப் பிளக்கும் வலிய உகிரையும், இளம்பிறையென்ன ஒளிகாலும் எயிற்றினையும், கன லுமிழுங் கண்களையும், இடியேறும் அஞ்ச அதிரும் பகுவாயினையுமுடையதாய் மிகு பராக்கிரமங்கொண் டதோர் தெரிமாவுருவந்தாங்கி, அவ்விடத்தினின்று நீங்கி, இமையவரையையுங் கடந்து சுரமைநாட்டை யடைந்து, மண்கலங்கவும் விண்குலுங்கவும் வரையி டியவுங் கடலுடையவும் மகா உக்கிரத்தோடு நின்று கெர்ச்சித்தான். காடு அதிர்ந்து பொடியாயிற்று. மிரு கங்கள் மயங்கி வீழ்ந்தன. யானைகள் அடிபதறிப் பிடிகளொடு பிளிறின. அடைகற்கள் புடைபதர் போல மடையிடிந்து புரண்டுண்டன. மனிதர் உரு மேறுண்ட கட்செவி நிகர உட்கிச்சோர்ந்துகிடந்தனர்.

இங்ஙனம் அரிகேதுவை மிருகராசனாகிச் செல்ல அனுப்பியபின்னர், அரிமஞ்சு போதனத்திறைவனிடந் திறைவாங்கச் சொல்லியனுப்பிய தூதரை அழைத்து, நீவிர்சென்று இங்கே நடந்த காரியங்களைத் திவிட்

டனுக்கு அறிவியுங்களென்று சொல்லியனுப்பினான். அவர்கள் ஆகாயமார்க்கமாய் இழிந்துவந்து சிந்துநாட்டிற்சேர்ந்து போதனமாநகரையடைந்து இராசகுமாரர்கள் இருவருஞ் சேனைகள் சூழப் பவனிவரும்பொழுது அவர்களைவணங்கித் திவிட்டனைநோக்கிச் சொல்வாராயினர். ஓ! ராசகுமாரனே! எம்மரசற்கு நுந்தை தந்த திறையினைத் தாங்கள் நகைந்த செயலையும் பகர்ந்த மொழியையும் நாஞ் சென்று அரசனிடந் தெரித்தபோதே, அவன் சிரித்து, மிகநன்று மிகநன்று என்று உருத்தனன். பின்னர் நாங்கள் அவ்வரசகாளை மிகக் குழந்தைப் பருவத்தினனென்று உரைத்ததாற், தன்னுடைய புயபல பராக்கிரமத்தையும் ஆணையின் மதிப்பையும் பரித்துத், தான் ஒரு சிறுவனோடு பகைத்தல் தக்கதன்றெனுங்கருத்துப் புக்கமனத்தனாகிக், கொண்டசினம் விண்டகல, எம்மைநோக்கி நீர்போய், நமக்குக்கொடுத்த திறையைமறித்த சிறியனைக்கண்டு உன்னாட்டையழிப்பான் ஒரு வயப்புலியை இயக்குதும், வலியையாகில் அதனை நலிஇப் பொலிமதி என்று சொலீஇய பணித்தனன் என்றார்கள்.

உடனே திவிட்டன் கண்சிவந்து, இருபுயமும் பொருமுபெழ, ஆங்கு நின்றவரைநோக்கி, இவர் சொற்றபடி நமது நாட்டின்மாட்டோர் நகாயுதம் புகாநின்றதோ என்று வினவினன். அவர்கள் கைகூப்பி ஐயனே! தங்கள் சுரமைநாட்டின்கண், யாவருந் தாவுதற்கரிய வலிமையுடையதாய், உயிர்களைச் செயிர்ப்ப அயிலும் ஒரு கோளரிவந்து, நமது பருவதமுழையுட் டிரிதரு

கின்றதென்றார்கள். திவிட்டன் வித்தகரைநோக்கி யான் என் கையினால் அச்சியம் வீய அதன் வாயைப் பிளப்பல். அங்ஙனம் அதன் முழைஞ்சுறழும் வாயைப் பிளவாவிடின் நும்மரசன் கூறியபடி பேய்மகன் ஆவே னென்றுசொல்லித், தன்னுழைநின்ற சதுரங்கசேனை யில் யாருந் தன்னுடன் வரலாகாதென்று அனுப்பி விட்டுத், தான் தனியே புறப்பட்டான். கடல்வண்ண னை திவிட்டன் தனியே சேறலைக்கண்ட தமயன் தானுவது கூடச்செல்லக் கருதி வலித்துப் போகத் திவிட்டன் தந்தை கவான்மிசையுங் கம்பலக்குவான் மிசையும் பட்டத்துவாமிசையும் பட்டதன்றி நிலம்ப டாத சேவடிகளிற் பருக்கைக்கற்கள் எருக்கி உறுத்த நடந்து, பஞ்சானனஞ் சஞ்சரிக்கும் வெஞ்சாரல் வரைக்கு அஞ்சாது அணியனானான்.

வீரனைக்காண்டலும், அவ்வயப்போத்து உலகமெல் லாம் நடுங்க மலைகள் பிளக்கத் துறுகற்கள் பிதிராக ஒருதரம் ஆர்த்திடித்தது. திவிட்டகாளையும் வீரக்கழு லைச் சிக்கெனவரித்து, அத்தகடகங்களைத் தோளிற் பரித்துக், குஞ்சியைத் தொடர்கொண்டுதிரித்து நின் று, தானும் ஒருகால் உரத்தார்ப்பரித்தான். அவ்வொ லியைக் கேட்டதே மாயவேடங்கொண்டு சேயதாய் மேபகாளி தன் காயம் பனிக்க ஓட்டெடுத்தது. அப் போது இளையகாளை முடங்குளை எங்கேபோகிறதென் று கெர்ச்சித்து, இமயசயலமுந் திக்குகளும் ஆகாய முங் கிடுகிடென நடுங்கக் கடும்விசைகொடு தொடரன் மீயினன். அவ்விசையினால,

கழலங்கார்த்திலகால்களுநிலமுறுமுடங்கா
அழலுஞ்செஞ்சுடர்க்கடகக்கையவைபுடைபெயரா
குழலுங்குஞ்சியுமாலையுங்கொளுவியதொடரும்
எழிலுந்தோளிலுமெருத்திலுங்கிடந்திலவெழுந்தே.

மரங்கள்வேரொடுங்கீழ்ந்தெனவளிதொடர்ந்தெழுந்
நிரந்தமான்களும்பறவையுநிலங்கொண்டுபதைத்த
அரங்கொள்வெம்பரலணிவரைக்கொடுமுடியவைசாம்
உரங்கொடோளவன்விரனுங்கியுறவுடைந்தொழிந்த.

வனதேவதை கூத்தாடினது, கண்டீரமாய் அண்டிய கேசரன் பண்டொருகேசரி கொண்டவாசமாகிய மலை முழையுழைப்போய் மாயையால் மறைந்து ஒளித்துக் கொண்டான். திவிட்டனது ஆரவாரத்தாலும் நிலக் கம்பத்தினாலும் மலையினது அதிர்ச்சியினாலும் அம்மு ழையுள் உறைந்த அரியரசு தன்றுயினீங்கி எழுந்தது. அஃது எழுந்தபோது திவிட்டன் முழையின் எதிரே போய்க் கொடும்புலியே! இருள்கெழுமிவ் வரைமு ழையகத்து ஏன் ஒளித்துக்கொண்டாய்? நான் இம் மலையைப் பிளந்து உன்னைக் கொலைபுரிவேனென்று ஆர்த்தனன். விலங்கலிலும் எதிரொலி அதிரலாயிற் று. ஆரவாரமுழக்கத்தைக்கேட்டு மடங்கலும் அடங் காத கோபமூளக் கண்கள்சிவக்க எழுந்து ஒருதரங் கர்ச்சித்தது. அப்போது மலை வெடித்தது. பிலம் பிளந்தது. அதன் கண்ணின்கனலாலும் எயிற்றினொ ளியாலும் அவ்விடத்திருள் நீங்கிற்று. இவ்வாறார்த் துக் கோபித்த மாபுலியானது எழுந்து திவிட்டராசன் உதிரத்தைக் குடிக்கும்படி அவன் மார்பிலே பாய்ந்

தது. விசும்பினர் உடல்பனித்தனர். திவிட்டன் அத
னுடையபிடரிற்பாய்ந்து மிதித்து, அதன் வாயிலுள்ள
வளைந்த தந்தங்களிலே பிடித்ததே, அறுகு கிழிந்து
பொழ்களாய் விழுந்தது. அமரர்கள் தத்தமவாயின்
மேல் விரல்வைத்துப் பிரமித்து நின்றனர். இங்ஙனங்
கோளரியைக்கிழித்த உரவோன்தமயன் விசயனுழைச்
சென்று, அடிகாள்! ஆளிமாளப் பிளந்தெறிந்தனன்.
இனி நாம் போதனமாபுரத்துக்குச் செல்வோம், வரு
வீராமின் என்று வணங்கினன். விசயன் தன் தம்பி
யுடைய பேராற்றலைக்கண்டு மகிழ்வடைந்து, தம்பீ!
யாம் இம்மலைச்சாரலின் சிறப்புக்களைப்பார்த்துப் பின்
னர் ஊருக்குச்சேறுமென்றுசொல்லித் திவிட்டனையுங்
கூட்டிக்கொண்டு, அச்சாரலிலுள்ள சிறப்புக்களையெல்
லாங்காட்டிச், சுரமைநாடணைந்து,

கற்றவர்கடவட்டானஞ்சேர்ந்தவர்களை கணில்லார்
அற்றவரந்தணாளரன்றியுமனையநீரார்க்
குற்றதோரிடுக்கண்வந்தாலுதவுதற்குரித்தன்றுயிற்
பெற்றவிவ்வுடம்புதன்னாற்பெறும்பயனில்லைமன்னே.

மன்னுயிர்வருத்தங்கண்டும்வாழ்வதேவலிக்குமாயில்
அன்னவனாண்மையாவதலிபெற்றவழகுபோலாம் [னும்
என்னையான்கொடுத்தும்வையத்திடுக்கணோய்கெடுப்பனென்
நின்னையேபோலுநீரார்நிலமிசைநிலவிநின்றார்.

புலாலுடம்பு புகழுடம்பென யாக்கை இரண்டு, புலா
லுடம்பு அழிந்துபோவது, மற்றையது என்றும் நிற்ப
தென்று திவிட்டனைப் புகழ்ந்துகொண்டு செல்லுமவ

விற் சூரியன் அத்தமயமாயினன். இவர்களுந் தங்கள் நகர்கண்டு மகிழ்சிறந்தனர். அச்சமயத்தில் இம்மன்னவ குமாரரை, அநேகம் யானைகள் குதிரைகள் தேர்கள் பதாதிகள் சூழ மந்திரிமார் முதலியோர் எதிர்கொண்டு, அந்நகரை வலஞ்செய்வித்துக் கோயிலின் முன்னர் வந்தனர். பிரசாபதி இவர்களைத் தன்னரண்மனைக்கு அழைத்துவரும்படி கட்டளையிட, அவ்விருவரும் பிதாவின் உத்தரவின்றிச் செய்ததினலே தங்கள்மேல் யாது குற்றம் விளையுமோ தெரியாதென்ற அச்சத்தோடு அரசன் அடியில்வீழ்ந்து வணங்கினர் அரசன் இருவரையும் எடுத்து, இரண்டு தோளினும இறுகப்புல்லிக் குஞ்சிகளில் வனத்துகள் செறிந்திருத்தலைப் பார்த்துப், புதல்வர்களே! நும்முடைய சிகையிலே துகள்செறிந்ததென்னவென்றுவினவ, மூத்தகுமாரன் விசயன்சொல்வானுயினன். பிதாவே! போற்றி! நம்முடைய நாட்டைச்சூழ்ந்த காட்டை ஒருகாளி வந்து பாழாக்கியது. அதனை அச்சுவகண்டனுடையதூதர்கள் வந்து அறிவிக்கத் தம்பி திவிட்டன் சென்று அவ்வட்புலியைப் பிளந்து கொன்றனன். இவனோடு அடியேனும் இமயமலைச்சாரலிற் சென்றேன். அதனாற்றன் துகள்செறிந்ததென்று சொல்ல, அரசன் எல்லையற்ற மனக்குளிர்ச்சியடைந்து, புதல்வரைநோக்கி, நீங்கள் இனி உங்கள் கோயில்சென்று பள்ளிகொள்ளுங்களென்றுரைத்தான். அவர்களுந் துயிலிடம் புக்குத் தத்தம சயனங்களிற் பள்ளிகொண்டார்கள்.

# கலியாணச்சருக்கம்.

செங்கண்மால்சிங்கம்வென்றுசெழுமலர்த்திலதக்கண்ணி
திங்கண்மாவண்ணனோடெந்திருநகர்பெயர்ந்தபின்னைத்
அங்கண்மாற்குரியநங்கையரும்பெறலவட்குத்தாதை
வெங்கண்மால்களிறன்னான்றன்றிறமினிவிளம்பலுற்றேன்.

ஈங்கு இவர்கள் இவ்வாறிருக்க ஆங்குச் சுயம்பிரபை தந்தை சுவலனசடி, திவிட்டன் சிங்கத்தைக்கொன்ற வரலாறெல்லாந் தன்தூதுவன்வந்து சொல்லக்கேட்டு, உவகைக்கடலுண்மூழ்கித் தன் தமராயினாரோடு ஆலோசித்து இனி என்மகளை அவ்வரசகுமாரனுக்கே விவாகஞ்செய்து கொடுப்பனென்று தீர்மானித்தான். அப்படிக் கடிமணஞ்செய்து கொடுத்தற்குத், தான் பூவுலகத்தினுக்குச் செல்லவேண்டுமென்று மனதில் நினைத்து, வருத்தமானத்து மன்னன் பிரீதிவர்த்தனன், கந்தருவநகரத்தரசன் விருககடி, கந்தமாதன வேந்தன் திவாகரதேவன், சக்கிரவாளசக்கிரி வச்சிரதாடன், தேவரவனகாவலன் கிரமியதரன், வியயகூடபுரவலன் வேகமாரதன், கிருதமாதனதராபதி கருடாங்கதன், சோபனநகரபூபதி சித்திரதரன் இவர்கள் எண்மரையும் அழைத்து, யான் வருமளவும் நீவிர் இரதநூபுரநகரத்தைக் காவல்செய்மினென்று நிறீஇப், பின்னர்த் தன்மாட்டு நின்ற வேயினோரைநோக்கி நமது நால்வகைச் சேனைகளையும் பண்ணுறுத்துங்களென்று கட்டளையிட்டனன். அப்படியே அவர்கள் சேனைகளை அலங்கரித்தார்கள். அரசன் இளவல் சுலனரதனும்,

மருகன் அரிபுரபொருநன் வியாக்கிரரதனும், மகன் அருக்ககீர்த்தியுஞ் சதுரங்கசேனைகள் சூழத் தத்தம வாகனங்களில் ஏறிவந்துசேர்ந்தனர். அரசன் தன் மகள் ஏறிச்சேறற்காக ஒரு விமானத்தை அலங்கரிப் பித்தான். அது பொன்னினாலும் மணியினாலும் பொலிந்து அந்தரலோகமுதல் இந்திரலோகம்வரைக்குஞ் சுந்தரசோதி பொழிந்து, மண்ணினும் விண்ணினும் இதற்குநிகரில்லையென்னும்படி சித்திரம்வல்லோரால் இயற்றப்பட்டது. அதனைக்கண்ட விஞ்சையராசன் தன் மகளை ஆங்குவரும்படி அருளிச்செய்தனன். கன்னிமாடத்தைக் காக்கின்ற சேடியர்கள் அவளிடஞ் சென்று அரசன்கட்டளையை அறிவிக்கச், சுயம்பிரபை பஞ்சணையினின்றும் இழிந்து அனேகம் பெண்கள் பொன்னனையார் தன்னைச் சூழ்ந்துவர, அன்னப்பெடையும் இவளிடம் நடைகற்றறகுமென மென்மெல நடந்து, பாவையர்கள் காவல்செய்து நிற்குங் கன்னிமாடங்களின் வாயில்களைக் கடந்துசென்று, தன் நற்றாயாகிய வாயுவேகை உறையுங் கோயிலின்கண்ணே தன்னுடைய செவிலித்தாய் முதலிய ஐவகைத்தாயரோடும்போய், மாதாவினது பாதாரவிந்தங்களை நமஸ்கரித்தனள். அப்பொழுது வாயுவேகை மகளைத் தன் இருகரங்களாலும் எடுத்து மார்போடு இறுகத்தழுவி உச்சிமோந்து உவகைக்கடலுண்மூழ்கிப், பாரமான பூஷணங்களை அணியின் அவள்கொடியிடை வருந்துமென்று, ஒளிமிளிரும் இலகுவான இரத்தினாபரணங்கள் பூட்டிக், கண்ணுக்கு மைதீட்டி, அவளது மனங் குளிரப் பலப்பல அலங்காராதியசெய்து, தன்மாடத்

தே வைத்திருக்கச், சுவலனசடி நிமித்திகர் உரைத்த சுபமுகூர்த்தஞ் சேர்ந்தமையால் மகளை விமானத்தில் இனி இனிதேறுக என்று அருளிச்செய்தான். சுயம்பிரபை தனது பாராட்டுந்தாய் ஊட்டுந்தாய் முலைத்தாய் கைத்தாய் செவிலித்தாயென்னும ஐவகைத் தாயரும் மெய்விடாதுசூழ்ந்துவர அரம்பையரனையார் பிரம்புபற்றி வாயில்காக்கும் மகளிர் தன்னைக் காவல் செய்யத், தான் வளர்த்த கிளி நாகணவாயாதியவற்றோடும் பூந்தட்டு ஆபரணப்பெட்டி பீதாம்பரமஞ்சிகை சந்தனக்கிண்ணம் வாசனைக் குப்பிகளோடும் அந்த விசித்திர விமானத்தில் இவர்ந்தாள். எஞ்சவில் சேனைகள்சூழ விஞ்ஞையரரசனும் முரசு சங்கம் கொம்பு காகளம் முதலிய வாத்தியங்கள் கோஷிக்க அரசயானையின்மீது ஆரோகணித்தனன். இவ்வாறனைவரும் தத்தம ஊர்திகளில் ஏறி, ஆகாய மார்க்கமாகக் கடல்கிளர்ந்தாற்போலச் செல்லும்போது சுயம்பிரபைக்கு அவள் தோழி அமிர்தபிரபை பாதையிலுள்ள நூதனங்களைக் காட்டி, இஃதின்னது இஃதின்னது என்று கூறுகின்றாள்

நங்காய்! இக் கங்காநதி நமது இரசகிரிமேலுள்ள இரணியவரைச் சாரலினின்று வருவதாகும். இதன் கரையன அரியன கற்பகக்காவுகளென்று காண்மதி. ஆகாயாயனமாய் ஏகாநின்ற நமக்கு அவை சிறியன போற் தோன்றினும் அங்கணோர்க்கு மங்குன்மேலெழுந்து நம் வங்கமலையையும் பங்கஞ் செய்வதுபோலத் தோன்றும். இக்கங்கை,

இரைக்கு மஞ்சிறைப் பறவைக ளெனப்பெய
ரினவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமக் குழம்புகொண் டெதிர்ந்தெழு
நுடங்கிய விலையத்தாற்
றிரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத
திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடற் றிரையொடும்
பொருதல தவியாதே.

அதே திவ்வியமலையிற் பிறந்து, இதன் சவ்வியத்தில் நம் மலைமுழைப் பெயர்வது செழுங்கலங்களைச் சிந்து கின்ற சிந்துநதியென்று அறிமின். பொன்னுறழு மின்பிறழுந் தன் திரையாகிய கரதலத்தால் நுரையா கிய பந்துகளை அடித்து அந்தம் விளையாட்டிழைப்ப தைப் பார்மன். அஃது,

உயருஞ் சந்தனப் பொழிலலைத் தொளிர்மணிக்
கலங்களை யுமிழ்ந்திட்டுப்
பெயருந் தெண்டிரைப் பிறங்கலுட் பிணங்கிய
பெருவரை யகிறேக்கி
வயிர வேதிகை மலைவது கோபுர
வாய்தலின் படிநீண்டி
அயிரை வார்கரைக் குடகடற் றிரையொடும்
பொருதல தவியாதே.

தேனையும் பாலையும் நெய்யையுஞ் சேரக்கலந்தாற் போன்ற சின்மொழியையும் பிறைபுரையுஞ் சிறுநுத லையுமுடைய செல்வமே! முகிற்படலமிசை நஞ்சேனை செல்லக் கருக்கொண்ட மேகங்கள் அதிரக்கேட்டுத் தங்கன்றுகளைக் காத்துக்கொண்டிருக்குங் [illegible]

Dr U. V. SWAMINATHA IYER LIBRARY

புரையுங் கானயானைகள் கனன்று கோபிப்பதைக்
கவனி. அமிர்தம் நிகரும் மொழியையும் அலங்கல் திக
ழும் அளகத்தையுமுடைய நம் அரிவையே! நம்முன்
பொருப்பெனப் பொலிவன மருப்பினையுடைய வேழங்
களென்றுகருது. அவைகள் மலைத்தடங்களைக் குத்தி
இடந்துவிளையாட அம்மலைகள் பிளந்து, இருபுறமுஞ்
சரிந்து, ஆபரணப்பேழைகள் கவிழ்ந்ததொப்ப, ஒளி
வீசும்மணிகளை இறப்பச் சொரியுஞ் சிறப்பை நோக்
குக. பசியகண்ணையுஞ் சிவந்தமுகத்தையும் பருத்த
துதிக்கையையுமுடைய பகடுகள் தம்பக்கலிலே பிடிக்
கணம் அடுத்துவர, மலையருவிகளைத் தமது தடக்கை
யினாற் புடைத்து, நீராடிச், செங்கற்றாள்களைத் தங்
கன்னத்தெறியக், குங்குமப்பொடியென அவை சிகரங்
களிற் படிந்து இலங்குறும் அலங்கிருதியைப் பொற்
கொடிபோலச் சிற்றிடைதிவளும் விற்பனமயிலே
கண்ணுறுமதிபிற.

இவ்வாறு உழையவள் வழியிலுள்ள வளங்களைக்
காட்டிவர யாவருங் கெடிலநதியின்தீர்த்தம் நிறைந்த
வயல்கள்சூழ்ந்த சுரமைநாட்டிற் புகுந்து போதன
மாநகரின்கட் திருநிலையகம் என்னுஞ் சோலையினில்
இறங்கித், தம்யானைகளை மரங்களினுங், குதிரைகளைப்
பந்திகளினுந், தேர்களைக் கொட்டில்களினுஞ் சேர்த்
துத், தாம் உறையும்படி பலவகை மண்டபங்களையுஞ்;
சுயம்பிரபையிருக்க ஒரு கன்னிமாடத்தையும் இயற்றி
னார்கள். இராசகுமாரி விமானம்விட்டிறங்கிப் பிதா
உத்தரவினாற் தன்கன்னிமாடஞ் சேர்ந்திருந்தாள்.

இவர்கள் ஈங்கிருக்க, முன்னர் இந்நகர்க்கு மன்னன் பாற் றூதுவந்தமரீசி இராசமண்டபம்புகுந்து, வேந் தனை வணங்கி, இவர்கள் வந்திருப்பதை அறிவித் தான். பிரசாபதி வியப்படைந்து உடம்பு பூரித்து மருங்குநின்றோரை நோக்கி, இந்நகரிலுள்ளசனங்கள் எல்லாரும் புதிதாய ஆபரணங்கள் வஸ்திரங்களை அணிந்துக, நகர்முழுதையும் அலங்காரஞ்செய்க, எங் குந் தோரணநாற்றுக, பூரணகும்பங்கள் நிறைக்குக, யாசகர்கள் தங்கடங்களுக்கு ஆசையான அளவு இரு நிதிபெறுதற்கு வருக, மற்றையரசர்களை அழைத் தற்கு ஒற்றர்கள் ஏகுக, சினகரக் கடவுளின் சினக ரத்தில் அனவரதம் உற்சவம் ஆகுக, திருநிலையகத்து இறங்கியிருக்கும் இராசகுமாரியைக்காணச் சேறற் குரிய மகளிரெல்லாந் தம்மைக்கோலஞ் செய்க; அப் பெண்கள் ஏறிச் சேறற்குப் பிடிகளைப் பண்ணுறுத் துக, என்று கட்டளையிட்டான். பின்னர்த் தன்னருகு நின்ற மரீசியை நோக்கி நீ என்னுடனேகூட நம்பா டிக்குவருக என்றருளி, மாளிகையிற் புகுந்து, அவ னுக்கு வேண்டுவன வழங்கி, மந்திரிகளையழைத்து விஞ்சையராசனுக்குத் தான்செய்யற்பால மரியாதை யாதென்று வினவினன். அவர்கள் அரசனைநோக்கி மகாராசனே! குலத்தினும் நலத்தினுங் குணத் தினும் பணத்தினும் நிகரானவர், வலிமையால் மேற்பட்டவர். அவருக்கு எவ்வகைப்பட்ட மரியா தையும் வரையாது புரிக. யாது இயற்றினும் ஏதமா காதென்றோதினர். மந்திரிகள் இவைகூற அரசனும் விஞ்சையராசன் தன் மகளை இங்கே மணஞ்செய்தற்

பொருட்டுக் கொண்டெப்தினமையானும், நற்குண மும் நல்லறிவுமுள்ள நீங்கள் எனக்கு அமைச்சராயி ருத்தலானும், யானே பெருந்தவமுடையேனென்று சொல்லி மகிழ்ந்து, அரண்மனைவாயில்சென்று, உழை யரைநோக்கிப், பட்டத்துயானையொன்று நிற்க, மற் றையானைகளையுந் தேர்களையுங் குதிரைகளையும் பண் ணுறுத்துங்கள் என்றருளினன். உடனே பாகர்கள் தந்திகளைக் கந்தினின்றும் அகற்றிக் கானிகளம் நீக்கி வரிபுரிபொருந்திய கச்சைகள் வீக்கி இருமருங்கும் மணிமாலைகள் அருவிபோல் மருவுற அலங்கரித்துக் கொண்டுவந்தார்கள். பொற்கிடுகுகோத்துப் புளகம் பொருத்திப் பரவைத்தட்டிற் பருமணிகள் பதித்த பெரியதேர்கள் தமது கொடிஞ்சியுச்சியிற் கொடிகட் டிப் புடைமிடைந்தன. தாதணிந்து மணிக்கோவை பிணைந்து கவரி இணைந்து முகபடாம்புணர்ந்து பண்ணு றுத்தியவாய்க் கண்ணுகத்தொகுதி பவனகவனமாய் வந்தன. காலாட்படைஞரும் வாண்முதலியபடைக் கலந்தரித்துக் கட்டியகழலும் ஒட்டியகச்சையும் பூண் டு மட்டியர்மாலைசூடி வந்துசேர்ந்தார்கள். இவ்வாறு சேனைகள் வந்தபொழுது மன்னவன் மந்திரிமாரோடு நீயும் வருகவென்று மரீசியை யானைமேலேற்றினன். சித்திரதரன் என்னொருவீரனை அழைத்துப் பூங்காவில் விஞ்சையரரசன் இறங்கியிருக்குங்கோயிலுக்கு வேண் டிய பொற்குவியல், நவமணிக்கணம், பழவருக்கம், வாசத்திரவியம், மாலைவகைமுதலிய பலவும் உபசார மாக அனுப்பி, இந்நகரை மணக்கோலத்திற்கேற்ற தாக அலங்கரிப்பிப்பாயாக என்று பணித்தான், தன்

குமாரரைநோக்கி, நீவிரும் யானையின்மேலேறி எம்மொடுவருகவென்றுகூறிப், பாகரைநோக்கித்,

> திங்களையிரண்டுகூறுசெய்துமுன்செறித்தபோல
> மங்களவடிவின்வந்தவலனுயர்வயிரக்கோட்டுச்
> செங்களிவிதித்தபோலுஞ்செம்பொறிச்சிறுகண்வேழம்
> வெங்களிவியாழம்வல்லவிறலதுவருகவென்றான்.

அவர்கள் அவ்வாறே அதனை மிக்க ஆபரணாலங்காரத்தோடு கொடுவந்துவிட, மன்னர்மன்னனாகிய பயாபதியரசன் இவர்ந்து, தவளசத்திரம் நிழற்ற, யானையைச் செலுத்தி நகரவீதிவழிச் சென்றான்.

செல்லும்பொழுது தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி முதலிய பலவகைவாத்தியங்கள் கடல்போல் ஒலித்தன. நகரமாந்தர் மலர்மழைதூவினர். குடைகளுங் கொடிகளும் மிடைதலால் எங்கும் இருணிறைய, முடிகளுங் குழைகளும் அடராபரணங்களும் இடையிடை சுடரெறிப்பன பகலும் இரவும் படைபொருதாற்போலிருந்தது. இங்ஙனம் பலவகைச் சிறப்புடனே அரசன்வருவதை மரீசி சொல்லக்கேட்டு விஞ்சையராசனாகிய சுவலனசடியும் அரசனை எதிர்கொள்ளுமாறு நால்வகைச் சேனைகளோடும் எழுந்தான். இருவர்சேனையுங் கங்காநீரும் யமுனாநீருஞ்சென்று ஒன்றோடொன்றுகலக்க வருமாறுபோலவர, விஞ்சையர்வேந்தனும் மானுடவேந்தனும் ஒருவரையொருவர் தரிசித்தனர். கண்ணுற்றபோது பயாபதியரசன் கைகூப்புதற்கு முன்னே

ரே விஞ்சையராசன் அவன்கையைப்பிடித்துத் தழுவி னனாக, அரசகுமாரர்களாகிய விசயனுந் திவிட்டனுஞ் சுவலனசடியுடைய பாதகமலங்களைக் கைகூப்பித் தொழுதனர். விஞ்சையராசன் அவர்களைத் தன் அகலத் தோடுறுகத்தழுவினன். அவ்வேலையில விஞ்சையரா சன் மகனாகிய அருக்ககீர்த்தி பிரசாபதி மன்னனு டைய பாதங்களைக் கைகூப்பிவணங்க, அரசனும் அவ னைத்தழுவித் தன் யானைமேலேற்றினன். அப்போது விஞ்சையராசன் தம்பியாகிய சுலனரதனும் மருகனா கிய வியாக்கிரரதனும் பூமண்டலாதிபதியாகிய போத னத்திறைவனை வணங்க, அவனும் அவர்களை மகிழ்ந் துபசரித்தான். பிரசாபதி இறைவன் தம்பியாகிய ஸ்ரீபாலன் விஞ்சையர் அரசனை வணங்க இவனும் அவனைத் தழுவி ஆனந்தித்தான். இப்படி இருதிறத் தாருங் கலந்துகொண்டாடிய பின்னர்ச், சுவலனசடி இறங்கியிருந்த சித்திரகூடமாடத்திற்கு எல்லாருஞ் சென்று, நாடகமகளிர்கள் கவரிகாலசைப்ப, அங்கு ள்ள சிங்காசனங்களில் வீற்றிருந்தனர். அப்பொழுது பயாபதிமன்னன் விஞ்சையராசனைநோக்கி, இறைவ னே! ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை ஒரு பொருளா கக் கருதி ஈண்டடைந்தது என் தவப்பயன்றான் என, அதுகேட்ட விஞ்சையராசன் கூறுவான். அரசனே! விண்ணுலகத்தாராயினும், மண்ணுலகத்துள்ள தீர்த் தங்களிற் புகுந்தாடுதலே அவர்க்கு மேன்மையாகும். யான் ஈண்டுவரமுன்னும் உங்கள்மேன்மையை மிகச் சொல்லக் கேள்வியுற்றேன். அஃதன்றிப் புராணங் களைக் கற்றறிந்த புலவர்கள் என்மகள் உமது இளைய

MAHAMAHOPADHYAYA
DR. U.V. SWAMINATHA IYER LIBRARY
BESANT NAGAR, MADRAS-600 090


குமாரற்கே உரியளெனத் தீர்த்தலால் அப்பெண்ணை அக்காளைக்கு விவாகஞ்செய்து கொடுத்தற்காக வந்தேனென, இருவரும் இதற்கோர் தாமதமின்றென்று உரைத்து அதிவினய ஐக்கியமாய்ப் பேசிக்கொண்டிருக்கும்போது மலையரசன் நிலவேந்தன் குமாரரையும் அருக்ககீர்த்தியையும் நகரத்திற்கு ஏகும்வண்ணங் கற்பித்தான். அவர்கள் மூவரும் அப்படியே யானைகளின்மேலேறி முன்னேபோத விஞ்சையராசன் மகளாகிய சுயம்பிரபையுந் தன் விமானமீதேறிப்,

பொலங்கலம்புலம்பவாயம்புடைநின்றுபோற்றுக்கூவ
அலங்கலுங்குழலுந்தாழவணிஞிமிறரவஞ்செய்ய
இலங்கலங்ககனமாடத்தெழுநிலையேறலுற்றாள்
விலங்கலின்குவடுசேருமெல்லியற்றோகைபோல்வாள்.

அப்பொழுது அமிர்தபிரபை என்னுஞ் சேடி விமானக்காப்பு நீக்கி, நங்காய்! இந்நகர்வளங் காண இவ்விடத்துவருகவென, அப்படியே அவளும்வர, அவட்கு பானைமீதேறிச் செல்லுங் காளையர் மூவரையுங் காட்டினள். அவள் இவர்கள் யாவரென்று வினவ, அமிர்தபிரபை அம்மூவரையும் இன்னார் இன்னாரென்று சுட்டிக்கூறினாள். அவள் திவிட்டனை நோக்கிய அளவிலே அவனது அழகினாலும் விதிவலியினாலும் அவனைப் பார்த்த பார்வையை மீட்கலாற்றாமையாற் தன்காதல் பிறர்க்கு வெளியாகுமேயென்ற நாணையுமிழந்தாள். பாவம்! அவள்தான் யாது செய்யவல்லவள்!

*தாமரையனையகண்ணுந்தடக்கையும்பவழவாயும்*
*பூமருபூவைக்கண்ணிப்புதுமலரொளியுங்காட்டித்*
*தூமருநீலமென்னுமணிதுணர்ந்தனையகுஞ்சிக்*
*காமருதாரைகன்னிகண்களைச்சிறைகொண்டிட்டான்.*

இங்ஙனம் மயங்கிய பாவை விமானத்தினின்றும் இழிந்து தன் தந்தையுடைய பதமலரை வணங்கிநிற்ப, அவ்வரசன் தன் மகளைக் கவானின்கண் இருத்தி உச்சி மோந்து பணிகள் திருத்தியபின்னர், மாமனுடைய மலரடிகளை வணங்கச்சொல்ல, உடனே சயம்பிரபை மாமனுடைய பாதங்களில் வணங்கினள். பிரசாபதி பரசனுந் தன்மருமகளை வலக்குறங்கினேற்றி அவள் இலட்சணங்களை நோக்கி இவளுடையகணவன் ஏகசக்கிரேசுவரனாக இவ்வுலகமுழுதையும் ஆளுவானென்பதற்கையமில்லையென்றான். மீட்டும் அவ்வரசன் நீவிர் ஈண்டெய்தவும் என்மகன் திவிட்டனுக்கு இப்பெண்மணியை விவாகஞ்செய்யவும் பெற்றமைமாத்திரையேயன்றி என்பெயர் நீதிநூலார் வாயினுஞ்சேர்ந்தமையால் யான் பெருந்தவமுடையனென்று அதிவினய வார்த்தைகள் பேசியபின், இருவரும் அவ்வணங்கை நோக்கி அந்தப்புரத்தே தருகென்ன அவளும்விமானமீதேறிச்சென்றனள். அப்பொழுது அரசன் மனைவி சசியென்பாள் மதுகரி வயந்தசேனை முதலாகிய மகளிரை நோக்கி அரசகன்னிகையை எதிர்கொண்டு சென்று அழையுமினென்றோத, அவர்களில் ஆயிரத்தெண்மர்கள் ஆபரணம் முதலியவற்றாற் தம்மையலங்கரித்து, அரசகன்னிகையைக் காண்டற்கமைந்த காப்புமங்க

ளங்களை ஏந்திச்சென்றார்கள். மாதவசேனை முதலா கிய நாபதமகளிர்கள் மாலை காதணி முத்துவடம் ஆகிய உபசாரமங்கலங்களோடுவரத், திவிட்டனுடைய கைத்தாயருஞ் சென்று நடையமைந்தபிடிகள் தேர்கள் சிவிகைகளினின்றும் இறங்கிவந்து, அரசனை வணங்கி, அவன் பணியினாற் சொயம்பிரபையின் கன்னிமாடத்திற்சென்றார்கள். சென்றபொழுது அங்கே பூவணையிற் பொலிந்திருந்த இராசகுமாரிக்கு, அவள் பாங்கர்ச் சாமரையிரட்டல் முதலியபணிசெய்மகளிர் அன்னாரை இன்னார் இன்னாரென்று உணர்த்தினர்.

அப்பொழுது மனுகரி வயந்தசேனை முதலிய பெண்கள் அவளை வலம்வந்து வணங்கினார்கள். அவளுக்கு இவர்கள் திவிட்டனுடைய உழைக்கலமகளிரென்றதோர் பிரியமுண்டாகி, ஒரு புன்னகைவர, அதுவெளியாகாமல் ஒரு பூவை நெரித்து மோந்துகொண்டிருந்தாள். அரசகன்னிகையைக்காணச் சென்றமாதர்கள், அப்பெண்ணின் அணிகல ஒளியாலும் மேனியின் தேசாலுந் தம் விழி ஒளி இழந்து அவளைக் கண்ணுறற்கு அரியராயினார். அவருள், மாதவசேனையென்பவள், அங்குள்ள பளிங்குச்சுவரின்மீது அவளது பிரதிவிம்பந் தோன்ற, அதனை நன்றாக மனத்தில் அழுத்திவைத்திருந்து, அந்த உருவை ஒரு பலகையிலே சித்திரித்துக்கொண்டனள். பின்னர் அவர்கள் இராசகுமாரத்தியை நோக்கிப் பொன்னம்பாவையனையீர்! நும்முடைய மாமியார் எங்கண்களைத் தங்கண்ணாகப்பாவித்து நும்மைக் காணுங்களென்றருளி

னர். ஆதலால் அவர்க்கு யாஞ்சொல்லும் வார்த்தை யாது? திருவாய்மலர்ந்தருளவேண்டுமென, அவள் சிறிது நாண, மாதவசேனை எங்கள்முன் தாங்கள் எதும் மொழிவதினால் யாதும் எதம் வாராதென்றாள்.

சொயம்பிரபைக்கு ஒரு குறு முறுவல் உண்டாயிற்று. அவளது தோழி அமிர்தபிரபையென்பாள் அவர்களைப்பார்த்து நீங்கள் நுந்தலையை நந்தலையாகச் சிந்தித்து மாமியாரை நாங்கள் வணங்கியதாக வணங்குங்கள் என்று சொன்னாள். அங்ஙனமே நின்றிருமொழிப் பண்ணிகாரத்தைக் கொடுபோய் நம்மரசன்றேவி உண்ணும்படி பண்ணுவோமென்று இயம்பி, விடைபெற்றுச் சென்றனர். மாதவசேனை தானெழுதிய படத்தை ஒருதுகிலினால் மறைத்துக்கொண்டு, அரசன் மனைவிமாட்டுத் தனியேசென்று வணங்கினாள். அவளை அரசனுடையமனைவி தன் மருங்கில் அழைத்து நீ கையில் வைத்திருப்பது யாதெனவினவ, அவள் அன்னாய்! இது தமது மருமகளுடைய உருவப்படமென விடைகொடுத்தாள். மாதவசேனைக்கு அரசன் மனைவி · சசி புதியவாகிய பலபூஷணங்களை உபகாரமாக வழங்கிப், படத்தைக் காட்டுகென்று கேட்க, மாதவசேனை எடுத்துக் காட்டினாள். உருவின் சித்திரம் முழுவதையும் நன்றாகப்பார்த்து, எழுதற்கரிய இத்திருமேனியின் உருவத்தைத் துகிலிகைத்தொழிலால் எவ்வாறு சமைத்தாய்? உன் சாமர்த்தியமே சாமர்த்தியம்! என் கண்களைக் கவர்கின்றசோதி அணிகளின் பிரபையோ அணங்கினது உருவமோ என்று மிகவும் வியப்

படைந்து, அவளை நோக்கி நீ இப்படத்தை நமது குமாரனுகிய திவிட்டற்குக் காட்டுதியென்று கட்டளையிட்டாள். மாதவசேனை, எழுதவும் மொழியவும் முடியாத இவ்வுருவத்தை உன் அருளை வழிபட்டன்றோ யான் சித்திரித்ததென்று கூறி, எம்மாமியாரடிகளை நாம் எல்லையில்லாத உரிமையோடு இறைஞ்சியதாக நீவிரிறைஞ்சுக என்றோர் மழலைத்திருமொழி அவள் தோழிவாயிலாக எழுந்ததையுஞ் சொல்லி, இளைய நம்பி உறையுங் கோயிலுட்சென்று அவனை வணங்கி, நுந்தாயார் இப்படத்தை உமக்குக் காட்டச்சொன்ஞர், ஆதலால் இதனைக்கொணர்ந்தேன். ஏந்தலே! அருங்கலம் அரசர்க்குரித்தாவதன்றி மற்றியார்க்கு உரித்தாகும்? ஆதலால் இதனை அடிகள் பார்த்தருளிச்செய்க என்று துதித்து, அவனது அநுமதிப்படி அதனைக் காட்டினள். படத்தைப்பார்த்து இராசகுமாரன் இவள் மண்ணுலகத்தணங்கோ விண்ணுலகத்தரம்பையோ வென்று ஐயுறுமளவில், மாதவசேனை இது விண்மடந்தையன்று; இனித் தேவரீர் ஆலோசித்து இன்னுரென்று சொன்மினென்ன, அரசகுமாரன் விண்மடந்தையுருவன்றாயின், இவ்வுருவுடையார் மனுடரில் இல்லையாதலால், இவள் விஞ்சையராசன் புதல்வியாமென்ருன். அற்றம் பார்த்துநின்ற மதனனும் அதன்வழித் தன் தீங்கரும்புவில்லிற் பூங்கணைகள் எடுத்துத் தொடுக்கவும் விடுக்கவும் ஆரம்பித்தான். அக்கணமே,

விண்ணியலுருவவீதிமேனின்றமிழ்ந்துவெய்யோன்
கண்ணியல்விலங்கனெற்றிகதிரெனுங்கையினூன்றி

மண்ணியன்மரத்தின்சாகைநுதிபிடித்தவையும்விட்டுப்
பண்ணியல்பிறிதொன்றாகிப்பையவேமறைந்துபோனான்.

திவிட்டன் மதனஸ்திரத்தாற் சோகங்கொண்டு பல வாறு புலம்பித் தீயால் வெதும்புகின்ற வெண்ணெய் போலுருகி வசமழிந்து அன்றிராமுழுதுஞ் சந்திர கிரணத்தால் மிகவருத்தம் அடைந்தான். இராச கன்னிகையுந், தோழியாகிய அமிர்தபிரபை முன்னே திவிட்டனைக் காட்டியபோது, தான் கண்டநேரத்திலே கொண்டமோகத்தைப் பகற்காலத்து ஒருவாறடக்கி, இராக்காலம் வந்தவுடன் ஆற்றாளாகி, அருகக்கடவுள் ஆலயத்திற்சென்று தொழுது, ஒருசாமங் கழித்தும், பொருகாமம் ஒருவாது, விகாரத்தால் வருந்தினாள். அதனைக் குறிப்பான் அறிந்த தோழிகள் அநேக விநோத ரஞ்சித வார்த்தைகளாடி அவள் மனத்திற்கு இதஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

விஞ்சையருலகினின்று வந்தோர் யாவரும் பலவே டிக்கைகளை நோக்கியும் நடனகீத விநோதவிளையாட் டுக்களைப் பார்த்துங் கேட்டும் பொழுதுபோக்கினர். சூரியனும் உதயமாயினன். பிராசாபதி துயிலெழுந்து நியமமுடித்து, அருகக்கடவுட்கு நைமித்திகஞ்செய் யக்கருதி, இன்று நம்பெருமானுடைய உற்சவதின மென்று பறைசாற்றுவித்தான். அங்ஙனஞ் செய்த லும் அந்நகர்ச்சனங்களும் அரசனுடைய கோயிலின் கண் உறைவோரும் வாசனைத்திரவியங்களுஞ் சுகந்த தூபங்களும் பூப்பலிமுதலியவும் ஏந்தி, வீதிகளிலே பிடிகளிலும் ஒருத்தல்களிலும் பிறவாகனங்களிலும்

ஏறி, அடியிட இடமின்றி நெருங்கி, அருகசினகரத்தில் ஆகவேண்டிய பூசைகளை நடத்தினார்கள். பின்பு சுயம்பிரபைக்கு மங்கல மணநாள் இன்றென்று முரசறையப்பட்டது. முரசுமுதலிய வாத்தியங்கள் முழங்கின. பார்த்தவிடமெல்லாம் நடனமுதலிய ஆடலுந் தோற்கருவி முதலியவற்றாலாகும் பாடலும் இன்னும் அனேக மகிழ்ச்சிக்குரிய கொண்டாட்டங்களும் நடந்தன. மணத்தைக்காண விண்ணுலகினரும் மண்ணுலகினரும் விஞ்சையரும் ஒருங்கு கலத்தலினாலே அந்நகரம் பிரளயகாலத்து உயிர்கள் ஒடுங்கும் இடம் போன்றது. இவ்வாறு பற்பல விசேஷங்கள் நடக்கும்போது அரசர்கள் யானைகளை அலங்கரித்துக்கொண்டு சென்று, அனேகம் பொற்குடங்களிலே கங்காதீர்த்தம் எடுத்து யானைகளிலேற்றி மங்கலதூரியத்தோடு கொணர்ந்து இராசகுமாரனை ஒருபொன்னாசனத்திருத்தித் திருமஞ்சனம் ஆட்டினர். இளையபெருமாள் இவ்வாறு ஸ்நானஞ்செய்து மணக்கோலங்கொண்டு விவாகமண்டபம்புக, இராசகன்னிகையுந் தம்மவர்களாய விஞ்சையர்கள் தங்கள் உலகத்தினின்று கொணர்ந்த திவ்விய நீராடி, ஆங்குள்ளபலவகை அலர்மாலைகளை அணிந்து, அவர்கள் கொணர்ந்த அலங்கார பூஷணங்களைத் தரித்து, இவ்வுலகிற்கு அரியதோர் நூதனவஸ்திரத்தை உடுத்தி, மகளிர்சூழ்ந்து மங்கல வாழ்த்துச் சொல்லப், பலவகைவாத்தியமுழங்க, மணச்சாலையிற் சேர்ந்தாள். இவர்கள் இருவரும் விவாகமண்டபம் அடைந்து மணவறையிலிருந்தபோது, அக்கினிகாரியங்களைச்செய்யும் ஆசாரியர்கள் மணச்சாலையில்வந்து

மெழுகினசந்தநிலத்தில் மாவினாற் கோட்டமிட்டனர். ஓமாசாரியன் மணலைச் சதுரமாகப் பரப்பி வெள்ளையிட்டுத் தருப்பைநுனிகளை வடக்குங் குணக்குமுறத் திருத்தி, ஒரு வால்வளை பயின்று, பின்பு வானமுதற் பத்துத் திக்குந் தெய்வங்களைக் காவலாக்கிப், பரிதி சமிதைகளை வைத்து ஓமாக்கினியைவளர்த்தான். அப்போது சோதிடர் மங்கிலியதாரணமுகூர்த்தகாலமாய் விட்டதென்றுகூற, அனேக மங்கலவாழ்த்து முழங்கத் தேவர்கள் பூமாரிவீச விஞ்சையராசன் தன்மகளை இராசகுமாரனுக்கு நீருடனே தத்தஞ்செய்துகொடுத்தான். பின்னும் அங்கு நடத்தற்பாலனவாய கிரியைகளை முடித்து, எரிவலம் வரச்செய்தார்கள். அதன் பிறகு ஓமஞ்செய்த வேதியனுக்குக் கன்னிதமருங் காளைதமருங் கூடிப் பொன்னையும் மணியையுந் தானங் கொடுத்தனர். மணமகன் மணமகளுக்கு ஆகாயத்தில் இலங்கும் அருந்ததியைக் காட்டி, அங்கேவந்திருந்த யாவர்க்கும் வேண்டியவாறே தியாகம்பண்ணக் கட்டளையிட்டு, மனாட்டியுடன் அரசமாளிகைசேர்ந்து, நிகரில்லாத இன்பம் அனுபவித்திருந்தான்.

உலம்பாராட்டுந்தோளவனொண்பூங்குழலாளை
நலம்பாராட்டிநாகிளமுல்லைநகுவிக்கும்
வலம்பாராட்டிவந்ததொர்மாரிப்புயலொத்தான்
குலம்பாராட்டுங்கொம்புமொர்முல்லைக்கொடியொத்தான்.

# அரியற்சருக்கம்.

இவர்கள் இவ்வாறு இங்கே இருக்க விஞ்சையருரி னின்று ஒருதூதுவன் பூமியில்வந்து சுவலனசடியை வணங்கி, எல்லையற்ற செல்வப்பாற்கடனுபபனை ஒரு நச்சுத்துளி இழிந்து விழுந்தாற்போன்றதோர் வார்த் தை சார்த்துகின்றான். மகாராசனே! விஞ்சையர் உலகத்தை அரசாளும் அச்சுவகண்டனோடு மற்றை அரசர்கள் யாவருங்கூடி நம்மேற்சாடிப் போருக்கு நாடிவர ஆயத்தப்படுகிறார்கள் என்றான்.

அரசன் அதிற் கவனம்வையாது நீக்கித், தூதனை நோக்கி, அவர்கள் போருக்கு வரினும் வருக வராது போகினும் போக, எனது மருமகன் திவிட்டன் சிங்கத்தை வதைத்த நாளில் அச்சுவகண்டனூரிலே நடந்தகாரியத்தைச் சிறிது கூறுதியென்னத், தூது வன் சொல்வானாயினான்.

இராசனே! தங்கள் மருகனாகிய திவிட்டகுமாரன் சிங்கேற்றைப்பிளந்த வீரத்தை மாயச்சியமாய்வந்த அரிகேது கூற, அதைக்கேட்ட விஞ்சையர்கள் யாவ ரும் அதிக ஆச்சரியமும் பயமும் அடைந்து மெய்ந் நடுங்கினர். அரிமஞ்சு மந்திரி அதனை அச்சுவகண் டன் அறியாமற் சின்னாள் மறைத்திருந்தும், அரச னுக்கு அறிவியாதிருத்தல் சரியன்றெனக்கருதிப், பின் னர் அரிகேதுவையே அழைத்து நீ இதனை அரசனுக்கு அறிவிக்கக்கடவையென்றனுப்பினான்.

அனேக அரசர்கள்சூழ அச்சுவகண்டன் கொலுவீற்றிருக்குந் தருணத்தில் அரிகேதுசென்று மன்னனை வணங்கி அரசனே! தங்கட்கு ஓர் அரியகதை கரைய வந்தேன் என்றான். அச்சுவகண்டன் அவனைநோக்கி அஃதென்னை? கூறுதி என்று அநுமதி கொடுக்க, அவன் தாங்கள் அனுப்பிய தூதருக்குத் திறைகொடாமல் இராசகுமாரன் அவர்களை அதட்டித் துரத்தியதும், அதனை அறிந்த அரிமஞ்சு தன்னை மாயச்சியமாய்ப் போம்படி கட்டளையிட்டனுப்பியதும், அப்படியே தான் சென்று ஊரையழித்ததும், அதையறிந்து இராசகுமாரர்கள் அங்கே வந்ததும், இளையகுமாரன் தன்னைக்கண்டு உரப்பியதுந், தான் பயப்பட்டு ஒரு சிங்கம் இருக்குங் குகையிற்போய் ஒளித்ததும், இராசகுமாரன் அம்மலைக்குகை எதிரேவந்து ஆரவாரித்ததும், அதைக்கேட்ட மெய்ச்சிங்கம் எழுந்துபாயத் திவிட்டகுமாரன் அதைப்பிடித்துக் கிழித்ததுந், தான் மறைந்து ஓடிவந்ததுமாகிய சம்பவங்களையெல்லாம் ஆதியோடந்தமாக ஓதினன். உடனே அச்சுவகண்டன் கண்களினின்று அழற்பொறிசிதறத், தன் கைகளால் அயலிலிருந்தவோர் கற்றூண் துகளாக அடித்து, அரிகேதுவை நோக்கி, அடா! உன்னைப்போல் அச்சமுடையவர்கட்கே கீழ்நிலத்திலுள்ள மனிதர்களுடைய ஆற்றல் மலைபோலத்தோன்றும், அஃது எம்போல்வார்க்கு ஓர் அணுவாயுந் தோன்றாதென்று நகைத்துச் சீறி, அசனிபோல் ஆர்த்தபொழுது, அங்கே நின்ற விஞ்சையர்கள் திகைத்து மயங்கினார்கள். இவையெல்லாவற்றையுங்கண்ட அரிகேது, திவிட்

னுடைய வலிமையை அறிந்தவனுதலாற், தன் மனத்துள்ளே, இவன் அவன் ஆற்றலை அறியாது சாற்றுகின்றுன், நாம் இப்போது கூறியென்பயன்! அந்த இத்தன்மைத்தெனத் திவிட்டராசசிங்கத்தின் முன் னேர்ந்தபோரிலே அறிந்தடங்கித் தெளிவாளுக என்று நினைத்துக்கொண்டு, எதிரே இரண்டு கரத்தையுந் தலைமேற் கூப்பினவண்ணம் நின்றுன். வேறோர் விஞ்சையன் அங்கேவந்து நடுககத்தோடு நின்று அரசனைக் கண்டு வணங்கிச், சடியரசனுந் தமரும் இராசகுமாரத்தியை அழைத்துக்கொண்டு பூமிக்குச்சென்றதுங் கடிவினை இயன்றதுஞ் சொன்னுன். சொன்னபோது தானே சுவாலிக்கும் நெருப்பின்மீது நெய்யையூற்றினுற்போல அரசன் வெகுளிமேல் வெகுளிகொண்டு, பல்லை நெருமி வாயைக்கடித்துக், கட்பொறியினின்று கனற்பொறிபறக்கத், திக்கெல்லாம் நடுங்கப், பக்கத்தார் ஒடுங்க முழங்கி, அவர்கள் தன்மை இவ்வாறுயின் அவர்வீரத்தை யான் சடிதியில் அறிவேனென்று உறுமிச், சேனைகளும் அரசர்களும் யுத்தசன்னத்தராய் வரும்படி பறைசாற்றுவித்தான்.

விஞ்சை வேந்தர் சேனுசமுத்திரங்களோடு ஆங்கடைந்து, அரசனை வணங்கி நின்று, அவன் மனதிலுண்டான கோபத்தையுங் கண்கள் நெருப்புச்சிதறுவதையுங் கற்றூண் பொடியாய்க் கிடப்பதையுங் கண்டு நடுங்கி, அச்சமடைந்து, இவ்வாறனகோபம் இதற்கு முன் இவனுக்கு ஒருகாலும் வரக்கண்டதில்லை, இன்று இக்கோபத்திற்கு இலக்காவார் யாவரோ அறியோ

மென்று திகைத்துத் தங்களுள் ஒருவரையொருவர் வினவுவாராகி, ஞாலமீதுயிர்கவரும் காலனுமன்மீது கதத்தினனாயினனே என்பாரும், ஊழிகளை மாற்றி உலகத்தைப் பிறிதொன்றாக்கி வாழ்வன அனைத்தை யுஞ் சேர வாரி ஆழியினுட்பெய்வான் சூழ்கின் றானோ என்பாருந், தானவர் அரக்கர் தஞ்சமென்ற டைந்தனர் மானவர் மண்மேல் ஊனராயினர் வான வர் மாறாய் வருபவரில்லை ஏனையர் இவற்கெதிர் யார் பிறர் இயம்புக என்பாரும், உலகம் இறக்க மலைகள் பொறிப்பறக்க அலைகடலனைத்தும் அடியோடுவறக்க எழுந்த கோபத்திறகு இரையாவார் யாவரென்பாரும், மற்றினிப்பேசியென், சற்றேபொறுத்து உற்றதை அறியலாமென்பாருமாய் மயங்கினர். இவ்வாறிவர்கள் உயங்கினர் கயங்க, அச்சுவகண்டன் அவர்களைநோக்கி, அரசர்களே! இரதநூபுரத்தரசன் சுவலனசடி எனக்கு மறைத்துத் தன்மகளைப் பூமியிலுள்ள மனிதன் ஒரு வனுக்கு மணஞ்செய்து கொடுக்கும்படிக்கு ஆண்டு அவனைத் தேண்டிக்கொண்டுசென்றானும், நம்மரசியல் நன்றாயிருந்தது! என்று சொல்ல, அதைக்கேட்ட அரசர்கள் மன்னனே! இச்சொற்ப காரியத்திற்குத்தா னோ இத்துணை அற்புதகோபமென்று ஒருங்குகூறினர். அதனால் ஆங்கு ஒல்லென்று ஒரொலியுண்டானது. பின்னர் அவர்கள் அனைவரும் ஒருமிக்கக்கூடி நம்மரசு னுடைய கண்களினின்று இவ்வளவு கோபாக்கினி சுவாலிக்கக்கண்டுந், தாழ்வுள்ளர்ந்த நம்புயங்களை வீணாக நாஞ் சுமப்பதனாற் பயன் என்னை? ஒன்றிற் போரிலே கருதலர்ச் செயித்து விருதுபெறுவோம்,

அல்லது இறந்து வானுலகேறுவோம், இவ்விரண்டில் ஒன்றே துணிவென்று சிலர் சொன்னார்கள். சிலர் அரசன் காரியங்களை அவன் ஏவமுன் தாவறச்செய்து வாழும் நாங்கள் உளராக, அரசனுக்குத் துயர்விளைத் தவர்கள் உயிரோடிருப்பரெனில், யாம் இனி இறந்து விடல்வேண்டும். நமக்கு இதைவிட இளிவென்னே என்றனர். சிலர் வீண்வார்த்தைகள் பேசியாவதென் னை? போர் மூண்டுவிட்டதென்று தத்தம் புயகிரிகளைப் பார்த்து நமக்கு ஏதும் வடுவாராமற் காப்பாற்றிய அரசனுடைய புகழ் வடுப்பட நந்தோளில் வடுவின்றி நாம் இருப்பது அறனே? அக்கன்னியை மணஞ்செய் த காளையும் அவன் கேளிரும் நாளைப் படும்பாட்டை மீளக்கேட்டிருங்கள் என்றனர்.

இங்ஙனம் அவரவர் நினைத்தவாறே பேச, அவர்களை அமைத்துக், கனகசித்திரன் அரசனைநோக்கி அரசனே! சொல்லுவது யார்க்குமெளிது, அரியதாஞ் சொல்லிய வண்ணஞ் செயல், "சொல்லலா மிருந்துழிச் சொன்ன சொற்படி - வெல்லலா மென்பது விதிக்குங் கூடுமோ" நம்மவர்கள் வாயினால் வீரம்பேசுவார்கள், பேசியபடி காரியங்களைச் செய்து முடிக்கமாட்டார்கள். அது நிற்க. தங்களை எதிர்த்தோர் அமரராயினுமாகுக, அசுரராயினுமாகுக இப்போரிலே யான் பூமியிற் சென்று யுத்தஞ் செய்வேனாயின், எல்லா உலகங்களும் அழி யும் ஊழிக்காலமாக்குவேன். அல்லது வானுலகின ரும் மண்ணுலகினரும் வந்து நமது தலைவாயிலில் விழுந்து அஷ்டாங்க நமஸ்காரம்பண்ணிக் கிடக்க

செய்வேன். அதுமாத்திரமன்று. அக்கன்னிகையை
யும் அவளை மணஞ்செய்த காளையையும் பற்றிவந்து
முற்றத்தில் விடுவேன். என்னை அனுப்பி அதன்பின்
என் வீரத்தை அறிமின்பிற என்று வீறினான்.

அச்சுவகண்டன் புகைந்தெரியுங் குன்றில் மழை
பெய்தாற்போலச் சற்றே குளிர்ச்சியடைந்தான். அவ
னைப் பார்த்து அவன் தம்பி வச்சிரகண்டன் எழுந்து
கூறுவான். அண்ணா! எங்களுடைய ஆண்மையெல்
லாம அழிந்தனவாக, நாங்களெல்லாரும் எளியவராக,
எங்களை வெல்லத் தக்கதோர் படை ஆதனமாக
உண்டாயிற்றென்று கண்சிவந்து கோபமடைத
லும், இவ்வற்ப மனுடர்பேரிற் தாம் போர்க்குச் சேற
லும் புத்தியல்ல. பெரியதோணியானது கரியகடலி
லேயன்றிச் சிறியகுளத்திலே ஓடாதென்று வற்புறுத்
திச் சொல்ல, அச்சுவகண்டன் கொண்டகோபம் பாதி
அடங்கியது. அவனுடைய தம்பிமாரும் மக்களும்
மற்றையோரும் வேறுவேறாக அநேகவார்த்தைகள்
சொல்லி அவன் சீற்றத்தை ஆற்றவும் மாற்றினார்கள்.
அப்போது அச்சுவகண்டன் அவர்களைநோக்கி அரச
நீதியிலே அயர்வில்லாதன அனேக காரியங்கள் உள
வென்று கூறிப் பின்னர் மந்திரசாலைக்குச் சென்றான்.
அங்கே நிகழ்ந்ததும் யான் அறிந்து வந்தேன். அதை
யுஞ் சொல்வன் கேட்பீராக.

அச்சுவகண்டன் மந்திரசாலையிற் போதலோடும்,
அரிமஞ்சு அங்குநின்ற படைத்தலைவர் முதலியோரு

டைய முகத்தைநோக்கி, அக்கன்னிகை பொருட்டாக நமதரசன் சீறிக் கோபித்ததை நீவிர்கள் கண்டீர்க ளன்றோ? அதற்கு நாம் இனிமேல் யாது செய்யல் வேண்டுஞ் சொல்லுங்களென்று கேட்க, அவர்களுட் தூமகேதுவென்பவன் ஆலோசித்துச் சொல்லுவானாயி னன். நமது வெள்ளிமலையிற் பிறந்த அருங்கலத்தை நம் அரசனையின்றி யாவர்பெறுவார்? ஒருவருமிலையே. ஆதலால் இதிற் சடியென்பவனே அதிககுற்றஞ் செய் தனன் என்று கூறினன். அதனைக் கேட்ட அனிலபு ரத்தரசனுகிய அங்காரவேகன் என்பான் இரதநூபு ரத்தரசன் எம்மைப்பெரிதும் இகழ்ந்தனன். ஆதலால் நாம்போய்ப் போர்செய்து அவன் கிளைகளையெல்லாங் கொன்று அவர்கள் உடலைக் கடலின்கரைபோலத் திட லின் நிரையாக்கிவிடுவோம் வாருங்கள் என்றான்.

அதன்பின் அச்சுவகண்டன் காதற்றோழனாகிய அரி சேனன் நாம் இப்படிக் காணாத இடத்திலிருந்து பே சும் பேச்சால் அவர்களை வெல்லலாமெனில், இன்னும் பேசுங்கள். அரசநூலிலே கூறிய சாமபேதமுதலிய உபாயங்கள் இறத்தற்கு அஞ்சுவோருக்குஞ் சேனை முதலியவற்றின் வலியில்லாதார்க்குமன்றோ ஒருவ னுண்டாக்கினான், அது நமக்கு வேண்டுவதன்று. அஃ தின்றி நாங்கள் வில்முதலிய ஆயுதங்களாலுங் கச ரத துரக பதாதிகளாலும் போர்செய்து வெல்லவேண்டு மென்னில் இன்னினியே என்னை அனுப்பிவையுங்கள் என்றான். அச்சுவகண்டன் அவனைச் சந்தோஷத் தோடுநோக்கி இப்படைவீரன் சொல்லியதே வகை

யில்லாத இசைவார்த்தையென்று சொன்னான். அதை கேட்டுக் கருடத்துவசன் சொல்லுவான். இப்போது யாம் அவர்களுடனே போர் புரிவதே தகுதியாயினும், நாம் அவர்களோடு செய்வது மனிதப்போரோ? தெய்வப்போரோ? அதனை ஆராய்ந்து சொல்லுங்களென்றான். அதுகேட்ட ஸ்ரீபாலன் என்னுந் திருநிலையகத்தரசன் யான் அதனை கூறுவன் கேண்மினென்று அனைவருங்கேட்பத் தெரிக்கலாயினன்.

வீரர்காள்! போரில் உபயோகிக்கிற படைகள் மனிதப்படை தெய்வப்படை சங்கிரணப்படையென மூன்றுவகைப்படும். படைக்கலம் இயற்றுந் தொழிலும் அத்திரவித்தை வாளவித்தை மாயவித்தையென மூன்றாகும். அவற்றுள் அத்திரவித்தை நால்வகைப்படும். அவற்றின் விரிவெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். அவைநிற்க மேற்கூறிய முத்திறப்படையுள்ளும் மக்களுடன் செய்வதற்கு மக்கட்போரே தருமமாயினும், மற்ற இருவகைப்போரையும் முழுவதுங் கைவிட்டுச் செல்வோமாயின், அவ்விடத்து விஞ்சையர்களும் நிற்றலால் எங்களுக்கு வசைமொழிவரும். விஞ்சையர் நம்முடன் பொருவராயின் மாயப்போரும் மானுடர் பொருவராயின் மக்கட்போருஞ் செய்தற்கு ஆயத்தமாகவே சேறல்வேண்டுமென்று கூறினன். அச்சுவகண்டன் அதுவே சரி அப்படியே செய்யுங்களென்று சொல்லித் தன் கோயிலையடைந்தான்.

அதன்பின் அங்குநின்ற அரசர்களிற் சிலர் நமது தக்கிணசேடியை அக்கினிக்கு இரையாக்குதுமென்று

சென்றனர். மற்றையரசர்கள் இங்கே போருக்கு வர நினைத்திருக்கின்றார்கள். மகாராசனே! நீர் இதை அறிந்துகொண்மின் என்று தூதன் சொன்னான்.

அவன் அவ்வாறு சொல்லக்கேட்ட சடியரசன் தன் மகனாகிய அருக்ககீர்த்தியையும் மருகராகிய விசய திவிட்டர்களையும் பயாபதியரசன் முதலியோரையும் ஒருங்கு கூட்டி, விஞ்சையருலகிற் சமாசாரங்களைத் தூதன் உரைத்தபடியே சொல்லி, இதற்கு யாம் செய்வது யாதென்றுகேட்க, ஆங்குநின்ற வீரர்கள் மானமுங் கோபமும் மூண்டு அனேக வீரவார்த்தைகள் பேசினார்கள். அவன் குமாரன் அருக்ககீர்த்தி தந்தையைநோக்கிப் பிதாவே! யான் என் கையில் வில்லை வளைத்துப் பாணத்தைப்பூட்டி உதரவெள்ளம் வேலாவலயத்துக்கு ஓட யுத்தஞ் செய்யும்போதே என் தீரத்தைத் தாங்கள் காணலாம், இப்போது வாயால் வீரம்பேசி ஆவதொன்றும் இல்லையென்று சொல்லி முடிக்குமளவிற், திவிட்டன் தமயன் சங்கவண்ணன் விஞ்சையராசனைநோக்கிச் சொல்லுவான். ஏந்தலே! நம்மோடு போர்செய்ய வருபவர் தேவர்களென்றால் நாமுஞ் சற்றே ஆலோசித்தல் தகும். அவர்களன்றி விஞ்சையர் மலையிலிருக்கும் வரைக்கிருமிகளே செருப்புரியவருவன. அவர்கள் வருக. வந்தால் அவர்கள் மார்பென்னும் வயலை நமது கைக் கலப்பையாற் தசையாகிய சேறுபொங்கி எழும்பும் வண்ணம் உழுது, வெற்றியாகிய நாற்றைநட்டுப், புகழாகிய பயிரை விளைப்பேனென்றான்.

இவ்வாறே மற்றை வீரர்களுங்கூற, முடிவிலே இளைய நம்பியாகிய திவிட்டன் மாதுலனுடைய பாத கமலப்போதுகளை வணங்கிச் சொல்லுவான். மாமா! வாயால் வீரஞ்சொல்லி, நேரஞ்செல்லலில் ஆவதென்னை? வருகிற சேனைகள் எனக்கு மிஞ்சினாலன்றோ இவர்களிடம் வருவதெனச், சடியரசன் மருகனைநோக்கிச் சந்தோஷம் அடைந்து, போதும் போதும்! இனி யாதும் பேசாதமைக. தேன்பொருந்திய மாலையை அணிந்த அரசகுமாரனே! அவ்விஞ்சையர்களுக்குரிய மாயவித்தை மந்திரோபதேசம் ஆகிய இவைகளைப் பெற்றுக்கொள்ளுதியென்று அவைகளைத் திவிட்டன் காதில் உபதேசித்தனன். அம்மந்திராட்சரத்தை இராசகுமாரன் உள்ளத்திலே அப்பியாசப்படுத்தியபோது, மாயாதேவதை ஆகாயமார்க்கமாகவந்து, பணிவிடையாதென்று வினவ, அவன் அதற்கு உரிய வழிபாடு செய்து, அத்தெய்வத்தைநோக்கி நுமது மாயவித்தை வரும்பொழுது நமக்கு உதவிபுரிமினென்றுவேண்டி, அதன் பதவிக்கு

இங்ஙனம் மாயவித்தையுங் கைவர, உலகெல்லாந் தன்னடிப்பட இயங்குங் கற்பகதருப்போன்ற இராசகுமாரன் மற்றையோருடன் இருக்கும்போது, அந்தரவழியாய் வந்த இரண்டு கந்தருவதூதர்கள் திவிட்டனது செவியைச் சுடும் அக்கினியத்திரங்கள் நிறைத்த அம்புக்கூட்டினின்று அவ்வேவுகளை அவன் கன்னத்திற் றூவியதென, அம்பலத்தினின்று சிலவம்புவார்த்தைகளை மிகுகெம்பீரமாய் விளம்பினார்கள்.

அரசர்களே! யாங்கள் விஞ்சையருலகை அரசாளும் அச்சுவகண்டனுடைய தமர்கள். நமதரசன் வாய்மொழியைக் கேட்பீராக; நீவிர் விஞ்சையரரசன் சடியின் மகளாகிய கன்னியைத் தருகிறீர்களா? அன்றேல் அக்கன்னியை விவாகஞ்செய்த காளையின் சென்னியைத் தருகிறீர்களா? இரண்டிலொன்றை விரைந்து சொல்லுங்களென்றார்கள். கன்னியென்னுஞ் சொல் காதிற்பட்டதே மணமகன் திவிட்டனுக்கு அளத்தற்கரியகோபம் உளத்தில் உண்டாயது. இரண்டு கண்களிலுமிருந்து தீப்பொறிகள் சிதறின. கோபாக்கினியினால் அவன் அங்கமெங்கும் உருகினாற்போலச் சரீரமுழுதும் வேர்வையாய் ஒழுகிற்று. அதரம்பதறப், பவளவாய் தம்பனமானாற்போல ஒன்றும்பேசாமல் நிமிர்ந்தெழுந்து, அவ்விடத்திலிருந்தவர்கள் பார்த்து ஆனந்திக்கத் தன் சொயசொரூபத்தைக் காட்டினன். பின் இரத்தினபல்லவ வித்தகனைநோக்கி நீவிர் தூதுவராதலிற் பிழைத்தனிர், பேதைகாள் இங்கு நில்லாது ஓடிப்போகக்கடவீரென்று சொல்லியருளினன்.

அச்சுவகண்டன் ஓங்கிய மலையின்கண் வீங்கிய யாக்கையோடு தேங்கிய செல்வம் பெற்றிருக்கின்ற பாங்கினாற்போலும் இவ்வாறு தூதுவரைவிட்டானென்று மற்றை அரசர்களுங் குத்திரமாகச் சொல்லி, அவர்களை நோக்கி உமதரசனது ஆஞ்ஞாசக்கிரத்தையுஞ் செல்வத்தையும் பறித்து இக்குமாரனுக்குக் கொடுத்த பின்னரே அவ்வேளை நம்மை அறிவானன்றி அதற்கு முன் அறியமாட்டான், அக்கன்னிகை இவ்விராசகு

மாரனை விவாகஞ்செய்தாரென்று முன்னரே அறிந்தார், தன் மலைமேல் மறைந்திருந்து வீரம்பேசுவது மாத்திரந்தான் அறிவன், இதுவே அவன் வீரமென்று பேசி, அவர்களை ஏசித், தூதர்காள்! நீவிர் சென்று நம் அரசனுக்கு உயிர்வேண்டுமாயின் இக்குமாரனை வந்து வணங்கி இவன் பணியினிற்கவும், மானம் வேண்டுமாயின் வலிலைவந்து போர்புரியவுஞ் சொல்லுமினென்றார்கள். இவ்வார்த்தைகளைப் போதியளவு காது புளிக்கக் கேட்டுத் தூதுவர் தம் ஊர்நோக்கிச் சென்றனர். காயமில் கடவுள் காயத்தினின்று நாளை இத்தூயகாளையே ஓகையோடு வாகைசூடுவான் என்றுரைத்தது. பூமிதேவி சேமமெய்தினள். கேட்டவர்கள் உள்ளமெல்லாம் வாட்டமின்று குளிர்ந்தன. தேவதுந்துபிகள் ஒலித்தன. போதனமாநகரெங்கும் உவகைமலிந்தது. திவிட்ட குமாரனுடைய திருமேனியில் ஒரு சோதிபிறந்தது. மடமாதர் இடத்தோள்கள் படிமீது துடித்தன. யுத்தவீரர் வாட்கள் மெத்திய பொலிவு அடைந்தன. இங்கே இப்படி நற்சகுனங்கள் நிகழ, மாறலர் பக்கத்தில் முரசமுதலிய பறைகளில் அரவ முதலிய விஷசெந்துகள் குடிகொண்டன. சந்திரமத்தியிற் தேன்கூண்டு தோன்றி நான்றன. தேர்க்கூம்புகளிற் காக்கைகள் தேக்கின. தரைத்தலத்தில் இரத்தமழை பெய்தது. தடமலைக் குடுமிகளிற் படு கவந்தங்கள் ஆடின. மங்கையர் இயல்பு திரிந்து தங் கணவரொடு பிணங்கினர். மாதர்கள் காதணிகள் கழன்று வீழ்ந்தன. சிரந்தொறும் முடிகள் சரிந்து தெரிந்தன. வேற்படைகள் கூர்ப்புமழுங்கின. வீரர்

கையில் விற்கள் பாரிற் தவறி வீழ்ந்தன. ஆடவர் இடத்தோளும் இடக்கண்ணுந் துடித்தன. பெண்களுக்கு வலத்தோளும் வலக்கண்ணுஞ் சலித்தன. சேனைகளின் நடுவே வானமீன்கள் வீழ்ந்தன. இங்ஙனம் அனேக துர்ச்சகுனங்கள் நடக்கக் கண்டும் இவைகளினாலே ஊனம் வருமென்னுது மானமே தானமெனக்கருதி அவ்விஞ்ஞையர்கள் எத்திசையும் யுத்தசன்னத்தராய் நின்றார்கள்.

மேலே அவர்கள் அவ்வாறுநிற்கப் பூமிக்குவந்து நேமிக்குத்திரும்பிய தூதர்கள்போய் அரசனைவணங்கி நடந்த சமாசாரங்களைக் கூறினார்கள். அதைக்கேட்ட அச்சுவகண்டன் அரவம் அழன்று கரளங் கக்கினாற்போலச் சிரித்துத், தன்முன்னின்ற வீரர்களை நோக்கி, நீவிர் பூமியின்கட்சென்று அங்குள்ள மன்னர்களையுஞ் சடியையுங் கொன்று வீரம்பேசிய அச்சிறியானையும் பிடிதது வாருங்களென்று ஆஞ்ஞாபித்தான். உடனே அங்கிருந்த விஞ்ஞைவேந்தர்கள் யாவரும் இரத கஜ துரக பதாதியென்னுஞ் சதுரங்க சேனையோடு போருக்கு எழுந்தனர். முரசதிரச் சங்கமுழங்கப் பறைகறங்க வாத்தியங்கள் ஒலித்தன. குடைகொடிசாமரைகள் எங்கும் நிறைந்தன. இன்னனவாய சகல படை அணிகளோடும் விஞ்ஞையர்கள் மணவணி இன்னமும் மாருத போதனமாநகர்க்கண் வந்திறங்கினார்கள். உடனே திவிட்டனுடைய சேனைகள் எழுந்து எதிர்ந்து அதிர்ந்தன. சிந்துரமுஞ் சயந்தனமுங் கந்துகமுங் காலாளும் எங்கும் மிடைந்து இடஞ் சிறிதும் பிறிதின்றி வழிநாட்டது.

இருதிறச்சேனைக்கும் உடனே யுத்தம் மூண்டது. தேரோடு தேரும், யானையோடு யானையுங், குதிரை யோடு குதிரையும், மலையும் மலையும் முகிலும் முகி லுங் கடலுங் கடலுங் கறுவிப்பொருததுபோற் சண் டைசெய்தன. வீரர்களும் வில் வாள் வேல் முதலிய பதினெண்ணாயுதங்களுந் தாங்கி ஒருவரையொருவர் வெட்டியுங் குற்றியும் அடித்துஞ் சமர்நடத்தினர். மாற்றலர் சேனைக்கெதிரே அருக்ககீர்த்தி வில்வளைத் து அத்திரப்பிரயோகஞ்செய்யவே, கரம்வேறு சிரம் வேறு, கால்வேறு மெய்வேறு, தொடைவேறு படை வேறாகச் சேனைகள் வெட்டுண்டன.

தூணிமுகத்ததுசோர்விலொர்கையொரு
பாணிமுகத்ததுபண்புறுவெஞ்சிலை
வேணுமுகத்ததுமண்டலம்வெங்கணை
காணுமுகத்ததுவோவுணர்காலே.

இரத்தம் உரத்த வெள்ளமாக நிறைந்தது. அருக்க கீர்த்தியோடு எருக்கிப் போர்செய்தற்குத் தனிவீர ராய் முனைவோரின்மைபாற், பலகிரிகள் தரணியில் ஓர் இரணியவரையொடு முரணியதொப்ப, அனேக விஞ் சையர்கள் மனோவீரத்துடன் எதிர்த்துக் கொதித்து மலைந்தனர். அப்பொழுது அருக்ககீர்த்தி உரப்பித் தரிப்பின்று அத்திரங்கள்செலுத்த அவை நிறைந்து புவி இருண்டது. விஞ்சையர் வென்னிட்டனர். அவன் ஒருகோல் தொடுத்தால் ஆயிரமாக, ஆயிரந் தொடுத் தால் நூறாயிரமாயின. கணை கணக்கின்றி ஓடி ஆகா யந்தொடங்கிப் பூமியிறுதியாக ஆசுகமென்று சொல்

வதேயன்றி அளவென்று கணக்கிட இயலாதிருந்தது. அவன் விட்ட சாயகங்கள் விண்ணிடைவரும் வித்தி யாதரரது கண்ணிடைப்புதைதர அவர்கள் கண்ணொளி இருண்டு மண்ணுளி உருண்டு புரண்டார்கள்.

இருள்பாயினவாலிதுவென்னெனவே
மருள்வார்வெருள்வார்மறைவார்மறிவார்
தெருள்வார்திரிவார்செருவார்கணையால்
உருள்வார்களுமாகியுடைந்தனரே.

முரசப்பறைகள் பறந்தன. யானைத்தலைகள் அறுந் தன. குதிரைக்கடல்கள் வறந்தன. தேர் அங்கங்கள் தறிந்தன. காலாட்களும் அனேகர் இறந்தார்கள். இவ் வாறு அனேகர் மடிய, எஞ்சிய கடுந்திறற்காலவீரர், படந்தொட உடன்றிடுஞ் சருப்பம் நிகர்ப்பார், பகை தடியும் இகலினர், பெருமலையை இடறியெழுந்தாற் போல, விழுந்துகுவிந்த படைநடுநின்று திமிறி ஓட் டெடுத்தார்கள். இதைக் கண்ட விஞ்சையதூதர்கள் விரைந்துபோய் அச்சுவகண்டனைத்தொழுது, மன்ன னே! நம்மவர்கள் பூமியிற்போய்ப் போர்செய்து அருக் ககீர்த்தி கரக்ககத்தினல் வீந்தார்கள். மீந்தவாகள் எல்லாரும் ஓடியொளித்தார்களென்று கிளத்தி,

நூற்பயம்பலவொடுநுணங்குகேள்வியே
போற்பயம்பலவொடுபுகழ்களேதரும்
வேற்பயங்கொண்டனர்விரவலார்நமர்
காற்பயங்கொண்டனர்காலவேலினய்.

என்று சால ஓலமிட்டார்கள்.

அச்சொல் அவனுக்குப் புண்ணிலே வேல்பட்டாற் போலத் தைத்தது. அவன்மனதிலே அதிககோபம் உண்டாகித், தனது மகாபலம்பொருந்திய சேனைக ளுந் தம்பிமாருஞ் சூழத், தன் அருங்கலாபிதான விலங்கலைவிட்டு இழிந்து வந்தான். வரும் வழியில் அச்சுவகண்டனுடைய தம்பிமாருள் மூத்தவன் இரத் தினகண்டன் நம்முடைய தமையன் வருந்தத்தக்க கா ரியங்களைச்செய்த சடியரசனை அவன்கிளையோடு கல்லு வோம், அன்றாயின் அக்கன்னிகையையுங் கணவனை யுங் கொல்லுவோம், அல்லது நாம் இங்கிருந்து உயிர் வாழ ஒல்லிலேமென்றான். அவன் தம்பி நீலகண் டன் பூமியிலுள்ள மானுடர்கள் நம்மோடு போர்செய் யத்தக்க வலிமையுடையராயினர் போலும்! மனிதர் தாறு வல்லரென்று தன் கோலவால்வளை எயிறுகள் இலங்க உலம்பினன். அவன் பின்னோன் வயிரகண் டன், வளைந்த கோரதந்தங்களையுடையவன், தமையன் மாரைநோக்கி நான் ஒருவனே சென்று பகைவர்கள் எல்லாரும் போர்க்களத்தில் உருளும்படி வெல்வே னென்றான். அவன் இளவல் சுகண்டன் கருடனோடு சர்ப்பங்கள் பகைப்பது நிகர்ப்ப மனிதர்களா நம்மோடு செருப்புரிவது! மிகநன்று மிகநன்றென்று கையோடு கைதட்டி நகைத்தான். இங்ஙனம் பம்பிய தம்பியர் நால்வர் வார்த்தைகளால் மனங்குளிர்ந்து, அரசன் அவர்களை நோக்கித், துணைவரே! தமது மகிமையை ஒருபொருளாக் கருதாத பகைவருடைய யுத்தகளத் தில் நும்பெயரை நீவிர் நிறுத்துகவென்று இறுத்த னன். இவ்வாறுகூறி அச்சுவகண்டன் பூமியிலேவர

அவனுடைய சேனைகளுந் திவிட்டகுமாரனுடைய சேனைகளும் நஞ்சுடனே நஞ்சு சென்று எதிர்த்தாற் போல எதிர்த்து யுத்தஞ் செய்தன. இருதிறச்சேனைகளையும் இவ்வளவென்று குணித்தல் இயலாவாயினும், மேலோர் கூறியவாறே இரண்டுகடலென்று சொல்வேமெனிற், கடலுக்கு இடையிடை திடர்களிருத்தலாற், சற்றுமிடைவெளியில்லாத இப்படைகளுக்குக் கடலும் நிகரல்ல. இரண்டு சேனைகளும் வேலினும் வாளினும் நெடும்போது போர்செய்ய, யுத்தவீரர்களுந் தாந்தாம் நின்ற இடங்களிற் கடுஞ் சமர்செய்து சேனைகளைப் பல்லாறுகக் கொன்று திரிந்தார்கள். அச்சுவகண்டனுடைய தோழன் அரிசேனன் இடக்கையிற் கேடகமும் வலக்கையில் வாட்படையுந்தரித்து, இறக்கவேண்டியவர்கள் எதிர்த்து வாருங்கள், பிழைக்கவேண்டியவர்கள் ஓடவழி பாருங்களென மொழிந்து வந்தனன். அவன் இப்படி அதிர்த்து வரக்கண்ட அருக்ககீர்த்தி தன்வில்லை வளைத்துப் பாணந்தொடுக்க முயலச், சேனுவீரனுகிய வியாக்கிரரதன் அருக்கனே! நினக்கு இவன் நிகரல்லன் யானே இவனேடுபொருவனென்று எதிர்த்து, அவனைநோக்கி அரிசேனனே! நீ என்னை அறிவாயே! ஆதலால் என்னுடன் போர்செய்ய வருதியென்றனன். அதனைக்கேட்ட அரிசேனன் அடா! வியாக்கிரரதா! யான் உன்னை அறியேனு? விஞ்சையர்பெண்ணை ஓர் எளிய மனிதனுக்குக் கொடுத்துக் கலியாணவீட்டில் வயிருரச் சோறுண்பவனென்று நன்கறிவேன் நன்கறிவேன் என்று நகைத்தான். வியாக்கிரரதன் அவனைப்

பார்த்துத் துட்டா! கன்னியர்களுடைய மணம் ஊழ் வழியேமுடியும் என்பது நூலோர்துணிபு, அதனையறியாது அயக்கிரீவனுடன் கூடிப்போருக்குவந்த நீ எவ்வளவு அறியாமையுடையை? வீண்வார்த்தை பேசியாவதென்? என்னை நீ இன்னும் அறியாய், அயக்கிரீவன் போலுமென்று மயக்கங்கொள்ளாதே, போர்செய்ய எத்தனியென்றுசொல்ல, இருவரும் வாட்போரிலே தா ்கற்ற வல்லமையெல்லாங் காட்டிக், களங்களும் பதங்களும் எதிர்த்துயுத்தஞ்செய்தாற்போல ஆகாயத்திலே போர்செய்தார்கள். அரிசேனன் தன்படைப் பயிற்சியால் முன்வீசும் வாட்படையைமாற்றி வியாக்கிரரதன் அவன்மார்பு இரண்டு கண்டமாகும்படி வெட்டினன். அவன் விழவே திவிட்டகுமாரன் சேனைகள் யாவுந் தமது வெற்றிபற்றிக் கடல்போல் ஆரவாரித்தன. விஞ்சையசேனைகள் அச்சம் அடைந்து ஓட்டமெடுத்தன. அப்பொழுது அச்சுவகண்டனுடைய சேனு வீரர்களில் ஒருவன் குணசேனன் வந்தெதிர்த்துச், சேனைகளைச் சின்னபின்னமாக வதைக்கும்போது, அருக்ககீர்த்தியுடைய சேனுவீரனுகிய இந்திரகாமன் அவனைத் தன் வாட்படைக்கு இரையாகக் கொடுத்தான். அதனைக்கண்ட வரசேனன் தன்கையிலேந்திய வில்லுடனே பாய்ந்தெதிர்த்தனன். அவனைக் காமுகனெதிர்த்து விற்போரியற்றித் தன் அம்புகளாற் பிளந்தான். வரசேனன் இறந்ததலைக்கண்டு, அச்சுவக்கிரீவன் தமர்களிலொருவனுன அரிகேதனன் நேர்ந்தவாறு தன்வாயால் வீரம்பேசிவந்து, யானை குதிரை தேர் காலாள் எனும் நால்வகைச் சேனைகளும் இறக்குமாறு தன்

கைச் சூலபூசலால் மூலநாசஞ்செய்து நின்றான். அவனை எதிர்த்து வியாக்கிரரதவீரன்வர இருவரும் மாறி மாறி அனேகவிதமான மாயப்போர்களைச் செய்தனர். அரிகேதனன் வியாக்கிரரதனுடைய மார்பிலே சூலத்தாற் குற்றினான். வியாக்கிரரதன் தன் வாள்வலிமையைக் காட்டிக் குற்றிய சூலமும் அரிகேதனன் கோலமும் இருபிளவாக எற்றினான். வித்தியாதரசேனை புறமிட்டோடினது. அதுகண்டு தூமகேதுவந்து,

மலையெடுத்திடுகோமாநிலம்பிளக்கோ
மறிகடலறவிறைத்திடுகோ
உலைமடுத்துலகம்பதலையாவூழித்
தீமடுத்துயிர்களட்டுண்கோ
சிலையிடத்துடையார்களைவலந்துடையார்
சிலர்நின்றுசெய்வதீங்கென்றோ
நிலையிடத்தவருணிகரெனக்குளரேல்
நேடுமின்சென்றெனநின்றான்.

அவனைச் சுலனரதன் எதிர்த்துக் கொடுஞ்சமர் ஆடினபோது சுலனரதன் கைத்தண்டாற் தூமகேது வீடினன். தூமகேதனனும் ஒருவனாற் பூமியில் இறப்பானோவென்று அச்சுவகண்டன் சேனை மயங்கிற்று. அத்தருணத்தில் அச்சுவகண்டனுடைய சேனாவீரன் அங்காரவேகனுந் திவிட்டனது சேனாவீரனாகிய தேவசேனனும் எதிர்த்தார்கள். அவர்கள் யுத்தத்தில்,

வாள்வீசுமாறும்வடிவேலின்வந்த
வடிவேல்விலங்கும்வகையுந்
தோள்வீசுமாறுமவைமீளுமாறும்
இடைசொல்லும்வீரமொழியுந்

*தாள்வீசுபோழ்துகழலேங்குமாறும்*
*எதிர்தாங்களார்க்குமொலியும்*
*நாள்வீயலன்றியுரைவீயயாவர்*
*நவில்வார்நமக்குமரிதே.*

அடுபோரில் இலைமேறோடு நெடுநேரஞ் செல்வதாவென்று அங்காரவேகன் இடிபோல ஆர்த்து, ஒருபிழையா வேலை நீ இதனால் இறந்தனையென்றெறிய, அதனைத் தேவசேனன் தன் வாளிறாற் றுணித்து வீழ்த்தான். அங்காரவேகன் வேறொரு வேல் ஏந்திவரத், தேவசேனன் வேற்படைபிடித்த அவன் கையை வெட்டி வீழ்த்தினன். ஒருகரம் வீழ்ந்த அங்காரவேகன் மற்றக் கைகொண்டு போர்செயவரக்கண்ட தேவசேனன் இரங்கி, இனிப் போர்வேண்டாம், நீபோய்விடு என்று சொல்லவுங், கேளாது எதிர்த்து உடற்றவே, தேவசேனன் அவன் சிரசை வெட்டி வீழ்த்தினன்.

அதன்பின் விஞ்சையர்பக்கத்திற் கருடத்துவசனுந் திவிட்டன் மாமனாகிய சுவலனசடியும் எதிர்த்தார்கள். கருடத்துவசன் சடியரசனைநோக்கி, நீவிர் வயதினன் முதிர்ந்த குரவிராதலின் என்னோடு போர்செய்தல் நுமக்கியலாது, வேறொருவன் வந்து பொருவானாக, தாங்கள் நீங்குவதே உறுதியென்று சொல்லச், சடியரசன் குரவர் என்னும் உபசாரம் அவ்வளவில் நிற்க, அமரில் இஃதாகாது, யாவராயினும் பகைத்தவரோடு போர்செய்வதே தகுதியென்று எதிர்த்து நின்றான். இருவரும் விற்போர்புரிந்தனர். சடியரசன் தன் கணையால் எதிரியின் வில்லையும் அம்பையும் இறுக்

து அவன்மாயத்தையும் அறுத்தான். அப்போது கருடத்துவசன் விட்டெறிசக்கரம் முதலிய ஆயுதங்களை எறிந்து செருவுஞற்ற, இவர்கள் ஏறிய யானைகளும் ஒன்றோடொன்று இகல்விளைத்தன. கருடத்துவசன் யானை புறமிட்டது. அதுகண்ட கருடத்துவசன் போதகத்தினின்று குதித்து, வாளும் பரிசையும் ஏந்தி நேர்ந்தபொழுது, சடியரசன் அவனது சிரத்தையுங் கரத்தையும் உரத்தையும் போக்கி, ஆளையும் வாளையுந் தனது வாளிக்கு இரையாக்கினான். கருடத்துவசன் உயிர்விட்டிறந்தபோது விஞ்சையர் சேனைகளெல்லாம் வாடித், தத்தமக்கோர் புகலிடந் தேடி, அங்கும் இங்கும் நாடி, அமர்க்களத்தைவிட்டு ஓடின.

சேனைகளெல்லாம் ஓடும்படிவென்று மாற்றலர் நின்றதைக்கண்ட சிறீசேனன் நல்லது! நல்லது! என்று சிரித்துப், புறமிட்ட விஞ்சையவேந்தர்களை நோக்கி, ஓ! அரசர்களே! நீங்கள் இன்று தோற்றோடினால் நாளை உங்கள் மனைவியர் கண்ணிற் சற்றும் வெட்கமில்லாமல் எப்படி விழிப்பீர்கள். இவ்வுடல் சிறிது நாளில் அழியும். புகழானது எந்நாளும் நிலைபெறும். கீர்த்தியைக்கருதாது மரியாதையைக்கைவிட்டோடும் அரசர்களே! தன் மயிரில் ஒன்றை இழந்தாலும் உயிர் வைத்திராத கவரிமாவையாவது பார்த்து உங்கள்மானத்தைக் காப்பாற்றுங்களென்று சொன்னான். விஞ்சையர்கள்கேட்டு மீண்டுவரச், சிறீசேனனும் ஆண்மையாகிய சுடரைத்தூண்டிப் போர்க்களமுழுதுந் தன் வீரப்பிரதாபம் பிரகாசிக்கச்செய்தான். இருதிறத்துப்

படைவீரரினும் அனேகர் கண்டதுண்டமானார்கள். ஆர்முகஞ் செந்நீர்முகம் ஆழத், தேர்முகம் பாழாயினது. சிறீசேனன் தன்குதிரைமேற்சென்று, காலாந்தகன்போல நின்று, வீரர்களே! கேளுங்கள்! யான் விஞ்சையரோடுஞ் சமர் புரிவேன், மானுடரோடும் அமர் செய்வேன், வல்லீராயின் என்னுடன் பொர வாருங்களென்றுசொல்லச், சிறீபாலன் உடனேவந்து எதிரூன்றினன். இருதிறத்தினரும் ஒருவரிலொருவர் மருவிச் செருவிளைத்தனர். சிறீசேனனுஞ் சிறீபாலனுங் குதிரைமேலிருந்து வில்வளைத்துப் பாணங்களைத் தொடுத்தும், வேல்முதலிய ஆயுதங்களை எறிந்துங், கடுஞ்சமர் இயற்றும்போது, சிறீபாலன் சிறீசேனனது வில்லையும் அவன்விட்ட வேற்படையையும் வெட்டி ஒழித்தான். அப்போது மாற்றலன் தன் நாந்தகத்தை உருவி இவன்தோளிலே மழித்தான். சிறீபாலன் அவ்வாளைத் தூளாக்கி அழித்தான். விஞ்சையன் குதிரையோடும் ஆகாயத்திலெழச், சிறீபாலனுந் தன் துரகத்தோடு ஆங்கட் சென்று அவனுடன் போர் செய்து, அவன் தலையை அறுத்துவீழ்த்தினன். திருநிலையநகர்க்கு அதிபனை சிறீசேனன் இறந்துவிழ விஞ்சையவேந்தர் மீட்டும் வெரிந் காட்டினார்கள்.

அச்சுவகண்டன் மகன் கனகசித்திரன் அதைப் பார்த்து, முன் தன்பட்சத்தானகிய சிறீசேனன் சொன்னதுபோல அஞ்சியோடினவர்களை அனேக வசைமொழிபேசித், தானவரல்லர் வானவரல்லர் மானவருக்கு விஞ்சையர் அஞ்சினர்! அதிசயம் அதிசயமென்

று வளைவுடையெயிறுகள் ஒளிவிட நகைத்துப், பின் ஒருவானைக் கையில் எடுத்துக்கொண்டு சேனைக்குட் புகுந்து, அண்டினர் எவரையுங் கண்டதுண்டமாய் வெட்டிவீழ்த்தி, மானமேல்கொண்டு இவ்வீனரோடு ஆடுதல் மானமன்றென்று பாதசாரியாய்ப் புகுந்து பொருதான். பார்த்த திசைதோறும் யாவர்க்கும் அவனாய் இருந்தது. யானைகள் குதிரைகள் வெட்டுண்டன. தேர்கள் பொடிபட்டன. எதிர்த்த அரசர்கள் கால்வேறு கரம்வேறு குடல்வேறு உடல்வேறாய்ச் சின்னாபின்னப்பட்டு உதிரநீரிற் குளித்தார்கள். இதைக்கண்டு திவிட்டன் சேனை இவனோடு யார் எதிர்ப்பாரென்று அச்சமடைந்து நிச்சலம் அற்றது.

இவ்வாறு இவன் சமராட அச்சுவகண்டன் தம்பியர்கள் நாலவருந் தங்கள் குமாரன் கனகசுந்தரன் வாட போர்செய்யச் சென்றானென்று கேள்வியுற்று யானைகளின்மேல் இவர்ந்து, தாங்களும் மகன் கனகசித்திரனோடுசேர்ந்து, கனவிசித்திரமாகச் சமராடினர். முன் ஆற்றாது தோற்றோடிய வித்தியாதரசேனைகளும் அத்தருணத்திற் திரும்பிவந்தன. திவிட்டகுமாரனுடைய சேனைகளும் வெட்டுண்டுவீழ்ந்து நிணமுந்தசையும் பிணமுமாய்த் திணிந்து, போர்க்களமுழுதும் புற்றெடுத்தது போன்றிருந்தது. உதிரவெள்ளம் அவற்றை வாரிக்கொண்டு சென்றது. இப்படி இவர்கள் போர் செய்வதைக்கண்ட விசயகுமாரன் தரியலர் தானைக்குட் புகுந்து, போர்செய்ய ஆரம்பித்து, விஞ்சையர் இரத்தத்தால் அவ்வமர்க்களமாகிய வயலுக்கு வெள்ளம்

பாய்ச்சித், தன் நாஞ்சிற்படையால் உழுது, புகழாகிய
ரைத்து விளைவித்தான. அதைக்கண்ட அச்சு
வகண்டன் கனிட்டர்கள் நம்மை எள்ளி
டலோடு நள்ளமர்க்களத்தே துள்ளி ஆடுகின்ற இவன்
யாரென்று வினவினார்கள். அங்குநின்றோர் பயாபதி
யரசன் மக்களுள் மூத்தவன் விசயன் இவன்தான்
என்று உரைக்கக்கேட்டுக், கோபாதீதராய், நால்வரும்
இவ்விசயன் ஒருவன்மீது தம் யானைகளைச் செலுத்
தினார்கள். இரத்தினகண்டனும் அவன் சகோதரரும்
வந்து விசயனைவளைத்துப் போர்செய்தபோது விசயன்
விஞ்சையர்களுக்குத் தோற்றுவிட்டானென்று அப்
போர்க்களம் முழுதும் ஒரு வதந்தி எழுந்தது. அப்
போது கடற்றிரை மடங்கினாற்போலப் பயாபதியரச
னுடைய சேனைகள் வென்னிட்டு மீண்டன. அவர்கள்
ஓடுங்காலத்தில் விசயனுக்கு வாகனமாய் ஒருசிங்கே
றும் புதியதோர் அலாயுதமுந் தேவோபாதானமாய்
வந்துசேர, அவன் அவ்வரசசீயமீதிவர்ந்து புதிய நாஞ்
சிலுந்தரித்து வந்தனன். அம்மடங்கல் ஒருதரங் கர்ச்
சிக்கவே, மாற்றலர்சேனை ஊற்றம் அழிந்தது. பகை
வர்கள் அவன்மேற் தத்தம படைகளேவ அவன் அவர்
கள் ஏவியபடைகளை அழித்து ஏவினரது மார்பையும்
யானைகளையுங் கலப்பையால் உழுதான். விசயன் ஒரு
வனாக நின்று யாவரையுந் தனது நாஞ்சிற்படையால்
மாய்க்கக்கண்ட கனகசித்திரன் தன் வாளைத்துடைத்
துக்கொண்டெதிர்க்க, அந்நாஞ்சில் அவன்தோளிலும்
அழுந்தியது. அவனும் மாய்ந்தான். இரத்தினகண்
டன் இதனைக்கண்டு, இப்பூமியிலுள்ள மனிதருடைய

பேரையும் ஆண்மையையும் இப்பொழுதே முடித்து விடுகிறேனென்றுகருதி, ஒருமலையைத் தன்கைகளாற் பிடுங்கிக்கொண்டு, கண்டோரஞ்ச, வரிந்தகச்சையும் விரிந்ததாடியும் முரிந்தபுருவமும் எரிந்தமனமும் உடையதோர் பெரியவடிவோடு வருதல் கண்டு. பயா பதியுடையசேனைவீரர் புறமிட்டோடினார்கள். இதனை வித்தியாதரகுமாரன் அருக்ககீர்த்தி கண்டு தன் ஆவி நாழிகையிலே இருந்த ஒரு வச்சிரபல்லவத்தை எடுத்துக், கையிற் தரித்து, வழிபாடியற்றி இரத்தினகண்டனை இலக்குவைத்தேவினான். அதுசென்று எதிரியையும் அவன் தரித்த பூதரத்தையும் பிளந்து சமீபத்தில் நின்றவர்களையுங் கொன்றது. எடுத்தவரையோடு கூட அடித்து வேறொருவரையும் விழுந்தன்மைபோல இரத்தினகண்டன் களத்தில்வீழ, அதனைக்கண்ட ஒற்றர்கள் ஓடோடிச்சென்று இச்சமாசாரம் முழுதையும் அச்சுவகண்டனுக்குச் சொன்னார்கள். தம்பிமாரும் புதல்வனும் இறந்தார்களெனக் கேட்டபோது அச்சுவகண்டன் உருமேறுண்ட அரவம்போல வருந்தி இனி யான் வாளா நிற்பதிற் பயனென்னையென்று கருதிக் கடல்சூழ்ந்த நிலவுலகத்துள்ள உயிர்களெல்லாவற்றையும் ஒருமுறையில் வாரிச்சென்று பிறவாழியிலிடும் மாயாதேவியைத் தியானித்தான்.

சண்டவேகையென்னும் மாயாதேவதை வந்து அரசனே! என்னபணிவிடையெனவினவ, அச்சுவகண்டன் அத்தெய்வத்தைநோக்கித், தெய்வமே! இப்பூமியில் என்னுடன் எதிர்த்த பகைவர்கள் ஒருவரும்

இல்லாமல் அழியும்படி சங்காரஞ்செய்து உதவுகென வேண்டினன். அவன் வேண்டுகோளுக்கிசைந்து அம் மாயாதேவதையானது கூற்றுவனைக் கூவி, இற்றைப் பொழுதில் இவ்வுலகத்துயிர் முழுதும் என்வாயில் அகப்பட்டு முடியும், நீயும் உன் நீதிநெறியை நடத்து கெனக்கூறி, ஊனைவிரும்பிய அநேக பிசாசங்கள் இன்றுதான் எம் வயிறு நிறையுமென்று துணங்கைக் கூத்தாடிச் சூலப்படைகளையேந்திக்கொண்டு சூழ்ந்துவரப், பிரசாபதியுடைய சேனைமேல் நடந்தது. தெற்றி நடக்குந் தாளும் உயர்ந்தபரடும் வற்றியவுடலும் பகுவாயும் நகமயிரும் பேழைவயிறும் பீலிமாலைமார்புங் கழற்காய்போற்கழலும் வட்டக்கண்ணும் உடையனவாய்த் தோன்றிக், கூளிச்சேனைகள் ஆரவாரித்தன. வரைகளெல்லாம் எடுபட்டுருளும்படி ஒரு பிரசண்ட வாயு எழுந்தது. பார்த்த இடமெங்குந் தழற்பிழம்பு வளர்ந்தது. கடலானது திரைகளைப் பூமி அதிரும்படி வீசியது. எழுந்த பிரசண்டவாயுவானது வரைகளையும் மரங்களையுங் களைந்தெறிய, நெருப்பானது களைந்தெறியப்பட்ட அவைகளை எரிக்கக், கடலானது உலக முழுதையுந் தன்னகத்தடக்க, இவ்வகைய மாயங்களைச் செய்துகொண்டு நிமிர்ந்த சண்டவேகை ஒரு கரியவரை பெரியது தெரிந்தெடுத்து உலகமுழுவதையும் மூடி மேலே கவித்தது. உடனே பூலோகம் முற்றும் ஊழியிருளாயினமையால் அரசன்சேனைகள் தாங்கள் போதற்கு இடமில்லாமையாலுங் கண்கள் ஒளியிழந்து இருளடைந்தமையாலும் ஒருவர்மீதொருவர் முட்டிக்கொண்டுந் தாளொடு தாள்கள் தெற்

றுண்டுந் தோளொடு தோள்கள் உரிஞ்சுண்டும் பல
வாறு உலைந்தார்கள். இங்ஙனம் நிகழுங் காலத்துத்,
திவிட்டகுமாரன் தன் மைத்துனன் அருக்ககீர்த்தி
யைநோக்கி, இஃதென்ன இப்படிவருவதென வினவ,
அவன் சொல்வான்: அச்சுவகண்டன் ஏவிவிடப், பகை
வரை உண்ணுஞ் சண்டவேகை வருவதுபோலும்;
இஃது அவனால் அனுப்பப்பட்டதாயின் நம் அனைவரை
யும் உண்டன்றித் திரும்புவதின்று. இதனைத்தடுக்க
வல்லவர் ஒருவருமில்லை என்றனன். இளையநம்பி அ
ருக்ககீர்த்தியைநோக்கி மைத்துன! இதற்கு நீரும
இவ்வாறு அஞ்சிவிட்டீரோ? என்று சிரித்து, ஒருபே
யோ நம்மேல் இவ்வளவு ஆக்கிரமத்தோடு வருவ
தென ஆக்கிரகம் உளத்தில் மீக்கொள, ஆகாயமளாக
மும் அஞ்சத்தக்கதோர் மாகாயவடிவங்கொண்டனன்.
அப்போது உற்றவிடத்து உதவுந் தோழர்போலும்
பாஞ்சசன்னியம் வலக்கரத்திலுஞ் சார்ங்கம் இடக்
கரத்திலுந் திவிட்டகுமாரன்பால் வந்து சேர்ந்தன.
உடனே அவன் வலம்புரியை வாயில்வைத்தூதி, வந்த
வில்லைக் கையிலேந்தி வளைத்து, ஒருநாம ஊங்காரஞ்
செய்தனன். சண்டவேகை அச்சமடைந்து, கொண்ட
வடிவத்தைவிண்டு, பண்டைரூபத்தோடு நிலத்தில்
நின்று எழுந்து, கண்ணுக்கெட்டாமல் ஓடிவிட்டது.

அவ்வேளையில் அச்சுவகண்டன் தானேவிய மாயா
தேவதை தன் பரிவாரப் பேய்களைத் திரையச்செய்து
கொண்டு ஓடியதைக்கண்டு, கையோடு கைகொட்டி
இதன்வலி நன்றாயிருந்ததே! என்று நகைத்துக், கண்

களிலிருந்து கோபாக்கினி சிதற அதரத்தை மடித்துக் கடித்து, உழையனைநோக்கி என் ஒருத்தலை வருத்துக என்றான். அங்ஙனமே அரசுவாவர, அதன்மேல் ஆரோகணித்து யுத்தசன்னத்தனாய் வருதலைப்பார்த்த அரசசேனைகளெல்லாம் அஞ்சியோடின. அப்போது திவிட்டகுமாரன் தன் சார்ங்கத்தைக் கையில் எடுத்தான். ஆகாசத்தினின்று, வளைந்த மூக்குங் கிளர்ந் தெறிக்குஞ் சிறுகண்ணுமாய்த், திசைகளையெல்லாஞ் சேரமூடினாற்போலச் சிறகுகளை விரித்துக்கொண்டு கருடபகவானும் வந்து சேர்ந்தான். திவிட்டன் அவனை வலங்கொண்டு அவன் மீது இவர்ந்துவரக்கண்ட அச்சுவகண்டன் அவனைநோக்கி, வீரனே! உன்போல் அறிவில்லாத தானவர் அனேகர் என்னோடெதிர்த்து இறந்தார்கள். ஏனையோர் என்னைத் தொழுது வாழ்ந்தார்கள். வானவர்களும் எனக்கஞ்சி இன்றுகாறுஞ் சேணிடை மறைந்துதிரிகின்றார்கள். நீ ஒருவன்றான் உன்னுயிரை இழக்கும்படி நின்றாய். அச்சுவகண்டன் எளிய மனுடரோடு போருக்குப் போயினனென்று அனைவரும் என்னை இகழ்வரென்றன்றே! நீ சொல்லியனுப்பிய தீச்சொற்களைக்கேட்டும் யான் அடக்கிக் கொண்டிருந்தேன். அதனை அறியாது நீ உன்னுயிர் மேற் பற்றின்றி என்னை அனல்விக்கின்றாய் என்று கூறினன். திவிட்டநம்பி அவனைநோக்கி அடா! அச்சுவகண்டா! நீ உன்வரையிலிருந்து இவ்வுரைகளைக் கரைவதன்றி என் முன்னிலையினும் வந்து பொரிகுதி; இனி இதனை யான் ஆற்றகில்லேன் என, அச்சுவகண்டன் இச்சிறியவன் உரைகள்வந்து என்செவிகளைச் சுடு

கின்றன. யான் இனிப் பொறுக்கமாட்டேன். இவன் பெயரும் இவ்வுலகத்தில்லாமல் அழித்துவிடுகிறேன் என்று தன்கை வில்லைக் கோட்டிக் குணத்தொனி செய்து சரமழை பொழிந்தனன்.

அவ்வம்புமாரியைக் கருடப்புள் தன் சிறகரால் உதறிவிட, அவைகளெல்லாஞ் சிதறுண்டு புடையில் வீழ்ந்தன. அதுகண்ட அச்சுவகண்டன் இளையகுமாரன் மீது தேவப்படைக்கலங்களைச் செலுத்துவான் நினைத்து, வில்லைவளைத்துச் சர்ப்பாஸ்திரந் தொடுத்தான். அஃது அந்தரோந்தரமாய்க் கடுவிடம் உமிழ்ந்து கொண்டு வருதலை நோக்கித் திவிட்டகுமாரன் கருடாத்திரத்தை விடுக்க, அது வந்து உரக பாணத்தைத் தன் மூக்கினுற் றுண்டித்து அழித்தது. அச்சுவகண்டன் அதை நோக்கி உதாசனாத்திரத்தைப் பிரயோகித்தான். திவிட்டன் வருணாத்திரத்தினால் அதனை ஒழித்தான். அச்சுவகண்டன் உலகமெல்லாவற்றையுந் துயில்விக்கும் நித்திராபாணத்தை விட அரசகுமாரன் துயிலெழுப்பும் தூசுர பாணத்தை ஏவி அழித்தான். அச்சுவகண்டன் சீறி, நான் செலுத்தின தேவப்படைகளை விலக்கினான். இனி இதனால் இவனைக் கொல்வேனென்று கருதித் தன் ஆஞ்ஞா சக்கரத்தைக் கையிற்றாங்கி, வீரனே! நீ இன்னும் எதிர்த்து யுத்தஞ் செய்வாயோவென்று சிரித்தான். திவிட்டகுமாரன் அவனைநோக்கி, அச்சுவகண்ட! நீ தாழ்க்காது எய்த தெய்வாஸ்திரங்களெல்லாம் அழிந்து போனதினால் வருந்தி, வீழ்ந்தான் சிரித்தான்

வெட்கத்திற்கஞ்சி என்றாற்போலப் பாவனைகாட்டி, என்னை ஆழியினால் வெருட்டுகின்றாய்; நீ மிகவுந் துன்பம் அடைந்தனையென்றான். அச்சுவகண்டன் தான் கொண்ட திகிரிப்படையைத் திருகி வீச, அப்படை கான்ற அக்கினிச் சுவாலையானது அரசகுமாரனைப் பிறர் காணாது மூடியது. அதைப்பார்த்தவர்களெல்லாருங் கவன்றனர். சக்கரப்படையோ திவிட்டகுமாரன் எதிரேவந்து அவனைப் பிரதக்கிணஞ்செய்து அவன் வலப்பாகத்திலே நின்றது. திவிட்டன் அதனைத் தொழுது தன் கையிற்பற்றி அச்சுவகண்டன் மீது தூண்ட, அதுசென்று அச்சுவகண்டன் மார்பைப் பிளந்து தலையை அறுத்து அவன் ஏறிய அரசுவாவையும் வீழ்த்தியது. மேகமானது தான் படிந்த மலையினின்று புரண்டு வீழுமாறுபோல அச்சுவகண்டன் யானையினின்று சரிந்து புரண்டு விழுந்தனன்.

நல்வழியிற் தவறாத நீதிமானொருவனுக்கு அறிவீனன் செய்த தீமை, செய்தவனையே செகுக்குமாறுபோல அச்சுவகண்டன் விடுத்த நேமி அவனையே தடிந்தது. அதனைக் கண்டோர் எல்லாரும் அவனுடைய பெருமையையும் அருமையையும் முன்னறிந்தவர்களாதலாற், சத்துருக்கள் மித்துருக்களென்ற வித்தியாசமின்றி, யாக்கை நிலையாமை செல்வ நிலையாமை ஆற்றல் நிலையாமை முதலியவற்றையும் ஊழ்முறையையும் மனத்தில் நினைத்து,

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

என்று தங்களுள்ளே வருந்தினார்கள். இத்தருணத்தில் அன்னமனையார் அச்சுவகண்டன் தேவிமார் இதனைக்கேட்டு யுத்தகளத்தில் வந்தனர். அவர்களுள் அச்சுவகண்டனுடைய பட்டத்துத்தேவி தன் நாயகன் இறந்துகிடந்த தன்மையைக் கண்ட மாத்திரத்திற் கண்ணீருள் ஆழ்ந்துழுழ்கி மண்மீது வீழ்ந்துமாழ்கி வெற்றுடலமாயினாள். அவன் பின்வரைந்துகொண்ட மாதராயினார் தங் காதலனைக் கண்டு கூந்தல் அவிழ, மஞ்ஞைகள் பூமியில் வீழ்வனபோல வீழ்ந்து, பிரஞ்ஞை கெட்டுப், பின்பு சற்றே மயக்கம் நீங்கி, இதயம் உதகமாய் உருகவும் பிரியாத உயிரினராய்த், தங்களைக்கண்ட வன்னெஞ்சரும் மனதுகரைய,

அரைசர்கோவேயடலாழிவலவவார்க்குந்தோலாதாய்
புரிசைநகரநூற்றொருபதுடையாய்பூமிமுழுதாண்டாய்
உரைசெய்துலகம்பாராட்டுமொளியாயோடையானையின்மேல்
வரைசெய்தனையதிரடோளாய்மறிதல்பொருளோவயவேந்தே.

வானுமண்ணுமுடனஞ்சும்வரையாய்மன்னர்மணிமுடிமேற்
தேனும் வண்டும் பலசென்று திளைக்குஞ் செம்பொற் செறிகழ
நானமண்ணியகிறேக்கிநாவிகமழுமெழிலாகம் [லாய்
ஈனமண்ணிலிவர்காணக்கிடத்தலினிதோவியல்வேந்தே.

குழவிஞாயிற்றெழிலேய்க்குங்குழம்பார்கோலக்குங்குமமே
மெழுகிமீதோர்மணியாரம்வீசிக்கிடந்தவிரையாகம்
ஒழுகுகுருதிச்சேறுடியோடையானைநுதன்மீது
வழுவிவீழ்ந்தவகைநாடின்மாயம்போலுமறவேந்தே.

என்று அவன் அழகையுஞ் செல்வத்தையும் வீரத்தையும் புகழையும் இன்னணம் பலவாறுசொல்லிப் புலம்

பினார்கள். பின்னர் மஞ்சுதோயும் வரையை எஞ்சலில் காலம் ஆண்ட அச்சுவகண்டனையும் அஞ்சலில் வலி யினராகிய அவன் தம்பியரையுங் கனகசித்திரனையுந் துஞ்சிய மற்றைத் தமர்களையும் வேந்தர்களையும் மஞ் சுந் துகிலும் பூம்பட்டும் பரவிய படுக்கையில் அந்த ணாளர் செந்தீவாய் முந்தித் தகனஞ்செய்யப், பிந்தி அவர்கள் தேவியர் விஞ்சையரூரை அடைந்து, தங்கள் திருமங்கலியங்களைக் களைந்து, காமன் பவனிவருந் தம்மனமாகிய வீதியை அவன் வாராதொழியக் கற்பா கிய வேலியால் அடைத்து, நிறையென்னுந் தாட்பா ளினாற் பொறிகளாகிய கபாடங்களை மூடினார்கள்.

இஃதிங்ஙனமாக, அக்கினிபோன்ற ஒளியையுடைய சக்கராயுதம்பெற்ற திவிட்டகுமாரன்மீது தேவர்கள் பூமாரிபொழிந்து வாழ்த்தினார்கள். தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் கோஷித்தன. அதுவேயுமன் றித், திவிட்டன் அச்சுவகண்டன் ஏவிய தேவபாணங் கள் எவற்றையும் அறுத்து அவன்விட்ட சக்கரப்ப டையைக் கவர்ந்த சித்திரமானது யாவரும் அதிச யித்துத் துதிசெயற்பாலதென்று வானத்தினின்று ஓர் பேரொலியெழுந்தது.

இறவாதொழிந்த விஞ்சையர்கள் எல்லாரும் பெரி து கலங்கித், திவிட்டகுமாரனுடைய அடிகளில் அஷ் டாங்கமாக வீழ்ந்து வணங்கி, ஐயா! யாங்கள் மிக வும் அஞ்சினேம் என்றனர். அன்னோன் அவர்களைப் பார்த்து நீவிர்கள் அஞ்சாதீர்கள், விஞ்சையருலகிலே

மீட்டுஞ்சென்று உறைகுதிரென்று உரைத்ததுமன்றி, "விஞ்சையர்கள் யாவருந் தத்தம உலகடைந்து வாழ்வார்களாக" என்று பறையுஞ் சாற்றுவித்தான்.

இஙஙனம உததரவள்ததுத திவிட்டகுமாரன கருடனை விட்டிறங்கி அரசுவாவின் மேல் ஆரோகணித்து, நாற்றிசை அரசரும் போற்றிசைப்பத் தம்பாடியை அணைந்து, விசயனேடும்போய்ப் பிதாவாகிய பிரசாபதியினது சீர்பாதங்களை வணங்கினன். வணங்கும்பொழுது, சுரமையதிபன், பக்கத்திற் தொழுது நிற்கும் அரசர்களுடைய முகங்களைநோக்கி, அரசர்காள்! யான் யாதோர் தீதுமற்ற செல்வர்களாகிய இக்கோதில் காளையருடையை தாதையென்று யாருஞ் சொல்லும்படியானதோர் பூதியைப் பூதகாலத்தியற்றிய மாதவத்தாற் பெற்றுளேன். ஆதலால் இவர்களுடைய அரசகோலத்தையும் என்கண்ணிணைகள் காதலோடு காணல்வேண்டுமென்றான். சடியரசன் முதலாயினேரும் உவந்து அவ்வாறே அவர்களுக்குக் கிரீடாபிஷேகஞ் செய்யும்படி முயன்று முரசறைவித்தனர்.

அப்போது பூமண்டலத்தரசர்கள் கங்கை சிந்து என்பவைகளின் தீர்த்தங்களைப் பொற்குடங்களிற் கொணர்வித்து, மங்கலதூரியம் முழங்க, மறையவர் முனிவர்கள் ஆசிகூற, மஞ்சனம் ஆட்டினர். தேவகணங்கள் திருப்பாற்கடலின்கணுள்ள பாலைக், குடங்களில் முகந்து கொணர்ந்து, திவிட்டநம்பி திருக்கிரீடத்திற் பெருக்கமுறப் பெய்தார்கள். வித்தியாதரர்

களுந் தாம்வசிக்கும் மந்தரமலையிலுள்ள தீர்த்தங்களைக்கொணர்வித்து, அரசகுமாரனாகிய திவிட்டனது மணிமுடிமீது மங்கலவாழ்த்தோடு அபிடேகஞ்செய்தனர். பின்பு திருமகள் வந்து சேர்தற்கேற்ற உருவினானுந் திருவினானும் பருவத்தானுந் திவிட்டகுமாரனையே பட்டத்தரசனாகக் காப்பிட்டு, வெள்ளிமலைச் சக்கரவர்த்தியாகிய அச்சுவகண்டனை மாய்த்து அவனாழியைத் தனதாக்கினனாதலின், இவனே வசுதேவன் குமாரனாகிய வாசுதேவன் என்னுங் கிருட்டினமூர்த்தியென்றுரைத்து, மிக்க ஒளியுள்ளதோர் இரத்தின கிரீடத்தை அணிந்தார்கள். மூத்தகுமாரனாகிய விசயனையும், உருவத்தாலும் படைக்கலத்தாலும் வீரத்தாலும் இவனே பலராமன் என்று சாற்றி அவன் அவதாரத்தைப் போற்றி முடி சூட்டினார்கள்.

இச்செய்கைகளைத் தரிசித்தவர்கள் அனைவரும் மங்கலவாழ்த்துச் சொன்னார்கள். முரசுமுதலிய மங்கல தூரியங்கள் முழங்கின. அத்தருணத்தில் முன்னே வந்த சக்கரஞ் சங்கு தனுவோடு, தண்டும் நவிரமுங் கூட வந்து சேர்ந்தன. ஆகவே இளையநம்பி, தனது சுதரிசனங் கௌமோதகி நாந்தகம் பாஞ்சசன்னியஞ் சார்ங்கமாகிய சக்கரந் தண்டு வாள் சங்கு வில் என்னும் பஞ்சாயுதங்களையுந் தாங்கிச் சாக்ஷாத் ரக்ஷணைக்கடவுளாகத் தோன்றினான். அவையன்றிச் சங்கநிதி பதுமநிதி சிந்தாமணி சூளாமணி என்னுந் தேவநிதி மணிகளும் வந்துசேர்ந்தன. பட்டாபிடேகம் நடந்து முடிந்தவுடன் சக்கரத்தெய்வந் தனக்

கென அமைத்த ஆலயத்திற் சென்று வீற்றிருக்க, மற்றைய ஆயுத தெய்வங்களுந், தத்தம கோயிலை அடைந்து வைகின. கருடபகவானுக்கும் ஒரு மாளிகை அமைத்து, அதில் இருக்கும்படி செய்ய, அவனும் அக்கோயிலில் அமர்ந்தனன்.

பின்னர்ப் புராணநூல்களை முற்றக்கற்ற புலவர்கள் திவிட்டகுமாரனை நோக்கி, முன்னாட் தொடங்கி இந்நாள் காறும் அரசுசெய்த புரவலர் சரிதங்களைப் பண்டைப் புராணநூல் கூறும்போது, உங்களுடைய வரலாறும் உரைக்கப்பட்டிருக்கின்றதென்று சொல்லிப், பலதேவனோடுகூடிப் பகைவரைச் செகுத்துப் பஞ்சாயுத கருட சீதேவியராகிய ஏழ்வகை அருங்கலமுஞ் சங்கநிதி பதுமநிதியாகிய இருநிதியும் பதினாறாயிரம் நாடுகளும் நகரங்களும் வேந்தர்கூட்டமும் பெற்ற பின் திவிட்ட மகாராசன் பெருங்குன்றம் ஒன்றை எடுத்து ஏந்துவதாகக் கண்டிருப்பதை அவனுக்கு மாண்புபெறக் காண்பித்துத் தெரிவித்தார்கள். திவிட்ட நம்பி அதனைக்கேட்டு அஃதிருக்க; இப்பூமியை அரசுசெய்த மன்னர்கள் சமுத்திரக் கரையின் உள்ள மணலைக் காட்டினும் பலர். நானும் அவர்களில் ஒருவன்றானே. இவ்வுலகம் இன்னும் யார் யாரைக்காண இருக்கின்றதோ? என்று அன்னோர் மனத்தருக்கை நெருக்கி அருக்கி, இருக்கையைவிட்டு எழுந்து, அரசரும் பிறருஞ் சூழ்ந்துவரக், கோடிமாசிலை என்பதோர் வியன் மலையருகில்வந்து, அத்தகடகம் அணிந்த இரண்டு கரத்தையுந் தலத்திலூன்றி, நிலம் பிலமா

கும்படி அழுத்தி, எல்லவரும் வழுத்த, அம்மலையை வேரோடும் பிடுங்கிக் கையிலேந்தி நின்றான்.

> கைநிலம் புகநுழைந் தெடுப்பக் கல்லெனு
> மைநில நெடுவரை மறிய மற்றதன்
> செந்நில முழைமுகஞ் சிலம்புஞ் சீரினல்
> அந்நிலம் வாய்திறந் தழைப்ப தொத்ததே.

அப்பொழுது அதனைக் கண்ட வேந்தர்கள் அனைவரும் அச்சமடைந்து, இவன்றான் வாசுதேவன்! ஐயம் இல்லை ஐயம் இல்லையென்று வணங்கினர். திவிட்டன் அம்மலையை மீளவும் இருந்த இடத்தில் வைத்து விட்டு, அங்ஙனம் வந்து நின்ற அரசவாகனத்திலேறி, அரசர்கள் போற்றுக் கூற, மங்கலதூரியம் முழங்க, இராசநகரின் முதல்வாயிற்கண் வந்து, பெண்கள் ஆலத்தியெடுக்கச், சாமரையிரட்ட, வலம்புரிமுழங்க, இலக்குமியோடு கூடச் சுயம்பிரபையென்னும் பட்டத்து மனைவியும் உடன்வர நகரினுள்ளே புகுந்தான். அந்நகரத்தோர் முகப்பு முழுதும் முத்து வேய்ந்து, தாமரை வடிவினதாகிய முளைப்பாலிகைகள் நாட்டி, நெற்கதிர்களால் அலங்கரிக்கப்பட்ட பூரணகும்பங் களையேற்றி, வாழை கரும்பு கமுகு இவைகளை நிறுத்தி, வரிசையாகத் தோரணமிட்டுப், புட்பமாலைகள் தூக்கிச், சந்தனக்குழம்பு பனிநீர் இவைகளையேந்தி எதிர்கொண்டார்கள். அரசகோயிலின் கோபுரத்தைக் கடந்து உள்வீதியில் இராசகுமாரன்வர, அந்நகர மாதர்கள் சிலம்புகள் ஒலிக்க எதிர்கொண்டுவந்து, இவர்கள் வரும்பவனியைத் தங்கண்ணாற் கண்டு, மன

திலே மகிழ்ச்சி மீதூர, அரசகுமாரனையும் இராசகன்னியையும் பலவாறு புகழ்ந்து பரவினார்கள். காளையர் புட்பங்களையும் பொற்சுண்ணங்களையும் அவர்மீது வீசியார்த்துக் களியாடினார்கள். இச்சிறப்புக்களைப் பார்த்துக்கொண்டு திவிட்டராசன் தனது திருமாளிகையில் வந்துசேரச் சூரியன் அத்தகிரியடைந்தான். அப்போது விஞ்சையர்களும் இராசர்களும் பூபாலர்களுந் தத்தமக்கியன்ற இருக்கைகளின் மேயினர்.

இளையநம்பி தன்கோயிலிற் புகுந்தபின்னர், வேரேர் விமானத்தில் இவர்ந்து, மனைவியாகிய சுயம்பிரபையினுடைய கோயிலின்வாய்ப் புக்குச், சுயம்பிரபைக்குப் பட்டத்துத்தேவியென்ற நாமம் நாளையு தினஞ் சூட்டுவதென்று முரசறைவித்தான். சிலதியர் அவளுக்குக் காப்பணி அணிந்தார்கள்.

சூரியன் உதித்தபின்னர்ச், சுயம்பிரபைநாயகி, பலவகை வாத்தியங்கள் முழங்கச், சோடச உபசாரங்கள் இயல, மங்கலகரமாய்த் தேவிப்பட்டம் அடைந்தனள். அதன்பின் மாமனாகியசடிக்கு அரசன் வேண்டுஞ் சிறப்பளித்து, நீவிர் விஞ்சையரூர் முழுவதையும் ஆண்டிருமென்றுசொல்லி, அவன்பின் போய்க், கிரமப்படி எல்லாரையும் வழியனுப்பிவிட்டு வந்து, அரசர்கள் வணங்கவும், அனேகவகை விநோதங்கள் நடக்கவுந், தேவர்கள் திசாமுகத்தைக் காவல்செய்யவுஞ், சங்கநிதி பதுமநிதிகள் ஏவல்செய்யவும், பகற்காலங் கழிந்தது. இராக்காலம் வந்து சேர்ந்தபோது அருக

னகரத்தின் உற்சவகாலம்போன்று அந்நகரமுழுதுந் தீபகம் முதலியவற்றாற் சிறப்படைந்தது. எல்லாருஞ் சந்தோஷங் கொண்டாட இராசகுமாரன் தன்தேவி யோடு சகல இன்பவைபோகங்களும் அனுபவித்துச் சுகமே வாழ்ந்திருந்தான்.

தேவர்க டிசைமுகங் காப்ப மாநிதி
ஒவல விரண்டுநின் றொருங்கு வீழ்தர
மேவிய வருங்கலம் விளங்க நோக்கிய
காவலன் செல்வநீர்க் கடலுண் மூழ்கினான்.

திருவமர் தாமரைச் செம்பொ னாயிதழ்
மருவிய திருவடி வாமன் பொன்னகர்
விரவிய விழவொடு வேள்விக் கொத்தரோ
கருவிய வளநகர் கண்கு ளிர்ந்ததே.

## சுயம்வரச்சருக்கம்.

வித்தியாதரவேந்தர்க்கு உத்தரவுகொடுத்தனுப்பி, மாணிக்கமுதலிய இரத்தினங்களுஞ் சங்கநிதி பதும நிதி முதலியவும் அன்றைக்கன்று விர்த்தியாகப், பதினாறாயிரந் தெய்வங்கள் திசைதோறும் நின்று காவல் செய்ய, வையகத்தரசர்கள் பதினாறாயிரவர் தாழ, வித்தியாதரர்களில் நூற்றுப்பதின்மர் வணங்க, உலக மெவற்றையுந் தன்கீழ்ப்படுத்திச், சகலசெல்வமும் அனுபவித்து வாழ்ந்ததோர் இராசாதிராசசிங்கத்தை, மயில்போன்ற சாயலும அன்னம்புரையும் நடையும் பண்ணைப்பழித்த மென்மொழியுந் தெய்வத் திருமே னியுமுடையளாய்ச் சகல சற்குணாலயமாய் வீற்ற பட்டத்துத்தேவி சுயம்பிரபையென்பாள் தன்னடிப் படுத்தினள். விஞ்சைய வஞ்சியன்றோ!!

இவ்வாறு அகிலபோகமும் அனுபவித்துவரும் நா ளில், ஒருநாட் சுயம்பிரபை தன் தந்தையுடைய தக் கணசேடியினின்று கொணாந்துவைத்த பாரிசாதம் அரும்புதலைக்கண்டு, அப்பாரிசாதபுத்திரற்குக் காம வல்லியென்னும் மங்கையை மணமியற்றி, அந்தவிழா வைக் காணவேண்டும் என்னும் விருப்புடையளாய்த், தன் தோழி ஒருத்தியை நோக்கி, நீ சென்று பாரிசா தம் அரும்பிய செய்தியை நந்தலைவருக்கு அறிவிப்பா யாக என்று அனுப்பினள். அவள் வணக்கத்தோடும் போய் அரசகுமாரனை வாழ்த்தி, ஐயனே! தேவரீர்,

முன்னே அடியேங்களைக்கொண்டு நீரூற்றி வளர்த்த
பாரிசாத மகற்குக் காமவல்லிமாதை மணம் புணர்த்
துஞ் சிறப்பைத் தாங்கள் வந்து பார்த்தல்வேண்டு
மென்று விண்ணப்பஞ்செய்து, இஃது எம்பெருமாட்டி
யுடைய வாய்ச்சொல் என்றும் உரைத்தனள். அது
கேட்டு நகைத்து, மிகவும் நன்று; நாமும் எம் நங்கை
யுடைய மகனை அங்கே வந்து காண்கிறேன் என்று
ட குமாரன் அருளிச்செய்தான். இருளை தலை
மகள் மாட்டு அடைந்து அசரன் அவ்விழாக்காண வரு
வதை நாயகிக்குத் தெரிவித்தான்.

திவிட்டன் தனது நாயகி விருப்பிற்கு இசைந்து,
அங்கே ஏகமுயன்றபோது ஒரு விதூடகப் பார்ப்
பான் அவனுழை வழியில் நணுகினான். காதிலே
குண்டலங்கள் ஒளிவீசக், குடுமியினடுவிலே பூமாலை
இறுகக்கட்டி, இடையிலே ஒரு கையை ஊன்றி, மற்ற
அத்தத்தில் அத்தவாளம் பிடித்து, வெண்ணகை
தோன்ற நகைத்துக்கொண்டு நின்று, தன்சரீரத்தைக்
குஞ்சித்து, அரசன் அகமகிழ்ந்து முகிழ்நகைகொள்
ளத் தான்பாடும் பாட்டும் இராகமுந் தாளமும் ஒற்
றுமைப்படக் காலால் நடித்துக்கொண்டு, ஆடி ஆடி
ஆடி ஆடி, அசதியாடலாகிய நகைச்சொற்களை வகை
வகையாய் இடையிடையே உகுத்தான். அதனை இராச
குமாரன்கண்டு, நன்று! நன்று! என்று சிரிக்கப்,
பார்ப்பான் தன் வயிற்றைப் பிசைந்துகொண்டு தேக
மெல்லாம் புழுதிபடியப் பூமியில் விழுந்து புரண்
டான். உதரத்தைப் பசைந்து வருந்துகின்றாயே,

அஃதென்னென வேந்தல் வினவ, மோதகவார்த்தையினால் அகடு ஊதி ஊதி மோதுகின்றதென்றான். மோதகம் என்று தின்றனையென்று அரசன்வினவ, அந்தணன் என்றுமில்லை, இன்று அரசகன்னிகையின் விழாவிற் புசிக்கப் போதுகின்றேன். அதனை நினைத்து என் குக்கி மொக்குளிக்கின்றதென்றான். நிவிட்டன் நகைத்து, மறையவனே! வேதாத்தியாயனஞ்செய்யும் பார்ப்பார்க்கன்றி மற்றையர்க்குக் கொடுக்கமாட்டார்களென்று சொல்ல, விதூடகன், வள்ளால்! நான் அவர்கள் எல்லாரையும் அத்தியயனத்தில் வென்று விடுவேன் என்றான். அரசநந்தனன் அவனைநோக்கி நினக்கு வேதந் தெரியாதே, நீ எவ்வாறு வெல்லவையெனப், பூசுரன் அவர்கள் தங்கள் வாயாலே ஓதினால் நான் என் கையாலே மோதுவேன் என்றான். இவ்வாறாகப் பல பல விநோதவார்த்தைகளைப் பெய்துகொண்டும், விகடங்களைச் செய்துகொண்டும், விதூடகன் பின்வரப், பார்த்திவன் பூங்காவையடைந்து பாங்கான்றதோர் சிலாதலத்தில் ஏறியிருந்தான்.

சோலையகத்து விழுங் கொழுங்கனிகளை வேதிய விதூடகன்கண்டு, ஆஹா! இவற்றை உண்டு உதரங் குளிரேனா! கண்களினாற் பார்த்ததினாலே ஆசைதிருமா என்று ஆங்காங்கு நின்றும், வாய் எயிறூறக் கைகளினால் அள்ளி அள்ளிக்குவித்தும், வேந்தன் பின்னாக ஓடோடியும், தலைவர்திலகமே! சற்றே ஈண்டுத் தாமதித்து இவற்றை உண்டும் உண்டுமென விண்டு வேண்டினன். இறையவன் மறையவனே! இன்னும்

நல்லநல்ல கனி முன்னிருக்குது மெல்லமெல்ல வா வென, ஆடியும் பாடியும் வல்லே செல்லலாயினன்.

ஒருபுறத்திற் காய்களுங் கனிகளுங் கடிப்புண்டும் வெடிப்புண்டும் அடிப்பக்கஞ் சிந்தியிருப்பதுகண்டு, மனம்பதறிக் கையை உதறி, வெய்யவனும் எய்தரிய இக்கடிகாவினுள் அடிவைக்கக் கள்ளருக்கு உள்ளந் துணிந்ததாவென்று மிகுந்த கோபாவேசத்தனாகிக், காவலா! காவலா! நின் காவகத்துக் காவலர் சோர் விலர்தானென்று குளறினான். பின்பு மரத்தின் சிர திருந்து உரத்து நரலுங் கருமுக அரியினங்களைக் கண்டு, ஐய! ஐய! இதோ கள்வர் இதோ கள்வரென்று சமிக்கைபண்ணினான். அரசன் அப்பா! அவர்கள்பலர், சும்மா வந்துவிடென, அவன் கடமொடுங்க நடுநடுங் கிக் கோமான் பக்கல் நீங்காது சீமானே சீமானே யென்று உடல் படபடக்க அமர்ந்தனன்.

அப்புறந், தாழ்ந்து தளிர் பொதுளிய தமாலவீதி யைக்கண்டு அம்மருளி இருளென வெருளக், குரிசில் மெய்யனே அது மெய்யான தமமன்று தமாலச்செறி வென்று சாற்றி அவன்மனதைச் சற்றே தேற்றிப் பயத்தை மாற்றினான்.

பின்னர், இஃதென்ன? ஆராமமும் போராடல் புரி யுமா? மகிழமரம் இரணகருமம் பூண்டு சரணமுதல் நவிரமளவும் பரணதாரியாய் முரணி எழுந்ததே! என் கரணமெல்லாம் விரணமாய் ஒடுங்குகின்றதே!

வேலைநீர் வண்ண! இவ்வேலை நீர் கண்ணளி செய்க வென்று கலங்கி நடுங்கி விலங்கப்பார்த்தான். அரசன் செஞ்சொலாய்! நெஞ்சில் அஞ்சல், இங்கு வெஞ்சமர் யாவதும் இலது, பஞ்சிவர் பதமும் நஞ்சுறழ் விழியு முடைய நம் வஞ்சியர் மஞ்சமர் மகிழின் வயவுகெடத் தம் பவழவாயினால் அஞ்சுவைநறவத்தை அதன்மீது உமிழ, அந்நறவின் ஆவி மரமுழுதுங் கமழ, அதன் நறுநாற்றத்தாற் பெரும்பராரையுஞ் சினையுஞ் சுரும்பர் ஆர்த்து மொய்த்ததனால் வரும்பரிசன்றி அது கரும் பொற் கவசமன்று என்றனன்.

மண்டலீக! தண்டலையெல்லாம் வண்டலையிலன்றோ குளிர்தளிர் துளிர்ப்பது? பிண்டிமரத்தில் அஃது அடியிலே மண்டியெழக் கண்டிது பண்டிலாப் புதின மென இருபிறப்புவிண்டு இருபிறப்பாளன் இருபுறங் குலுங்கச் சிரித்தனன். பூகாவலன் ஏ! காதலா! காகோளிவயவுநோய் போகாநிற்க நங்கலைத்தலைமகளிர் வைத்த அலத்தகச்சீறடிச்சுடரன்றி இவை இலைத்தலை ஈர்ந்தளிரல்லவென்று நின் புலத்தகத்து அமைத்தி யென, அவன் ஆகா! அரசிளங்குமர! காவியால் இல கிய கருங்கண்ணினள், நின் தேவியார் திருவடி தாவிய மாத்திரத்தில், மாவிசேஷமாய் அலர்ந்த இவ்வசோகி னது இயல், அவளை மேவியபோது அலரும் நுஞ்செயலை வென்றது. தோல்வி நும்மதே என்று கூவினன். அரசன் ஒரு பூவினாற் தாவினன். அவன் அயலாட்டி ஒருத்தியின் செயல்காட்ட நீர் அடித்தது பெருமாட்டி காதில் ஊட்டி, நுமக்குத் துயர்நீட்டுவலெனப் பல்லுக்

காட்டினான். இவன் தன் எரிமணிக்கடகக் கையினால் அவன் கரமிசைப்பிடித்து, இனிமேல் இப்படிச்செய் கிலேனென்று அவன் ஊக்கத்தை நீக்கினான்.

திவிட்டன் உட்கார்ந்த சிலையை அந்தணன் ஒரு நிலை யாய் நின்று பார்த்து வெருவிய மனத்தினனாய் ஒருவி உடல் நடுங்கி ஓடினன். யாது கண்டனையென்று பன வனை வினவ, மாதவன் பூதம்! பூதம்! இனி இங்கே இருப்பது ஏதம். யாதுந் தீது விளையுமுன் போதும் போதும், எழுந்திரு எழுந்திருவென்று ஓதினான்.

பாத்த னுருவென வெரிபொன் றோலையுஞ்
சோதிசூழ் சுடர்மணிக் குழையுந் துன்னிய
காதொடு கண்பிறழ்ந் துளது கைகுறி
தூதிய வயிற்றதென் றுருவ மோதினான்.

தோன்றல் அது நின் நிழலென ஏன்றுகொள் ஐய! என, அவன் ஆன்ற நின் உரை நிற்க. சான்றுசொல என் நிழல் என்னோடு துயன்று இயங்காதா? ஊன்றிய கல்லினுட் புகுமா? என்று புலம்பினன்.

நின்னிழ லாவது தெளிய நின்றொழில்
இந்நிழற் காணென விறைஞ்சி நோக்குறீஇத்
தன்னிழ றன்செய்வ செய்யத் தான்றெளிந்
தின்னிழ லிருந்தன னிலங்கு நூலினான்.

இப்படி இருக்குஞ்சமயத்தில் எப்புறமும் நெருக்க முற, ஒப்பிலா ஆயிரஞ் சிலதியர் சூழப், பொன்னிற அன்னம் மென்னடை பயின்றாலென்னச் சுயம்பிரபை

யும் பூங்காவில் வந்து அடைந்தாள். அப்பாவையனை யாள் தான் அரசனோடு அவன் அறியாமல் விளை யாடவிரும்பி, ஒரு மாயமந்திரத்தினாற் தன்னைமறைத் துத், தன் நாயகன் சமீபத்திற் போய்நின்றாள். அதை அறியாது விதூடகன் ஏந்தலை நோக்கி வேந்தனே! இவ்வசோகு அலரும் வண்ணம் இதன்மீது தன் கால் வைத்தவள் பூவுலகத்தாளோ? அல்லது விஞ் சையருரிலுள்ளாளோ? சொல்லுதியென்று வினவ, அரசகுமாரன் செய்யனவாயுஞ் செறிந்தனவாயுந் திரண்டனவாயுமுள்ள விரல்களையுடைத்தாய் அழகிய சதைநிறைந்த அடிச்சுவட்டைநோக்கி இவ்வடியின் அழகினாலே யான் மேனியையும் அறிவேன், இவள் விஞ்சையமடந்தை, அரசனுக்குரிய அரிய தெரிவை யென்றான். இவள் மேனியை அறிவேன், இவள் விஞ் சைய மடந்தை, அரசற்குரிய அரிய தெரிவையென் றவுடன், தன்னை விட வேறோர் மடந்தையும் மனைவி யாயிருக்கிறாளென்று கருதித், தன் சுயவடிவோடுந் தோன்றிக், கண் அனற்பொறிகால, நுதல்வெயர்க்க, இராசகன்னிகை காத்திரங் கொண்டதைக் கண்ட பார்ப்பான் அண்டையிற் சோலைக்குள் ஓடியொளித் தான். இராசகுமாரனுந் தான்பேசிய வார்த்தையைச் சட்டென விடுத்து, இந்நேரம் யாது ஏதம் விளைகின் றதோ என நினைத்து, அவளைநோக்கி, மன்னன் மக ளே! அன்னம் அனையாய்! என்னுயிரினுஞ் சிறந்த அமிர்தொப்பாய்! இவண் நேர்ந்த வருத்தம் யாது என வினவ! யாதும் வருத்தமில்லையென்று சொல்லி யுங், கோப மிகுதியால் வாய்திறந்து, செய்யனவாயுஞ்

செறிந்தனவாயுந் திரண்டனவாயுமுள்ள விரல்களை யுடைத்தாய் அழகிய தசைநிறைந்த இவ்வடியின் அழகினாலே மேனியையும் அறிவேன், அவள் விஞ்சைய ராசன் மடந்தை, அரசனுக்குரிய அரிய தெரிவை யென்று உரைத்தனிரன்றோ? அவளோடு கலந்து விளையாடுதிர், யான் எனது பூக்கமழும் ஆக்கமுள்ள சேக்கை மாடத்து நீக்கமறப் போயிருப்பேன் என்றாள். திவிட்டன் அவ்வார்த்தையைத் தாங்கமாட்டாதவனாகி, அவள் சிற்றடியிலே தன் வெற்றிமுடிபட வந்தனைசெய்தான். இராசகுமாரத்தி அவன் முகத்தைநோக்கி, மிக்க கபடத்தையுடையாய்! இப்பா சாங்கு காட்டாதி! கைதவம் முற்றக் கற்றனைகொல் லென்றுசொல்ல, அரசகுமாரன் அமிர்தமே! இதனை நன்றாய் ஆலோசித்தறிமின், பின்னர் என்மீது பிழையுளதாயின் அதற்கேற்ற தண்டனைசெய்க எனப் பலவாறு இரந்தனன். அதன்மேற் சினஞ் சிறிது தவிர்ந்து, அரசன் மீதோர் குற்றமுமின்று, பார்ப்பானைப் பிடித்துவாருங்கள் என்றுரைத்தாள். அப்பொழுது சேடியர்கள் அவனை ஓடவிடாமற் தேடி மடிபிடித்தீர்த்துவந்தனர். பார்ப்பான் பேதைமையையுடையன், கண்கள் புரள ஒடுங்கி நின்று அச்சங்காட்டியதைப் பார்த்து, மந்தாசியம் அடைந்து, இவனைக் கோத்தமாலையால் யாத்துக்கொணர்மினெனச் செப்பி அரசகன்னிகை பரிசனஞ்சூழ விரசிய பொழிலின்கட் சென்றாள். அப்போது இராசகுமாரனுடைய விசித்திர வார்த்தைகளினாலே கன்னிகையின் சினம் மாறி நகைதோன்ற, அவளை மார்போடு அணைத்து அரசன்

மங்கையர்க்கரசே! மாதர் சிகாமணியே! சீதகுணா லயமே! இம்மாதவனும் ஏதமிலன், ஆதலின், நின் தீதுபடு சீற்றம் போதுக, அவனுடைய பிணிப்பையும் தணிப்பையென வேண்ட, அப்படியே பூசுரனுடைய புயங்களை வீக்கி யாத்த பிணிப்பை நீக்கிவிட்டனள். உடனே, அந்தணன் களித்துத் துக்கமுடையோரும் மிக்கு நக்கு மகிழும்படியான சிற்சில வேடிக்கைப் பாடல் ஆடல்களைச் செய்து, அங்குள்ள கனிவகைக ளிலே தன் மனம் ஏறுகிறதையும் வாய் ஊறுகிறதை யும் பாட்டிலே வீற அமைத்து,

ஓடு மேமன மோடுமே
கூடு மேதணி கோதையாய்
காடு சேர்கனி காண்டொறும்
ஒடு மேமன மோடுமே.

ஊறு மேயெயி றூறுமே
வீறு சேர்விரி கோதையாய்
சேறு சேர்கனி காண்டொறும்
ஊறு மேயெயி றூறுமே.

வேண்டு மேமனம் வேண்டுமே
பூண்ட பொன்னணி மார்பினாய்
நீண்ட மாங்கனி நேர்தொறும்
வேண்டு மேமனம் வேண்டுமே.

என்று நடித்துக் கைகட்டிப் பாடினான்.

சுயம்பிரபை அவன் விரும்பிய கனிகளை அழைப்பித் து உண்ணக்கொடுத்து உவகையோடிருந்தபின்னர்ப்,

பாரிசாதபுத்திரற்குக் காமவல்லியென்னுங் கன்னிகை யை மணஞ்செய்யுந் தொழிலில் முயன்றார்கள்.

உடனே அரசகுமாரனும் விஞ்சையகுமாரியும் அழ கிய இரத்தின வேதிகையிட்டு வளர்க்கப்பட்ட பாரி சாதவனத்தை அடைந்தார்கள்.

வரிவளைவயிரோடேங்கவாரணிமுரசமார்ப்பக்
கருவளர்கனபொற்சோலைக்கறங்கிசைபரந்தபோழ்திற்
திருவளரலங்கன்மார்பிற்செங்கணன்றேவிமார்கள்
உருவளர்கொம்பரன்னளருளறிந்துழையரானர்.

இராசகன்னியின் அனுமதிப்படி அரசன்பின் வந்த மாதர்களுஞ் சேர்ந்து கூடிப், பக்கத்திற்சூழத், தார கை நடுவண் மதியம் ஒளிர்ந்தாற்போல வீற்றிருந்த அரசன் அவர்களை நோக்கி, இனிப் பாரிசாத காம வல்லிகட்குத் தகுந்த மணக்கோலஞ் செய்வீராமி னென்றருளி, இயந்திரத்தின் வழிவரும் நீரினைற் தன் மாட்டுநின்ற உழையரைக்கொண்டு பாரிசாதத்திற்கு அபிடேகம் ஆட்டுவித்துச், சந்தனக்குழம்பு பொன் னபரணம் முதலியவைகளை அணிவித்துப், பொழி லரசு எனப் பட்டமுஞ் சூட்டினன். இராசகன்னி கள் மகளிருக்கு உரிய செயலெல்லாங் காமவல்லிக்கு இயற்றிப் பாரிசாதமகற்கு மணம்புணர்த்திப் பெரு கிய களிப்புடையரானர்கள். "இன்னகைப் புதல்வர் செல்வம் யாவரே யினிதென்னுதார்"

இச்செய்கையினலே திவிட்டகுமாரற்குஞ் சுயம் பிரபைக்கும் புத்திரவாஞ்சையும் காமநுகர்வும் மன

திற் தோன்றியது. இராசகுமாரன் கன்னிகைகளைப் பொழில் விளையாட்டுக்கனுப்பி, அந்தணனுந் தானும் ஒருமாயையால் மறைந்துநின்று அவர்கள் புரியும் விளையாடலைப் பார்த்துநின்றார்கள். மாதர்கள் மலர் பறித்தல் மாலைகட்டல் அணிதல் ஆதியான பொழிற் களியாடலைச் செய்து, பின் மலைவிளையாட்டில் முயன் றார்கள். அப்போது கஞ்சுகி அணிந்த உழையரும் அம்மடந்தையர்க்குக் காவலாயிருந்த முதியோருந் திசைகளில் ஓம்படைசெய்யக், கன்னிகைகள் மலை விளையாட்டில் ஆடற்பாலன மலையெதிர்கூவல் முத லிய ஆடல்களையாடியும் பாடல்களைப்பாடியும் நிற் குஞ் சமயத்திற், திவிட்டகுமாரன் ஒரு தெய்வத்தை மாயயானையுருவுகொண்டு வரச்செய்தான். மங்கையர் அதைக்கண்டு வெருவியோடினர். அப்போது சுயம் பிரபை அச்சமடைந்து நங்காதலர் யாண்டையார் என்று கூவ, அரசன் நங்காய்! யான் இங்ஙனுளன்; அஞ்சேலென் அஞ்சேலென், அஞ்சேலென்று சொல்லிக் கொண்டு, காதலி சமீபத்திற்போய், அங்கே வந்த யானையை விலக்கித், தேவியை மார்போடு அணைத்து அவள் ஓடும்போது நிலைகுலைந்து அலங்கோலமான ஐம்பாலைத் தம்பான்மைபெறச் செம்பாகமாகும்படி திருத்தி, ஆபரணத்தை வரிசைப்படுத்தி, அவளைச் சந் தோஷிக்கச் செய்தனன். அவ்வேளையிற் சூரியன் உச்சமாயினன். ஆதபத்தின் மாதபத்தால் அனைவோ ரும் இளைவாராக, அணங்கனார் நுதல்வெயர்வுகண்டு, மணங்கமழ் மாலைமார்பன், கணங்கொள் பூந்துணர் உத்தியானத்திற்கு, அவர்களைக் கடிபுனலிற் படிதரு

வான் விடுபோக்குக் கொடுபோந்தனன். ஆங்கணுள்ள சாந்தவாவி, தாமரைவாவி, செங்குவளைவாவி, திரு மணியுருவவாவி முதலிய ஆவிகளை உழையர் கூவிக் காட்ட, அவைகளில் அவர்கள் தாவி அனேகவித விளை யாடல்களில் மேவிக் களிகொள்வாராயினர்.

அடிக்கலத் தலத்தகங் குழுமிக் குங்குமப்
பொடிக்கலந் தந்திவான் படைத்த பூம்புனல்
வடிக்கலந் திலங்குவா ணெடுங்கண் மைக்குழம்
பிடிக்கலந் திருளுமங் கியற்றப் பட்டதே.

பின்பு திவிட்டனும் மடவாரும் அச்சோலையிலுள்ள பளிங்கு மண்டபத்தை அடைந்து, ஈரம் உலர்த்திப், பரிமளக் குழம்பு புலர்த்திப், பனிநீர் மாலை சூட்டி, அரசகன்னிகைக்கும் பல்லாற்றான் அலங்காரம் இயற் றிப், போனகாமிர்தம் புசித்திருந்தார்கள்.

நவர்க டிசைமுகங் காப்பத் தீஞ்சுவை
யாவியா ரமிர்தயின் றிருந்த வாயிடைப்
பாவையர் கருங்கணாற் பருகு வார்கள்போல்
மாவர சளித்தவன் மருங்கு சுற்றினார்.

அப்போது ஒரு விஞ்சையன் விசும்பாறாக வந்து அச் சோலையிலிறங்கி, அரசன் உத்தரவின்படி வாயில் காப் போன் உள்ளேவிடத், திவிட்டராசனுடைய பாத தாமரைகளை வந்து வணங்கினான். அரசன், சடியை நுதலி, அடிகள் செவ்வியுடையரோவென வினாவினன். விஞ்சையன் வாழிய மாமன்னராதியர் க்ஷேமம் என்று சொல்லி மீளவும் வணங்க, நிருபன் அவனை அங்கோர்

ஆசனத்தில் இருக்கச்சொன்னான். உட்காந்தபின், நர பதி தம்பதிகளாயிருக்கும் திதி, இதுவே நல்லததி யென்று அவன் மதித்துத், தான்கொண்டுவந்த திரு முகநிதியை எடுத்துக் கொடுக்கச், சுயம்பிரபையின் அருகேநின்ற தோழிவாங்கி வாசித்தாள். அதைக் கேட்டு மகிழ்ந்து அரசன் அவனுக்கு முடிநீங்கலான மற்றை அணிகளெல்லாம் உதவ, அரசகன்னிகையும் அவற்கு வேண்டுஞ் சிறப்பளித்து, இச்சுகசமாசாரத் தை நீயே உன்வாயினால் உரைத்தியென்றனள். விஞ் சையன்தொழுது, சுரேந்திரகாந்தம் என்னும் உத்தர சேடி நகரை அரசாளும் மேகவாகனன் ஈன்ற சோதி மாலையென்னும் பெண்ணை எம்மரசன் அருக்ககீர்த்தி மணம்புரிந்தானென்று தெரிவித்தான். எல்லாரும் எல்லையில்லா இன்பத்தின்மூழ்கி அவற்கு விடைகொ டுத்து அனுப்பினார்கள். அவன் அவர்களை வணங்கிப் போயினான். அப்போது அத்தமனமாயிற்று.

> அழலவன்குளித்தபின்னையணங்கிவரந்தியென்னும்
> மழலையங்கிளவிச்செவ்வாய்மடந்தைவந்தடைந்தபோழ்திற்
> குழலமர்கிளவியார்தங்கூந்தலுட்குளித்துவிம்மி
> எழிலகிலாவிபோர்ப்பவிருவிசும்பிருண்டதன்றே.

இராக்காலமானபின் திவிட்ட குமாரனும் அரசகன் னியரும் அனேக விநோதங்கள் செய்து ஆனந்தித் திருந்தார்கள். சுயம்பிரபையுங் கணவனும் மஞ்சத் தில் இவர்ந்திருந்தபோதில் அவள் தன் வாயினுள்ளே சந்திரன் புகுதரக்கண்டு அச்சமடைந்து காதலன் தோளைக் கட்டிப்பிடித்தாள். இளையநம்பி அவளைத்

தேற்றி அஃதியாதெனவினவி, அவள் உள்ளவாறு உணர்த்தக்கேட்டு, அதன்பலனை உணர்ந்து, மாதரசே! யாதுந்தீதிலது! ஒருகுடை நீழலில் இவ்வுலகம் புரக்கும் புத்திரன் உன் அகட்டிட் தங்கினன், ஆதலால் நீ அஞ்சற்பாலையல்லையெனப் போற்றச், சுயம்பிரபை வருத்தந்தீர்ந்தாள். அவள் உதரத்துட் தான் புகுந்ததை மெய்ப்படுத்துமாறுபோல ஆகாயத்தின் அகட்டினின்று மதியம் மறையச், சூரியன் அவளிடத்தே தோன்றுங் குழவியின் அழகுகாட்டிப் பாலரூபமாய்ப் பூருவதிசையிற் தோன்றினன்.

குலம்புரி சிறுவனைத் தரித்துக் கோலமா
நிலம்புரி நிழலொளி நிரந்து தோன்றலால்

நலம்புரி திருவின மங்கை யாயினாள்.

இங்ஙனம் இராசகன்னிகை கருப்பவதியாயபின் நாளுக்குநாள் அவளது மின்னிலங்குந் திருமேனியானது வேறாகிப் பொன்னிறமாய்ப் பொற்படைந்தது. இங்ஙனமாகச், சூரியன் முதலிய கோள்களெல்லாம் நட்பாட்சியுச்சங்களிற் பொருந்தச், சோதி நட்சத்திரத்திலே ஒரு புத்திரன் சனனமாயினான். அவன் பிறந்தபோது அந்நகரமுழுதும் பொலிக என்றுரைக்கும் பொலிவும் மங்கல தூரியமுங் கடலொலிபோல் றாங்கின. குழலிசையுந் துடியிசையும் ஓங்கின. கறங்கிசையும் வயிரிசையும் ஏங்கின. மத்தளப் பாணியுங் கைத்தலத் தாளமுஞ் சித்திரக் கீதமும் எத்திசையும் மலிந்து தேங்கின. தோரணமும் மாலைகளும் ஆவணங்

தோறுந் தூங்கின. காவலில் இருந்த சிறையெல்லாம் விடப்பட்டன. அருக சினகரத்தில் விழவுகள் தொடப்பட்டன. பலிகள் இடப்பட்டன. ஏழுநாட் சுண்ணங்கலந்த நெய்விழவுகொண்டாடிப் புண்ணியாகவாசனஞ் செய்வித்து அக்குழந்தைக்கு அருகக்கடவுளுடைய திருவடிமலரிடத்துள்ள புட்பமுதலிய சேடங்களைச் சேர்த்தினர்கள். விசயராசன் திவிட்டராசன் பிரசாபதியரசன் தேவிமார் முதலிய எழுபெருங் கிளைஞர்களும் ஒருங்கு கூடி இராசபுத்திரனையெடுத்துத் தழுவி மோந்து ஒவ்வொருவருந் தமக்குள்ளே மிக மகிழ்வடைந்து உவகைக்கடலில் மூழ்கினர். அந்தணர்களும் அருந்திறல் அரசர்களும் பெருந்தகை வயோதிகர்களும் ஈண்டிப் புத்திரனுடைய தந்தை தாயர்களுக்கு வரும் பொலிவைச்சொல்லி வாழ்த்தினர். திவிட்டன் நிதியறையைத் திறந்து முத்துவடமும் வித்தகக்குவாலும் இரத்தினபரணமும் அரத்த ஆடையும் அந்தணர் முதலாயினோர் வேண்டியாங்கு கொள்க என்று முரசறைவித்தான். பின்னர் அப்புதல்வனுக்கு விசயனென்று நாமகரணஞ்செய்தனர்.

வாகையைத் தெக்கணசேடிக்கு [illegible] போமென்று அஞ்சனவண்ணன் கருதியபோது, மஞ்சுடை விசும்பாறுக விஞ்சையர் உலகினின்று ஓர் செஞ்சுடர்விமானம் வந்தது. அதனைக கண்டோர் திவிட்டனிடம் அடைந்து, ஐயனே! ஓர் இரத்தின விமானம் நமது நகரத்தில் வந்தடைந்ததென்று கூற, அரசன் உழையளைநோக்கி அதன்வயின் வந்த

வரை ஈண்டுக் கொணர்திரெனக் கட்டளையிட்டனன். அவ்விமானத்தினின்று உடனே சில விஞ்சையமகளி ரும் கஞ்சுகிக் காவலர்களும் இறங்கிவந்து திவிட்ட ராசனுடைய முடியின்மீது "பொலிக" என்று நெய் யைச் சொரிந்தார்கள். அப்போது அனைவருக்கும் அடங்காத ஓகை மலிந்தது. பயாபதிசூனு அம்மக ளிரைத் தன் தேவி இருக்குங் கோயிலகத்துப் போ குகவென்று அனுப்பிவைத்தான்.

அவர்கள் அந்தர்ப்புரஞ்செல்லச் சுயம்பிரபையினு டைய தந்தையார் அனுப்பிய விஞ்சையன் ஒருவன் வந்து அரசனைவணங்கிச் சுவாமீ! நம்மரசன் அருக்க கீர்த்தியுடைய மனைவி சோதிமாலை நித்திரைசெய்யும் அமையத்தில் மதியம் இழிந்துவந்து அவள் துடைமீ திருக்கச் சொப்பனங்கண்டு, பின்னர்க் கருப்பவதி யாய்ச் சுபமுகூர்த்தத்தில் ஒரு புத்திரசிகாமணியைப் பெற்றாள். அப்புத்திரனுக்கு அமிர்ததேசன் என்று நாமகரணஞ் செய்தார்கள். அப்புத்திரனுடைய அழ கைத் தாங்கள் கண்ணுற்காண வரும்பொருட்டுத் தங் கட்கு இவ்விசேஷ சமாசாரத்தை உணர்த்திவரும்படி சொன்னார்கள். அதனால் யான் நெய்யோடு வந்தேன். இதுவே சமாசாரமென்று சொன்னான்.

இங்ஙனம் உரைக்கக்கேட்ட திவிட்டராசன் உள மகிழ்ந்து, அவனுக்கு அனேக உபசாரங்களைச் செய்து அனுப்ப, விஞ்சையன் மாதர்களோடுந் தன் தக்கண சேடிசயிலத்தை அடைந்தான்.

இப்பாற் றிவிட்டராசனுடைய புதல்வன், தாதிமார் கையிலுந் தந்தையர் புயத்திலுந் தாயார் மடியினுஞ் சரற்கால பூருவபக்கத் தாரகாபதிபோல வளர்ந்து, சிறுவர்களோடு வீதியிற் சிறுதேருருட்டி விளையாடி, ஐந்துவயதினளவுக் கல்விகற்றற்குரிய பருவம் வர, முதியோர்கள் சுற்றத்தார்கள் எல்லாரும் ஒருங்கு குழீஇ, நாளுவகை மங்கலங்களோடு சுபமுகூர்த்தத் திலே கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த ஆசிரியர் முன்னிலையில் வித்தியாரம்பஞ் செய்வித்தனர். அக் குமரன் கல்விபயின்று வருங்காலத்துச் சுயம்பிரபை, இவற்கு இளையாள், இளையாட்கு இளையாள், ஒரு புதல்வியையும் பெற்றாள். கிளைஞருந் தந்தை திவிட் டனுங் களிகூர்ந்து, புதல்விக்குச் சோதிமாலையென்று நாமகரணஞ்செய்து, இவ்வோகையையும் விஞ்சைய ருலகிற்கு வித்தகரைக்கொண்டு அறிவித்தனர்.

அப்பெண்குழந்தையுங் காமவல்லியோ தாமரைநல் லியோ என்னத்தக்க வாமமெல்லரிவையாய்த் தாதி யருந் தோழியருந் தற்பேணிவளர்க்க வளர்ந்து, கழங் காடல் அம்மனையாடல் பந்தாடல் முதலிய விளையாட் டுப் பயிலும் பருவம் அடைந்தாள். ஒருநாள் மகளி ரோடுகூடிப் பந்தாடும்போது திவிட்டனுந் தேவியும் மேன்மாளிகையிலிருந்து தம்புதல்வி பந்தாடலையும், தோழிமார் செவிலிமார் எல்லாரும் நங்கையே! இனி அதிகமாக விளையாடினாற் சரீரம் ரோகம் அடையும், உன் அன்னையும் ஐயனுங் கோபிப்பார்களேயென்று விலக்கவும் விலகாததையுங் கண்டு, அரசன் தன்னரு

கே வர அழைத்துத், தன் வலக்குறங்கில் வைத்து, அவள் குறுவேர்வையைத் துடைத்து, உச்சிமோந்து பரமானந்தம் அடைந்தனன். பின்னர்ச் சின்னாளாகத், தன்புதல்வி மணப்பருவம் அடைந்தமையை அறிந்து, புதல்வியை முதல்வி கையிலே கொடுத்துத் தான் மந்திரசாலையை அடைந்தனன். ஆண்டுத் தன் மகளின் மணவினையைப் பற்றி ஆலோசித்து, இன்னநாட் திவிட்டராசன் திருப்புதல்வி சோதிமாலையினுடைய சுவயம்வரதினமென்று பறைசாற்றுவித்தான். சுரமை நாடெங்கணுந் திருமலிகோலமும் பெருமையின் விலாசமுஞ் சருவ உல்லாசமுமாயிற்று.

அஃதான்று, மங்கல முழவிற்குச் சந்தனக்குழம்பு பூசிப், பூமாலைகளால் அலங்கரித்து, இந்நாட் தொடங்கி ஈரைந்துநாளுஞ் சுவயம்வர நாளாதலால் நம் நகரத்தை அலங்கரிக்குக எனவும், அரசர்கள் வருக எனவும், முரசப்பறையான் முழக்கி அறைந்தனர். சுயம்வரத்திற்குப் பூமண்டலாதிபர்களும் விஞ்சைய லோகத்தரசர்களும் வந்துசேர்ந்தார்கள். திவிட்டராசன் மைத்துனன் அருக்ககீர்த்தியுந் தன் மகனோடும் புதல்வியோடும் வந்து போதனமாநகரின் புறத்ததாகியதோர் சோலையிலே இறங்கியிருந்தான். அதனை அறிந்து திவிட்டநம்பி சகலவித உபசாரங்களோடும் எதிர்கொண்டுசென்று உபசரித்தான்.

காளவண்ணனாகிய திவிட்டனுந, தவளவண்ணனாகிய விசயனும், மாழைவண்ணனாகிய அருக்ககீர்த்தியுங்

கூடி மூவரும் வாகனரூடராய்ப் போதன நகரத்தின் கண் வந்து சேர்ந்தனர்.

> இருபுடைக் கிளைகளும் விரவி யின்னணந்
> தெருவுடைத் திசைமுகந் தெளிப்பத் தேர்த்தரோ
> மருவுடை மகரநீர் வளாகம் வானவர்
> உருவுடை யுலகம்வந் திழிந்த தொத்ததே.

அரசருறையும் மண்டபமும், அதன் ஞாங்கர் ஆடரங்கமும், சுயம்வரமாளிகையும், மண்ணுலகினும் விண்ணுலகினுங் கண்ணுறற்கு இல்லாத பண்ணினவாக மண்ணுறுத்தப்பட்டன. சுயம்வரமண்டப நாப்பண் அரசர்கள் மேவுதற்கான மஞ்சங்கள் அலங்கரிக்கப்பட்டன. முகூர்த்தகாலஞ் சமீபித்தவுடனே அரசர்கள் யாவரும் மண்டபத்து வருக என முரசறையப்பட்டது. இக்குவாகுகுலத்திற் தோன்றிய அயோத்திவேந்தன், குருகுலங்குளிர உற்பவித்த அத்தினபுரி அண்ணல், நாதகுலத்தெழுந்த குண்டலபுரத்தரசன், உக்கிரகுலத்துதித்த வாரணவாசிமன்னன், அரிகுலத்தினிற் பிறந்த சூரியநகரநராபதி, சந்திரகுலசனன மதுரை காவலனென்று இன்னோரும் பிறரும் ஈண்டிச் சுயம்வர மண்டபத்தமைந்த மஞ்சங்கள் மீது இருந்தனர். அதன்பின் அருக்ககீர்த்திகுமாரனாகிய அமிர்ததேசன் ஆதியனை விஞ்சையகுமாரர்கள் ஆங்கடைந்து தமக்குரிய ஆசனங்களில் மேயினர்கள்.

திவிட்டன் புதல்வியை அழைக்கும்படி அனுஞ்ஞைசெய்தான். தோழிமார்சென்று நம்மடிகளுடைய

கட்டளை இஃதென்று அறிவிக்க, அரசகன்னிகை மஞ்சத்தை விடுத்திறங்கினாள். அந்தவேளையில் மடந்தையர்கள் அக்கன்னிகைக்கு மணவணி புனைந்து மாலைசூட்டி அவளை நடுவில்விட்டுத் தாஞ் சூழ்ந்து நடத்த, மங்கலவாத்தியம் முழங்கியது. இடையறாது பரப்பிய பூந்தாதின்மேல் அன்னம்போல மெத்தென அடிவைத்து நடந்து மங்கலகர விதியாதியன கழிந்து, முகூர்த்தகாலமானவுடன் தோழியர் திரையைநீக்கச், சபையில் அரசர் அனைவர்க்குங் காதல்மோதி உளங்கலங்கி அதரந் துடிப்பவும் அன்னோர் சிந்தை படபடப்பவும் வெளிப்பட்டாள். அப்போது அம்மங்கைக்கு அங்கு வந்திருந்த இக்குவாகுகுலத்திறைவன் முதலான நிலவேந்தர் அனைவரையும் ஒருயிர்த்தோழி பிரம்புகொண்டுசுட்டி, அவர்கள் இன்னார் இன்னாரென அன்னார் குலங்குடி முதலிய யாவுங் கூறுகின்றாள்.

அங்கார வலர்கதிர மணிசுடரு மரியணைமே
லமர்ந்து தோன்றித்
தங்கார மணிநிழற்றுந் தடவரையா ரகலத்தான்
றகர நாறுங்
கொங்கார வார்குழலார் குவிமுலைகண் முகம்பொருத
குவவுத் தோளான்
இங்காரு நிகரில்லா விக்குவா குலத்திறைவ
னிந்தக் கோவே.

ஆதியா னருளாழி தாங்கினா னுயிரச்செங்
கதிரோ னானுஞ்
சோதியான் சுரர்வணங்கு திருவடியான் சுடுநீறா
நினையப் பட்ட

காதியா னருளியபொற் கதிர்கொண்முடி கவித்தாண்டார்
மருகன் கண்டாய்
ஓதியான் மொழியினிவ னுறுவலிக்கு நிகராவா
ருளரே வேந்தர்.

ஆழித்தே ரொன்றேறி யலைகடலி னடுவோட்டி
யமரார் தந்த
மாழைத்தேர் மருங்கரு மணிமுடியு மணிகலமுந்
திறையா வவ்வி
ஊழித்தே ரரசிறைஞ்ச வுலகெலா மொருகுடைக்கீ
ழுறங்கக் காத்த
பாழித்தோட் பரதன்பி னிவனிவனு னிலமடந்தை
பரிவு தீர்ந்தாள்.

இன்னவன துயர்குலமு மிளமையுமிங் கிவன்வடிவுஞ்
சொல்ல வேண்டா
மன்னவன்றன் மடமகளே மற்றிவனுக் கிடமருங்கின்
மஞ்சஞ் சேர்ந்து
பொன்னவிரு மணியணைமேற் பொழிகதிரீண் டெழுந்த
பொலிந்து தோன்றுங் [துபோற்
கொன்னவின்ற வேற்குமரன் குருகுலத்தார் கோனிவனே
கூறக் கேளாய்.

அருளாழி யறவரச னருளினு லகன்ஞாலம்
பரிவு தீர்த்தான்
உருளாழியுடையரிவனடைவின்மிகக்கடைப்பணிகொண்
டிழையோர் போல
இருளாழிநிழற்றுளும்பு மெரிபொன்மணிநெடுமுடிசாய்த்
திறைஞ்சப் பட்டான்
மருளாழுங் கழிவனப்பின் மற்றிவனே குலமுதற்கண்
வயவோன் கண்டாய்.

நந்திண் கடற்றுனை யுடன்றுளங்கச் சுரர்கொ
சொரிந்த மாரித் [ணர்ந்து
தாழிரும்பல் புயருங்கிச் சரகூடஞ் சந்தித்த
தகையோ னன்றேன்
யாழிரங்கு மணிவண்டு மிலங்கிழையார் கருங்கண்ணு
மருங்கு நீங்கா
வீழிரும்பொற் சுடரார வரைமார்ப னிவன்சீர்யான்
விளம்ப வேண்டா.

இங்கிவன திடமருங்கி னெழில்வயங்கு மணிமஞ்ச
மிலங்க வேறிச்
சங்கிவர்வெண் சாமரையுந் தாழ்குழையு நீள்சுடருந்
தயங்கி வீசக்
குங்குமஞ்சேர் கொழும்பொடியிற் புரண்டுதன்னி னிறஞ்
குளிர்முத் தாரஞ் [சிவந்த
செங்கதிரோ னொளிபருகுஞ் செவ்வரைதே ரகலத்தான்
றிறமுங் கேளாய்.

தகரநா றிருஞ்சோலைச் சயம்பூருன் றுறவரசாய்
நின்ற காலை
மகரயாழ் நரம்பியக்கி வரங்கொண்டு வடமலைமே
லுலக மாண்ட
சிகரமா லியானையான் வழிமருகன் செந்தாமந்
தவழ்ந்து தீந்தேன்
பகருமா மணிமுடியா னமரருமே பாராட்டும்
படியன் பாவாய்.

சக்கரர்தாம் பிறந்துவரித் தரங்கநீர் வளாகமெல்லாந்
தங்கீழ்க் கொண்ட
உக்கிரமெய்க் குலத்தரச னொளிவேலிவ் விளையவனை
துருவே கண்டாய்

அக்கிரநற் பெருந்தேவி மடமகளே யரசணங்கு
மணங்கே யின்னும்
விக்கிரமக் கடற்றானை விறல்வேந்த ரிவர்சிலரை
விளம்பக் கேளாய்.

ஏலஞ்செய் பைங்கொடியி னிணர்தழைந்து பொன்ன
கொழுந்தீன் றேறிக் [றைமேற்
கோலஞ்சேர் வரைவேலிக் குண்டலத்தார் கோமானிக்
கொலைவேற் காளை
ஞாலங்க ளுடன்பரவு நாதவன்றன் குலவிளக்கு
நகைவே னம்பி
போலிங்க ணரசில்லை பொன்னார வரைமார்பன்
பொலிவுங் காணாய்.

சொரிமலர்த்தண்மலரணிந்தசோலைசூழ்சூரியத்தார்
கோமான் றேலா
அரிகுலத்தார் போரேறிவ் வரியேறு போலிருந்த
வரச காளை
வரிமலர்த்து மணிவண்டு புடைவருடு மாலையார்
மகளிர் வாட்கண்
புரிமலர்த்தண் வரையகலம் புணராதார் புண்ணியங்கள்
புணரா தாரோ.

வேலைவாய்க்கருங்கடலுள்வெண்சங்குமணிமுத்தும்
விரவி யெங்கும்
ஆலைவாய்க் கரும்பரு வகன்பண்ணை தழீஇயருகே
யருவி தூங்குஞ்
சோலைவாய் மலரணிந்த சூழ்குழலா ரியாழிசையாற்
றுளக்கை வேழம்
மாலைவாய் நின்றுறங்கு மதுரைசூழ் வளநாடன்
வடிவு காணாய்.

கண்சுடர்கள் விடவனன்று கார்மேக மெனவதிருங்
களிநல் யானை
விண்சுடரு நெடுங்குடைக்கீழ் விறல்வேந்தன் றிறமிதனை
விளம்பக் கேளாய்
தண்சுடரோன் வழிமருகன் றென்மலைமேற் சந்தனமுஞ்
செம்பொன் னாரத்
தொண்சுடரும் விரவியநல் வரைமார்ப னுலகிற்கோர்
திலதங் கண்டாய்.

மழைக்கரும்புங்கொடிமுல்லை மருங்கேறவரம்பணைந்
தடாவி நீண்ட [து
கழைக்கரும்பு கண்ணீனுங் காபுரத்தார் கோமானிக்
கதிர்வேற் காளை
இழைக்கரும்பு மிளமுலையா யெரிகதிரோன் வழிமருக

தழைக்கரும்பின் முருகுயிர்க்குந் தாரகலஞ் சார்ந்தவர்க
டவஞ்செய் தாரே.

வண்டறையு மரவிந்த வனத்துலாய் மதர்த்தெழுந்த
மழலை யன்னம்
உண்டுறைமுன் விளையாடி யிளையவர்க ணடைபயிலு
முறந்தைக் கோமான்
கொண்டறையுமிடிமுரசுங் கொடிமதிலுங்குளிர்புனலும்
பொறியும் பூவும்
ஒண்டுறையு மும்மூன்று முடையகோ னிவனிவன
தெழிலுங் காணாய்.

நிழலவாந் தாமரையி னீரிதழுஞ் செங்குவளைத்
தாதும் வாரி
அழலவாஞ்செந்தோகை யலங்குபொலங்கதிர்ச்செந்நெ
லலைத்த வாடை

பழனவாய்ப் பைங்கரும்பின் வெண்போது பவழக்காற்
செம்பொன் மாடத்
தெழினிவாய்க் கொணர்ந்தசைக்கு மியலேமாங் கதநாட
கண்டாய்.

காந்தளங்கட்கமழ்குலையாற்களிவண்டுகளிறகற்றுங்
கலிங்க நாடன்
பூந்தளவங் கமழசாரற் பொன்னறைசூழ் தண்சிலம்ப
னன்றே பொன்னே
ஏந்திளஞ்சிங் காதனத்தி னினிதிருந்த விளவரச
னிப்பா லானேன்
மாந்தளிர்கண் மருங்கணிந்த மணியருவிக்குன்றுடைய
மகதைக் கோவே.

அங்கநாடுடையவர்கோ னவ்விருந்தானிவ்விருந்தா
னவந்திக் கோமான்
கொங்குவார் பொழிலணிந்த கோசலத்தார் கோமானிக்

கங்கைதா னிருகரையுங் கதிர்மணியும் பசும்பொன்னுங்
கலந்து சிந்தி
வங்கவாய்த் திரையலைக்கும் வளநாட னிவன்போலும்
வைவேற் காளை.

வஞ்சியின்மெல்லிடையவளை வானிலாவளர்முன்றில்
வலமாய்ச் சூழ்ந்து
பஞ்சியின்மெல் லடிநோவ நடைபயிற்றிப் படைவேந்தர்
பலரைக் காட்டி
மஞ்சிவரு மாளிகையின் வடமருங்கின் மணிமஞ்ச
மலிரத் தோன்றும்
விஞ்சையர்த முலகாளும் விறல்வேந்தர் குழாங்காட்டி
விரித்துச் சொன்னாள்.

பூலோகத்து மன்னவரையும் அன்னவர் கீர்த்திகளையும் முன்னமே எடுத்துச் சொன்னதன் பின்னர்க் கின்னராதி வேந்தரையும் அவ்வாறே பன்னிவரும் பொழுதில், அருக்ககீர்த்தியின் புதல்வனைக் காட்டி இவன் இன்னான் என்று உணர்த்தாமுன்னரே, அரசகன்னிகையுடைய கண்கள் அக்காளையுடைய புயங்களிலே சிக்குண்ண, அக்குமரற்கே பாணியால் மாலைசூட்டினாணினள் மறைந்தாள். ஊழ்வலி உய்த்துவிடும் முறையைத் தாழ்கொடு தாழ்வலியுடையோருஞ் சகத்தின்கண் உளரோ? அவளை மணஞ்செய்யக் கருதி அங்கு வந்திருந்த பூபாலர்கள் தம்மைவிடுத்து விஞ்சையகுமாரற்கு மாலையிட்டமையால் அழுக்காறடைந்தும், மீட்டும் வினைவிளைவை அறிந்து சினந் தணிந்தார்கள். விவாக மண்டபத்துள்ளார் எல்லாருஞ் சந்தோஷத்தால் ஒருங்கு ஆர்த்தார்கள்.

இவ்வாறு தன் மகள் மைத்துன குமாரற்கு மாலை சூட்டியதை அறிந்த திவிட்டராசன் தூரியம் அதிரக், கங்கையாதி தூநீர்ப் புங்கமஞ்சனமாட்டி, வேதவிதிப்படி ஓமாதி கிரியைகளை நிறைவேற்றினான். அருந்ததி தரிசனமும் பூராகுதி முதலிய கிருத்தியமும் எல்லாங் கிரமமாக நடந்தபின்னர்த், தம்பதிகள் இருவருந் தம்மாளிகையை அடைந்தனர்.

விவாகம் முற்றுப்பெற்ற உடனே விஞ்சைய ராசகுமாரன் அருக்ககீர்த்தி தன் மகள் சுதாரைக்குஞ் சுயம்வரமென்று பறைபறைவித்து, அரசர்களை அங்கு

வருவித்து, முகூர்த்தகாலமானவுடனே சுயம்வரமண்டபத்திற்குத் தன்மகளையும் அழைப்பித்தான். அவ்விஞ்சைய கன்னி, அரசர்களை ஒருவர் ஒருவராக அவர் அன்னார் இவர் இன்னார் என்று தோழிகள் காட்டிக் கூறிவரும் அமையத்தில், மைத்துனனாகிய விசயகுமாரனுக்கே மாலைசூட்டினாள். அனந்தரம் அனங்கனைய சுதாரைநாம சுந்தரிக்குந் திவிட்டகுமாரன் விசயனுக்கும் முற்கல்லியாண முறைப்படியே அக்கினிகாரியம் முதலியனவற்றை விதிப்படி நடத்திப், பொன்மழை பொழிவித்தார்கள். பின் விஞ்சையகுமாரனும் மனைவி சுதாரையுந் தம் போதனமாநகரிலிருக்கச், சோதிமாலையும் அமிர்ததேசனும் விஞ்சையரூரிற் தமது நகரத்திற் சென்று இன்பாரூடரானார்கள். திவிட்டராசனும் மனைவி சுயம்பிரபையோடு கூடிப் பூமிக்கு ஏகசக்கிரேசுவரனாகவும் விசயகுமாரன் இளவரசாகவும் அரசுசெய்துகொண்டிருந்தார்கள்.

எரிவிசயங் கோவேந்தி மன்ன னென்னும்
அரிவிசயங் கெடநின்ற வாளை வேலான்
திருவிசயன் திருவன்ன செல்வி யோடு
மருவிசயங் கெழுகோயின் மலர்ந்து புக்கான்.

இனையனவா மிகுசெல்வ மிங்கு மாக்கிப்
புனைமலர்வா னவர்போகம் புணர்க்கும் பெற்றி
வினையதனின் விளைவின்ன தென்று நாளும்
நினைமின்போ னெறிநின்று நீர்மை மிக்கீர்.

## துறவுச்சருக்கம்.

திவிட்டகுமாரன் விவாகஞ்செய்து புதல்வர்ப்பயந்து சார்வபௌமனுகி இந்திரலோகத்தவர்க்குங் கிடையாத பெரும்போகம் அனுபவித்திருத்தலேயும், எந்நகரினுந் தன்னகரே பொன்னகர்போலச் சிறப்படைந்திருத்தலேயும் பிரசாபதியரசன்கண்டு மகிழ்கூர்ந்திருந்தனன். ஒருநாட் திவிட்டராசனுடைய புதல்வனும் புதல்வியுந் தன் மருங்கு அடைய, அவர்களைத் தழுவி உச்சிமோந்து, அவர்களுடைய அங்க இலக்கணங்களை நோக்க அரசன்மாட்டோர் அறிவுதோன்றியது.

பூமண்டலத்தரசர் அனேகராகவும, அவருட தான மேம்பாடு அடையவுங், கிருஷ்ணுவதாரமான திவிட்டனும் பலராமாவதாரமாகிய விசயனுந் தனக்குக் குமாரராய் வரவும், விஞ்சையராசன் வலியவந்து தன் மகளை விவாகஞ்செய்துகொடுக்கவும், அவர்பெற்ற குழந்தைகள் மானுடருக்கு மேலாய விஞ்சைய பதம் அடையவுஞ் செய்தது யாம் முன்னர் இயற்றிய தவப் பயனன்றே? ஆதலால் இப்பொழுதும் யாந் தவமியற்றின் இம்மரபு இன்னும் மேன்மையடையும். நமக்கும் பெரும்பேறு உண்டாம். இவ்வுலகத்திலே முன்னிருந்த அரசர்களிலே அனேகர் அதிபராக்கிரமமுடைய

வர்கள் இறந்தனரன்றி இருந்தார் ஒருவருமின்றே! ஒருநாளுங் குறைவின்றி அன்னம் முதலியவற்றை நுகர்ந்தும், பூஷணங்களை அணிந்தும் நான் என்று அபிமானஞ்செய்திருந்த உடலும் நம் எண்ணத்தின் வழியினின்றும் வேறாகி, நரை திரை மூப்புப் பிணி சாக்காடு அடைந்து, நாம் விரும்புங் காலத்தளவிற் குறைந்து நீங்கிவிடுமாயின், மற்றவற்றைப் பேச வேண்டுவது அநாவசியமாமே.

> தொகைமலரலங்கல்சூடித்தூநறுஞ்சுண்ணமப்பிப்
> புகைநனிகமழவூட்டிப்புறஞ்செயப்பட்டமேனி
> சிகையினோர்சிறுமுட்டீண்டச்சிதைந்தழுக்கொழுகுமாயின்
> நகைபெரிதுடைத்துநாணுமிதனைநாமகிழ்தனெஞ்சே.

என்றின்னோரன்னவைகள் பலவற்றையுஞ் சிந்தித்து, நிலையாதனகொண்டே நிலையுடைய அறத்தைச்செய்க எனச் சுருதி கூறுதலால், நாம் இவ்வுடலுள்ளபோதே இருமையும் பயக்கும் அறத்தைச் செய்யவேண்டுமென நிர்ணயித்துப், பயாபதியரசன் வேவுகாரரால் அமாத்தியரை அழைத்து, மந்திரசாலையை அடைந்து, அவர்களை நோக்கி இவை பேசுகின்றான்.

அமைச்சர்காள்! பகையரசராற் கொள்ளப்படாததாயுந், திருடர்கவராது காக்கப்பட்டதாயும், நிலைத்த செல்வத்துக்கு யாதேனுமோர் ஊனம் வருமாயின் எங்ஙனம் வரும்? உங்களிலே ஆராய்ந்து சொன்மினென்று கேட்க, அமைச்சர்கள் அரசே! முயற்சி நற்குணங்களென்னும் இரண்டாலும் அரசுசெய்து, புயவலிக்குக்

தக்க ஓம்படையும் உளதாய், நல்வினையும் இருந்து, கூற்றமுங் குறுகாதிருக்குமாயின், செல்வத்தை ஒழி யாது அநுபவிக்கலாம் என்றார்கள். அதுகேட்ட அர சன் மீட்டும் அவர்களைநோக்கிக், கூற்றமுங் குறுகா திருக்குமாயின் என்றீர்களே! அக்கூற்றுவனுற் கொள் ளற்பாலது யாது? அதனை உரைமினென, மந்திரிமார் அரசனே! கூற்றுவனனவன் நாள்வினை புரிந்து நம் முடைய உயிரையே கவர்வன் என்றார்கள். அரசன் மீளவுங், கூற்றுவன் வாராமற் றூதனுப்பிச் சமா தானம் பண்ணிக் கொள்ளலாமோ? அல்லது அவ னுடைய சினேகரைச்சார்ந்து ஒழிவிக்கலாமோ? அல் லது வருமுன்னரே நாம் பகைத்து யுத்தஞ்செய்து வெல்லலாமோ? யாது உபாயத்தால் அவனைவென்று உயிர்வாழலாம்? கூறுமினென்று வினவ, ஏனையர் ஐயனே! அநேகம் பிழைகளை உறுத்திப், பிணியாகிய சேனைகள் சூழ, உயிரின் வாழ்நாளை வந்து வவ்வு கின்ற நமனைவெல்லும் உபாயத்தைச்சாற்ற அறிந்த வர்கள் யாண்டும் இலர் என்றார்கள்.

ரிட்டன்) அவர்களை நோக்கிக் குரவர்காள்! யா மெல்லாரும் அந்தகன் கைமீதிருக்கின்றோம். நம் மாட்டுச் செல்வமெல்லாம் பிறர் செல்வம். ஆதலால் யாம் உலகத்துச் சீவிக்கும் வாழ்க்கையை ஆராயும் இடத்து, ஓர் மான்மறி தன்னை ஒரு வல்லியம் வாலைக் குழைத்து வல்லைபிடிக்க முயலும்போது நல்ல புல் லைப் பார்த்து மேய்ந்தாற்போலும் என்றுரைத்தான். நீதி நூலோர், வேந்தனே! தாங்கள் சொன்னதும்

நெடுநேரமாமே. யாங்கள் எல்லாரும் யானைவாயிற் கவளம்போலக் காலனுடைய வாயிலே அகப்பட்டு அவன் பல்லுக்கு இரையாயிருக்கின்றோம், ஆதலால் அவன் உயிர்கவருதல் இமையளவினும் விரைவாகு மென்று, தம்முயிர் நீங்கவருங்காலத்தும் அரசற்குறு திசூழும் அறிவுடைய நண்ணியர் உரைக்க, மன்னவன் மகிழ்வோடு அவரைநோக்கி, ஆயினும் நம்முயிரைக் கவரவருங் காலனினின்றும் விலகி அடைக்கலம் புகு மிடம் வேறிலதா கூறுதிரென்று வினவினன். அவர் கள் கோமானே! அவ்வழியை உலகத்தைவெறுத்த முனிவர்களை வணங்கிக்கேட்டு அருகன் திருவடிக்கு அடைக்கலம் புகுதலல்லது வேறரணின்று என, ஒளிர்கின்ற நளிர்விளக்கில் விளர்நெய்யை விட்டாற் போல அரசன் கேட்டு அகமகிழ்ந்து, உழையரை நோக்கி அருகக்கடவுளுடைய விழாநாள் இன்றென்று முரசறையும்படி ஏவினன். நகரமாந்தர் முல்லைமலர் மாலைசூடி இரத்தினாபரணங்கள் தரித்து நகராலங்கா ரம் இயற்றினார்கள். அன்று போதனமாநகர் ஆங்குப் பொன்னுலகம் இறங்கி வந்தாங்கு இருந்தது.

கழுமிய காழகி லாவி காமரு
செழுமணி மாழிகைச் சென்னி சூழ்வது
விழுமணி விளங்கிய விலங்கன் மீமிசைத்
தீய வினமழை தவழ்வ

வெண்டுகிலுடுத்து வெண்மாலைசூடி வெண்சாந்து பூசி வெள்ளணி அணிந்து யானையின்மேற் பூப்பலி முதலியனகொண்டு வீதியில் வேதியர் பாவிவந்தனர்.

செம்பட்டுத் தரித்துச் செம்மாலைசூடிச் செவ்வணி அணிந்து செஞ்சாந்துபூசி அரசயானைகளிலே பலிகள் கொண்டு அரசர்கள் விரவிவந்தனர். செந்நிறக் குவளை மலர்சூடிச் சொர்ணநிறச்சுண்ணம் அப்பிப் பொன்னி னன் அமைந்த ஆபரணம் அணிந்து வண்ணப்பொற் றுகில்உடீஇ வைசியருஞ் சூத்திரரும் நிரவிவந்தனர்.

இவ்வாறு இவரெல்லாம் நெருங்கிவரப் பிரசாபதிய ரசனும்பட்டத்துயானையில் இவர்ந்து, நீர்ப்பலி விரைப் பலி பூப்பலி ஆகிய இவற்றை எடுத்துக்கொண்டு, வேல் போலுங் கண்களையுடைய பெண்கள் கவரிவீசப், பால்போலுஞ் சீலசுசி காலும் எழில் நீழலிற், சைன சினகரம் அடைந்து, யானையினின்று இறங்கிப் பலி யைக் கையிலேந்தி அருகசினகரத்தை வலமாகச் சூழ்ந்துவந்தான். வெள்ளிவெண்குடைச் சார்பெல் லாம் ஒள்ளிய சாமரைகள் இசைந்து அசைந்து திருப்பாற் சமுத்திரத்தின் திரைப்பாங்கர் நுரைகள் நிரைத்ததை ஒத்திருந்தது. மயிற்பீலிவட்டமும் அயற்பெயர் ஆலவட்டமும் வெயிற்பானுகிரணத்தை மறைத்தலால் இருள்பரவிக் கால்வைத்துச் சேறலரி தாய்ப் படர்காணல் படராயிற்று. அரசன் வந்த போது அச்சினகரத்துள்ள கனகரத்தின சிங்காதனத் தின் மீது அருகக்கடவுள் பிரசன்னமாயினர்.

ஒண்டமர் மணிகளு மொளிர்பொற் சாதியுங்
கொண்டன ரியற்றிய கோலச் செய்கையாற்
கண்டவர் கண்கவர் நகரங் காண்டலும்
விண்டெிர் வினையினன் வேந்த னுயினான்.

தேவர் இயக்கர் கந்தருவர் வித்தியாதரர் பூமாரிதூர்த்தார்கள். விசயதிவிட்டகுமாரர்கள் இருவரும் அரசன் மனைவியர்சூழ அவனருகிற்போய் நின்றார்கள்.

பயாபதியரசன் தான்கொண்டுசென்ற நீர்ப்பலி முதலியவற்றை விதிப்படி அபிடேகமும் நிவேதனமுஞ் செய்வித்து நடத்தவேண்டிய வழிபாட்டிற் குறைவின்றி நடத்திச் சன்னிதானத்தினின்று,

மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரு நாண
முழுதுலக மூடியெழின் முளைவயிர நாற்றித்
தூவடிவி னாலிலங்கு வெண்குடையி னீழற்
சுடரோயுன் னடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டாற்
சேவடிக டாமரையின் சேயிதழ்க டண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புலங்கொளா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோவே.

கருமாலை வெவ்வினைகள் காறளர நூறிக்
கடையிலா வொண்ஞானக் கதிர்விரித்தா யென்றும்
அருமாலை நன்னெறியை முன்பயந்தா யென்றும்
அடியேமுன் னடிபரவு மாறறிவ தல்லாற்
திருமாலே தேனாரு மரவிந்த மேந்துந்
திருவணங்கு சேவடியாய் தேவாதி தேவ
பெருமானே நின்பெருமை நன்குணர மாட்டார்
பிணங்குவார் தம்மைவினைப் பிணக்கொழிக்க லாமே.

ஒளியாகி யுலகாகி நீவிரிந்தா யென்கோ
உலகெலா நின்னொளியி னுள்ளடங்கிற் றென்கோ
அளியார வுலகநீ யாள்கின்றா யென்கோ
அமருலகு தானின்ன தடியடைந்த தென்கோ

விளியாத மெய்ப்பொருளை நீவிரித்தா யென்கோ
நீவிரித்த வாறேமெய்ப் பொருள்விரிந்த தென்கோ
தெளியாம லில்லைநின் றிருவடிகண் மெய்மை
தெளிந்தாலுஞ் செவ்வனே தெரிந்துரைக்க லாமே.

களியானை நாற்கோட்டத் தொன்றுடைய செல்வன்
கண்ணொரா யிரமுடையான் கண்விளக்க மெய்தும்
ஒளியானை யூழிமுத லானானை யோங்கி
உலகளவு மாகியுயிர் தமக்குறுகண் செய்யா
அளியானை யாரழலஞ் சோதிவாய் சூழ்ந்த
அருளாழி யானையிணை யடிபரவு வார்கட்
கெளியானை யெந்தைபெரு மானையே யல்லால்
இறையாக வீங்கொருவ ரெண்ணுமா றென்னே.

தெருளாமையால் வினவற் பாலதொன் றுண்டு
திருவடிகள் செம்பொனா ரரவிந்த மேந்த
இருளாழி யேழுலகுஞ் சூழொளியின் மூழ்க
இமையாத செங்கண்ணி னிமையோர்வந் தேத்த
உருளாழி யானுமொளி மணிமுடிமேற் கைவைத்
தொருபாலில் வரவுலக நின்னுழைய தாக
அருளாழி முன்செல்லப் பின்செல்வ தென்றோ
அடிப்படா தாய்நின்ற வகன்ஞால முண்டோ.

வானோர்த முலகுடைய மானீல வண்ணன்
மகிழ்ந் திறைஞ்சு மாலையணி மணிமுடிமேல் வைகா
ஊனொரு மறவாழி யோடைமால் யானை
உடையான்ற னொளிமுடியின் மேலுமையோ நிற்கத்
தேனாரு மரவிந்தஞ் சென்றேந்தும் போழ்து
திருவடிகள் செந்தோடு தீண்டாவே யாகில்
ஆனாவிம் மூவுலகு மாளுடைய பெம்மான்
அடியுறுவா ரின்மைதா மறிவுண்ட தன்றே.

தேனருளி மந்தாரச் செந்தாமந் தாழ்ந்து
திரளாைய செம்பவளம் வம்பாக வூன்றி
வானருளி மாணிக்கச் செங்கதிர்கள் வீசி
மதிமருட்டும் வெண்குடையோர் மூன்றுடைய வாமன்
யானருள வேண்டியடி யிணைபணியும் போழ்தும்
இமையவர்கோ னாயிரச் செங்கணன் வந்து
தானருளு மாறென்று தாள்பணியும் போழ்துந்
தகையொன்ற தேலிறைமை தக்கதே யன்றே.

விண்டாங்கு வெவ்வினை வேரூஉவுதிர நூறி
விரிகின்ற மெய்ஞ்ஞானச் சுடர்விளக்கு மாட்டிக்
கண்டார்க ணின்னிலைமை கண்டொழுக யானின்
கதிர்மயங்கு சோதியாற் கண்விளக்கப் பட்டுத்
தண்டாஅ மரைமலரின் மேனடந்தா யென்றுந்
தமனீயப் பொன்னணையின் மேலமர்ந்தா யென்றும்
வண்டாஅ ரசோகினிழல் வாயமர்ந்தா யென்றும்
வாழ்த்தினல் வாராயோ வானவர்தங் கோவே.

கருவார்ந்த பொருணிகழ்வுங் காலங்கண் மூன்றுங்
கடையிலா நன்ஞானக் கதிரகத்த வாகி
ஒருவாதிங் கவ்வொளியி னின்னுள்ள மாகில்
உலகெல்லா நின்னுள்ளத் தேயொளிக்க வேண்டா
திருவார்ந்த தண்மார்ப தேவாதி தேவ
திரளாைய செந்தளிர சோகமர்ந்த செல்வ
வருவாரும் வையகமு நீயும்வே றாகி
மணிமேனி மாலேம யக்குவதிங் கென்னோ.

செங்கணெடு மாலேசெ றிந்திலங்கு சோதித்
திருமுயங்கு மூர்த்தியாய் செய்யதா மரையின்
அங்கணடி வைத்தருளு மாதியா யாழி
அறவரசே யென்றுநின் னடிபணிவ தல்லால்

எங்கணிட ரகலுமா றிந்நிலைமை யெய்தி
இருளுலக நீக்குமரு டருகநீ யென்று
வெங்கணிரு வினையையற வென்றாய்முன் னின்று
விண்ணப்பஞ் செய்யும்வி ழுத்தகைமை யுண்டோ.

என்று அதிசயனைத் துதிசெயலாயினன். அதன்பின் இறைவன் போதசாமியின் பாதசேடத்தைத் தலையின் மீதுசூடிச் சாதுகோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து, வேதிகை மண்டபத்திற்சென்று, ஆங்குறைந்தார் ஒரு முனிவருடைய பணிமலரடிகளை நனைமருமாலையாற் துடைத்து, வினையற வீழ்ந்து வணங்கி, அவர் திருவாய்ப் பிறக்கும் பெருவாய் மொழிகளை மௌனமாகக் கேட்டுக்கொண்டு சமீபத்தில் இருந்தான்.

முதுவர் அந்த முனிவரனை நோக்கி அடிகளே! எம் அரசற்குப் பிறவிப்பிணியைத் தடுத்து உய்யும் வழியைக் காண்பித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனர். முனிவரும் அரசனைநோக்கி அவற்குப் பிறவி ஒழிக்குந் துறவிவழியை அறிவிப்பான் ஆரம்பித்து நெறிமுறை ஆசீர்வதித்து மொழிகின்றார்.

அரசனே! உலகத்தில்வாழும் ஆன்மாக்கள் பலவுளவாயினும், அவைகள் நரககதி விலங்குகதி மானுடகதி தேவகதியென நான்குவகைப்படும். அவற்றுள் நரககதியாவது பாவஞ்செய்தோர் மேவும் உலகம். அது தொகையால் ஏழாய் வகையால் நாற்பத்தொன்பதாய் விரியால் எண்பத்துநான்காகும். அவைகள் இருணரகமுதற் கும்பிக்குழியீறாக வாயினும் சொல்லவும்

நினைக்கவும் அருவருக்கத்தக்கவைகளாம். அந்நரகங்களை அடைந்தவர் படுந்துயரை எண்டுணைக்கில் நமக்குங் கண்ணீர்வரும். அவர்கள் பூமியிற்செய்த பாவங்கள் ஒவ்வொன்றையும அவர்கட்குக் காலதூதர்கள் சொல்லிச் சொல்லிச் செப்புக்கடாரநெய்யிலிட்டுப் பொரித்தும், நெருப்புச் சொலிக்கும் இருப்புப் பாவையைத் தழுவுவித்துங், கரும்பொன் முளைகள் நெருங்கக் கடாவிய தண்டாலடித்துந், தாமிரத்தை உருக்கி வாயில்வார்த்தும், நாவைக் கொடிற்றாற் பிடுங்கியுஞ், சரீரத்தைச் செக்கிலிட்டுத் திரித்தும் அக்கினியில் இட்டு எரித்தும், உடலின் தோலை உரித்தும், மழுவினால் மார்பைப் பிளந்துங் கழுவில் ஏற்றியுந், தண்ணீர்த்தாகமுடையேமென்று அலறுகின்றவர்களுக்கு நச்சுவாவி காட்டி அதில் உண்டு நா அழுகச்செய்தும் இன்னும் அனேகவிதமாய் வருத்துவார்கள்.

இதன்கீழ் நரகங்கள் ஒவ்வொன்றிற் படுந் துயரம் முறையே ஒன்றற்கொன்று இரட்டியாம். முதல் நரகத்திற் கிடப்பவர்க்கு அற்பகாலம் பதினாயிரவருடம். அதிக காலம் ஒரு சமுத்திரவருடமாகும். அதன் கீழ் நரகங்களிற் கிடப்பவர்கள் ஆங்குத் துன்பம் அனுபவிக்குஞ் சிறுகாலந் தமக்குமேல் நரகத்தாருடைய அதிககாலமாம். கீழ் ஆறுநரகங்களில் இருப்பவர்களுக்கு அதிககாலமாவது முறையே மூன்று சமுத்திரம் ஏழு சமுத்திரம் பத்துச் சமுத்திரம் பதினேழு சமுத்திரம் இருபத்திரண்டு சமுத்திரம் முப்பத்திரண்டு சமுத்திரமென்னுங் கணக்கினவாம்.

மன்னவனே! அந்நரகங்களிற் கிடப்பவர்கள் யாரெனிற், தம்மனையாளை விடுத்துப் பிறர்மனையாளிடஞ் சென்றோரும் மனக்கொடுமையுடையோரும் உயிர்க் கொலை விரும்பினோரும் பாவவழியாற் பொருள் ஈட்டினோரும் அறஞ் செய்யாதோரும் அறஞ் செய்தலே சுபாவமாயுள்ள பெரியோரை இகழ்ந்துரைத்தோருங் கடலிலே தோணி ஓடம் இவைகளில் ஏறி மாமிசம் பிடித்தோருங் கரையிலே ஊனின்பொருட்டு வேட்டமாடிக் காட்டு மிருகங்களை வீட்டுவோரும் ஆகிய இவர்கள் முதலான பாவிகளேயாம். முற்கூறிய இவ் ஆறு நரகங்களிற் கிடப்போர் ஒருகாலுங் கரையேறார். கரையேறினாலும் முன்வாசனையினால் மீட்டும் பாவஞ்செய்து அதிற்றானே வீழ்வர்.

இனி விலங்குகதியாவது ஓரறிவுடையனமுதல் ஐயறிவுடையன ஈறாகும். அஃது ஐந்துவகைப்படும். அவற்றுள் ஓரறிவுயிர்கள் சலனமுள்ளவுஞ் சலனமில்லவுமென இருவகைப்படும். அவற்றின் விரிவெல்லாம் ஈண்டுரைப்பிற்பெருகும். அதுநிற்க, இங்கே விலங்குகதியென்றது ஈரறிவுமுதல் ஐயறிவிறுதியான நான்கையுமேயாம். அவைகளும் முற்செய்தபாவத்தால் விலங்காய்ப்பிறந்து ஊர்ந்து செல்லுதலாலும் உழுதலாலும் பாரஞ் சுமத்தலாலும் மாமிசத்தின்பொருட்டுக் கொல்லப்படுதலாலும் ஊன்விற்போராற் கவரப்படுதலாலும் அரசர்வேட்டையாலும் வேடர்கையில் அகப்பட்டும் வருந்தி இறக்கும். மன்னவனே! கன்னியர் வேட்கையுங் கடவுளின் தன்மையும் பிணியின்

வன்மையும் விலங்கின் துயரும் ஆகிய இவைகள் ஞானிகளேயன்றி ஏனையோர் அறியகில்லார்.

அதுநிற்க, இவ்வகை விலங்குகளாய்ப் பிறந்து துன்புறுவோர் யாரெனிற், தவவேடந்தாங்கி மாயஞ் செய்து திரிவோரும், இரசவாதஞ்செய்து பெரும் பொருள் தருவோமென்று பொருளுடையோரை ஏமாத்தி உள்ளதையுங் கவர்வோரும், உயிர்களுக்கு வரும் ஏதத்துக்கு அஞ்சாதோரும், முன் ஒரு பற்றினாற் சினேகம்பண்ணிப் பின் கோபத்தினால் ஒருவனுக்குத் தீமைசெய்வோருஞ், சுற்றத்தோடு பகைகொண்டவரும், உயிரானது ஒன்றில்லை இனிமேற் பிறவியுமில்லை என்போரும், நன்மைதீமைகள் இல்லையென்போரும் ஆகிய இவர் முதலாயினோரோயாம்.

இனி மானுடகதியாவது: அரசனே! மக்கட்கதியென்பது ஏககதியாயினும், மக்களினுள்ளுஞ் சேகர் என்று மிலேச்சர் என்று மனிதர் என்று திப்பியர் என்று போகமனிதர் என்று அனேக விகற்பங்கள் உள்ளன. அவர்களுள், முதற்கண்ணே கூறிய சேகர் மிலேச்சர் என்னும் இருவகையோரும் பிறப்பால் மனிரோயினும் அறிவின்மைமுதலியவற்றால் விலங்குகளிலேயே வைத்து எண்ணப்படுவர். மனுடருள்ளும் நடுவுநிலைமை இல்லாது குதர்க்கம் உரைப்போரும் பஞ்சேந்திரியங்களை அடக்காதவரும் ஊன் உண்போருங் கொடுந்தொழில்செய்வோரும் இவர்களைப்போற் பட்ட ஏனையோரும் விலங்கின் கதியோடு சேர்தற்

பாலர். அவரையொழிய நன்னிலத்தில் நற்சாதியிற் பிறந்தவருள்ளுந், தக்கதிது தகாததிது என்னும் அறிவு இலாதாரும் மக்களுட் பதரென்று சொல்லப் படுவார். இவைகள் யாவையுமின்றி முன் இயற்றிய தவத்தினால் நற்குலத்தில் வந்து உற்பவித்தாலும், பேடி அலி குருடு முடஞ் செவிடு முதலியனவாக வும் பெண்ணாகவும் பிறத்தல் மானுடசென்மத்துக்கு அடுத்த ஊழுடைத்தன்று. இக்குறைவுகள் ஒன்றே னும் இன்றியுங், கருவினுள் அழிதல் பிறந்தவுடன் இறத்தல் காளைப்பருவத்தில் மரித்தல் முதலிய கண் டங்களையும் இடையிடையே வரும் பிணிமுதலியவற் றையும் நீங்கி நல்லொழுக்கம் அடைந்தவர்களே மானுடரென்று விதந்து சொல்லப்படுவர்.

அம்மனிதர் அனுபவிக்கும் இன்பமானது, ஒருவனை ஒரு மதயானை துரத்த, அவன் ஓடிவந்து ஓர் பாழ்ங் கிணற்றில் மறைய, அக்கூபத்தினுட் பாம்பு வதிய, வெளியே ஆம்பலும் நிற்க, இரண்டனுக்கும் நடுவே அவன் ஒரு புல்லைப் பற்றித் தொங்கும்போது, அப் புதலை எலி அறுக்க, இதன் நடுவில் அவன் தனக்கு மேல் இருக்குந் தேன்கூண்டினின்று ஒழுகும் மதுவில் ஒரோவொருதுளியை நாக்கினால் நக்கினாற்போலும். ஆனால், மனிதரால் அடையும் பயன் இல்லையோவெ, னில், உண்டு. அவை, கற்பகநிழலையுடைய போகபூமி களாம். அவற்றை அடைதற்குச் சற்குணந் தானந் தவம் பூசனையென்று இந்நான்கு வேண்டும்.

அத்தானம் ஈவோரும் ஏற்போரும் உத்தமர் மத்திமர் அதமர் என மூவகைப்படுவர். தானம் ஏற்போர் பஞ்சப்புலனையும் ஒடுக்கினோரிலும் மனம் அமைந்தவர்களே எழுமடங்கு அதிகமானவர். துறவு அடக்கம் பிறருக்கு நன்மைசெய்தல் உறவினரை ஓம்புதல் உண்மைவழிநிற்றல் என்றின்னோரன்னவைகளே ஏற்பார்க்குள்ள குணமாம். காலம்பெற ஈதலுந் தறுகண்மையின்மையும் ஈதற்கணுசையுறுதலும் ஏற்பவரின் கட்காதலும் பொருளின்கணுசையின்மையுந் தரித்திரமறிந்து கொடுத்தலுமாகிய இவைகள் ஈவோர்க்குள்ள குணங்களாம். இவைகளை ஆராய்ந்து, இரந்தவரைத் தம்முடைய தலைவாயிலிடத்தே நின்று கண்ணுற் கண்ட மாத்திரத்தில் இரங்கித், தந்தம் ஆற்றலுக்கிசைய உணவுகொடுப்பின், அவர்கள் நிலவுலகை ஆளும் அரசராய்ப் பிறப்பார்கள். அவர்களுக்கு இப்பகுப்புவேண்டுவதில்லை. அஃதன்றி உயிர்களுக்கு இடையூறுசெய்து திரியும் வன்கணருக்குத் தானஞ் செய்வாராயின், அவர் அடையும்பயன் இதுவென்று கூறுதல் நகைக்கு இடமாகும். தம்முடைய கைப்பொருளும் இழந்து முடிவிலே நரகையும் அடைவர். அவர் ஒரு தண்டற்காரனை வலித்துக் கைப்பொருள் கொடுத்து என்னைத் தண்டஞ்செய்குக என்பவனோடு ஒப்பர். இனி எல்லா நற்குணமும் அமைந்த முனிவருக்கு உண்மைப்பொருளை அறிந்த தாதாவானவன் கொடுக்குந் தானப்பயன் மேற்கூறிய முத்திறத்துட் படாததாய் உத்தமதேவர்க்குள் ஒருவனாக வைக்கும். இது தானங்களுள் விசேடதருமமாம்.

இவ்விசேட தருமபலன் அளித்தற்குக் காரணமான சாமானிய தருமமும் பலஉள. அவையாவன, அருள், தெருள், நற்குணத்திலாசை, புகழ்ச்சிநிகழ்வு, தவம், ஞானந், தியானநிகழ்வு என்னும் ஏழுமாம். அவற்றுள் அருளாவது, உயிர்களுள்ளே யாதொன்று இடருறுமோ அவ்விடரைக்கண்டு இரங்கி அது தீரும் வழியை நாடலாம். தெருளாவது, ஒருவன் தன்னை வைத இடத்து வெறுப்பும், வாழ்த்திய இடத்து விருப்பும் உறாது மெய்யுணர்வோடிருத்தலாம். குணத்தின்கணாசையாவது, அறிவுடையாரிடத்து அன்புவைத்தல் முனிவருடைய ஒழுக்கத்தையுவத்தல் முதலாகிய நற்குணங்களில் விருப்புடைமையாம். புகழ்ச்சிநிகழ்வாவது, தமது ஆற்றலுக்குத்தக்க தவமிழைத்தல் ஒழுக்குடையராய் இருத்தல் முதலியனவாம். தவமானது ஆசியம், இரதி, அரதி, சோகம், பயஞ், சுகுச்சை ஆகிய அறுவகைத் துவர்ப்புக்களுமற்ற அரியநிலையை அடைந்து தலையொழுக்கத்தில் நிற்றலாம். ஞானமாவது, நூற்பொருளைக்கேட்டு நுண்ணறிவுடையோரால் அறியப்படுவதும் மயக்கமாகிய அஞ்ஞானவிருளை நீக்குவதும் மெய்ப்பொருளை விளக்கும் விளக்காயுள்ளதுமாம். தியானநிகழ்வு நால்வகைப்படும். அவை ஆர்த்தம் இரௌத்திரஞ் சுக்கிலஞ் காட்சி என்பனவாம். அவைகளுள் முற்கூறிய இருவகைத் தியானமுஞ் சனனமரணங்களுக்கு ஏதுவாகும். மற்றைய இரண்டு தியானமும் போகமோட்சத்தைக் கொடுக்கும். காட்சியென்னும் இத்தியானவிளக்கை ஏற்றினோர் முன்னர்க் கூறிய விரதானுட்டானம் இல்லாரா

யினும், அவர்கள் சனனமரணங்களிற் றிரும்பாமல் எஞ்ஞான்றும் போக மோட்சங்களை இடையறாது அனுபவித்துக்கொண்டே யிருப்பார்கள்.

இனிப் போகமனிதராவார், மன்னவனே! உன் பிள்ளைகள் விசயன் திவிட்டன் முதலாகப் பதினெட்டுப் பேர்களுளராவர். அப்போகமனிதருட் பரதனாகிய நின் குலத்தவனோடு நீயும் ஒருவனாவை. அருகக் கடவுளும் வீடு அடைந்த துறவருமே இப்போக நிலத்துள் உத்தமராவர். தகுதியான தானம் முதலிய செய்து போகநிலத்தை அடைந்தவர்கள் அனுபவிக்கும் இன்பங்களைச் சொல்லமுடியாது. அப்போக நிலத்துறைவோர் குழவிப்பருவம் நாற்பத்தொன்பது அகவைசென்றால் மேனியழகுள்ள காளைப்பருவம் அடைவர். அப்படிக் காளைப்பருவம் அடைந்த ஒருகன்னிகையும் அப்பருவமுடைய ஒருகாளையும் பொழில்விளையாட்டிற்காக ஒரு சோலையை அடைந்து தெய்வங் கூட்டிவைக்க, ஒருவரை ஒருவர் கண்டு, முன்னைப் பான்மைவழியே மனம் ஓடி மயங்கி, இருவருங்கூடி, மூன்று பல்லம் என்னுங் கணக்கினையுடைய காலம் முடியுமளவும் பலவகை இன்பங்களையும் நுகர்வர். குறித்தகாலம் முடிந்தவுடனே அவர்கள் மேலேசேறலல்லது கீழ்ச்செல்லார்கள்.

இனித் தேவகதியாவது, புண்ணியமேலீட்டினாற் றேவ இன்பம் அனுபவித்திருத்தல். தேவர்கள் பவணர், வியந்தரர், சோதிடர், கற்பகரென்று நால்வகைப்

படுவர். இவர்களுக்கு மேலவர்களாயும் முத்திறத்தின்ருளர். இவர்களுட் பவணர்கள் ஆயிரம் மணிப் பணாமுடியையும் அக்கினிச் சிகையையும் உடையவர்களாய் இருப்பர். கின்னரர் கந்தருவர் முதலியோரே வியந்தரர் எனப்படுவர். இவர்கள் இந்நரலோகத்தின் கண் எவ்விடத்தும் இயங்குபவராகி, மென்னரம்பின் இசைவல்லராயும், அநரதம் விழவுகண்டு உவப்பவராயும், மன்னரை வழிபடுபவராயும் அகமகிழ்ந்திருப்பர். குலகிரிகளிலும் பல உன்னதமலைகளிலுங் குளிர்பொழில்களிலும் நளிர்கயங்களிலுந் தீவகங்களிலுஞ் சாகரங்களிலும் பரவெளிகளிலும் பெருநகரங்களிலும் உருக்கரந்தும் வெளிப்பட்டும் உறைந்து இயலுவர். சந்திரர் சூரியர் தாரகைகள் நட்சத்திரங்கள் கோள்களென்றின்னோரே சோதிடர் எனப்படுவர். இவர்கள் அந்தரவழியாய் மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவராய்ச் சுந்தரச் சுடர்செறிந்து உலவுவர். இவர்களுக்கு மேலே கற்பக உலகத்துள்ளோரே கற்பகராவர். இவர்கள் எப்பொழுதும் இன்பமே அனுபவிப்பர். துன்பம் யாவதும் உரூர். இவர்கள் இமைத்தலில்லாதவர்கள். வாடாத கண்ணிகளும் மழுங்காத துகிலுமுடையர். இவர்களிருக்கும் உலகத்தில் இரவு பகலில்லை.

அணுவளவாய்ச்சிறுகுதன்மற்றதிநுட்பமிகப்பெருகல்
நணியவர்போணினைத்துழியேநண்ணுறுதல்விழைதகைமைப்
பணியினமைத்திடல்குறிப்பிற்பலவுருவுநனிகோடல்
துணிவமையுநெடுவேலோய்சுரருடையகுணங்களே.

நான்கு கதிகளும் அக்கதிகளிற் சேரும் வழியுஞ் சொன்னும். நரககதியிலும் விலங்குகதியிலுஞ் *சேராமல் நற்காட்சி வழிநின்று, தவம முயன்றோரே பேரியல்பினர். என்று இன்னோரன்னவைகளையெல்லாம் அந்தத் தபோதனர் அரசனுக்கு ஓதினர்.

அவ்வாருகிய திவ்வியோபதேசத்தைக்கேட்ட பிரசாபதியரசன் அவனைநோக்கி அடியேன் பேரின்பம் அனுபவிக்கும் வீட்டுநெறி அடைவதற்கான முயற்சி செய்வேனென்றான். அமைச்சர்கள் அரசனைநோக்கி நாயகரே! இப்போது இந்தத் தூயவருரைத்த போதனை விலக்கத்தக்கதன்று. ஆயினும் உலகபரிபாலனத்தை விடுத்து இதற்கு உடன்படல் ஞாயமாகாதென்று கூற, அதற்கு அணுவளவும் ஏயநினையாமல்,

> வடுவெறு மாதவ னுரைப்ப மாண்புடை
> அடிகள தறவமிர் துண்ட வாற்றலான்
> முடிவுகொ ளுலகெய்த முயல்வ னென்றனன்
> விடுகதிர் மணி முடிவென்றி வேந்தனே.

அதுகேட்டு அமைச்சர் அரசனுக்கு இசைந்து தவம் இயற்றுமாறே தாமும் அனுவதிப்பாராயினர்.

## முத்திச்சருக்கம்.

அரசர்க்கரசே! அநேககாலம் இருள் நரகத்திடை வீழ்ந்து வருந்தும் ஒருவன், யாதானும் ஒரு புண்ணிய ஈட்டினால் அந்நரகத்தைக் கடந்து உய்ந்து போகும் வழியிலே, வேறொருவன் மீளவும் உன்னை முன்னைய குழியில் வீழ்த்திவிடுகிறேன், அதுவே மிகநன்மையானதென்றுரைத்தால் அவன் கேட்பானோ? அரசனாலே வைக்கப்பட்ட சிறைச்சாலையின் துயரங்களை அனுபவித்து அதினின்று நீங்கிய ஒருவன் மீட்டும் அச்சிறைச்சாலையை நச்சி நாடுவானோ? அதுபோலச் சந்ததம் பந்தமுறுத்தும் இந்தப் பிறவிப் பிணியை அஞ்சி, அதினின்விலகி வீடடைதற்குத் தவஞ்செய்யத் துணிந்தவர்கள் தம்மை ஆசாபாசத்தில் அமிழ்த்துந் தொடர்புடைய புத்திர களத்திர மித்திரர்களை நோக்கார்கள். இராசரீக போக யோகம் அவர்களுக்குக் காலிற் றூசாயிற்றே. ஆதலால் அரசனே! இனித் தேவரீர் சிரசிற்தரித்த கிரீடத்தை இறக்கித் தவம் புரிதலே முறைமையென்று அறைந்தனர்.

உடனே அரசன் எழுந்து புதல்வனை அழைத்துத் தன்னெதிர் நிறுத்தி உரைப்பானாயினான். மக்காள்! பொருளில்லாதார்க்கு இம்மையின்பம் இல்லை. அருளில்லாதார்க்கு அறப்பயன் இல்லை. கற்றறிவிலார்க்கு நன்னுணர்வில்லை. அதுபோலச் சீதேவியும் நற்

குணத் தெளிவில்லாதோரிடத்து நிலையாக நிற்கமாட்டாள். அத்திருமகளினது நிலைமையையுஞ் சொல்லுதுஞ் சற்றே கவனித்துக் கேட்பீராக:—

அத்திருச்செல்வி, அனேகநாளாகத் தன்னோடு கூடியிருந்தவனை இகந்து இடம் வாய்த்துழி வேறோர் புத்தரனை விரும்புவாள். ஒருவர்கண்ணே உறவினையுடையளாய் என்றும் இராள். பொருள் உள்ளளவும் அப்பொருள் காரணமாகக் கூடியிருந்து பொருள் குறைந்துழி நீங்குங் கணிகையர்போல, அவளும் புண்ணியம் உள்ளளவும் ஒருவர்பால் வைகிப், புண்ணியங் குறைந்தால் எஃகி அகல்வாள். அத்திருமடந்தை ஒருவன்கட் தான்சேர்ந்து சின்னாள் உறைந்தானபின் அவனுடைய நற்குணங்களை மறைத்துத் தீக்குணங்களாகிய கோபஞ் செருக்கு முதலாயின அவனிடம் அணுகச்செய்வாள். கற்றவரையாவது மற்றவரையாவது அவளுக்கு உற்றவரென்னும் பெற்றியேயிலது. பரத்தையரைக் காமுற்றவனுடைய பொருள் எவ்வாறு அழியுமோ அதுபோல அத்திருமகளை விரும்பினோர் குணங்களும் அழியும். ஆதலால் அவளிடத்தே ஒருபோதும் ஆர்வஞ் செய்யன்மின். அவளைப் புறத்தியாள் என்றே நினைமின். உங்கட்கு உறவினர் கற்றறிமாந்தரே ஆதலால் அவர்களிடத்தில் முற்றவும் நேசம் வைக்குதிர்பிற.

இனிப், பூமடந்தையின் இயல்பையுங் கேட்பீராக. அவளும் ஒருவரை இவர் நற்குணமுடையார் நற்குல

முடையார் பொற்குவைவையுடையார் என்னுங் கொள்கையிலள். வலிமையும் உபாயமும் உள்ளவனெவனே அவனிடத்தடைகுவள். இந்நிலமகளுடைய இன்பத்தை முன் நுகர்ந்தோர் சமுத்திரக்கரையிலுள்ள மணலினும் அநேகர். இவர்களுள் யாவரோடாயினுங் கூடச் சென்றவளல்லள். தன்னை நெடுங்காலம் ஆண்டு வந்த வேந்தன் இவனென்று ஒருவனிடத்தாயினும் பற்றுவையாள். யாவனொருவன் வந்து தன்கையிற் பிடிப்பானே அவனிடத்து அளாவுவள். மாற்றம் வேறு சாற்றவேண்டுமோ? முன்னாழிகைவரையுந் தன்னை மணம்புணர்ந்த அரசன் களத்தில் மடிந்து புழுதியிற் புரளச், சற்றேனும் இரக்கமின்றி அவனை வதைத்தவனையே உடன் பின்னாழிகையிற் கைப்பற்றுவாளாயின், அவள் குணங்களை இன்னனவென்று அறிந்து கொண்மின்மன். இஃது அவளது கற்பின் வண்ணமாம். இவளிடத்து ஒருபோதாயினும் அந்தரங்கப்பற்று வையன்மின். நுமது பூபாரத்தை நும் புதல்வர் தாங்கினபின் நும்முயிர்க்கு உறுதிபயக்கும் நல்வழியை நன்கு முயன்று தேடக்கடவீர்.

தேன் இவரும் மாலை ஆலும் மருமத்தர்காள்! யான் இனிமேல் எனக்கு வேறரசாட்சி தேடமுயல்வேன். இன்றுதொடங்கி இப்பூபரிபாலனம் உங்கள் வசத்ததாகும். நீவிர் என்னுடன் வசித்து நுகர்ந்த நாளோ சில. நுங்களுக்கு இனிமேற் கழியும் நாளோ பல. கற்றறிவினான் மாட்சிமைப்பட்ட மனமுடைய புதல்வர்களே!' நீவிர் என்னைப் பிரிதலால் எட்டுணையும்

வருந்தற்க. யான் அருந்துறவையே பெருந்துணி பாய்க் கொண்டனனென்று கூறினான்.

குமாரர்கள் இருவருங் கூப்பியகையராய் அடியேங் கள் தங்களுக்கு யாதேனுஞ் செய்தபிழையில்லையே! எங்களை நீங்குதல் எற்றுக்கென, அரசன் நீங்கள் ஒரு தவறுஞ் செய்திலீர் என்றுரைத்து, அவர்க ளோடு பேசுவதை அவ்வளவில்விட்டு, அவர்களுக்குத் தானோர் அயலவன்போலாயினான். பின்பு அந்நாள் காறுந் தனக்கு ஆவியும் அமுதமுமான தேவிமாரை அழைத்து என் அருமருந்தன்ன பாவையரே! யான் தவஞ்செய முயலுகின்றேன்; நுங்கருத்தென்னையோ வெனவினவ, அவர்கள் தாமுந் தவஞ்செய்யத் தலைப் பட்டார்கள். இதைக்கண்ட மந்திரிமாரும் நாங்கள் இனி இமைப்போதேனும் இங்கிருத்தல் குற்றமாகு மென்று கருதித் தாமுந் தமது மந்திரபாரச்சுமையை இறக்கிவிட்டுத் தவஞ்செய்யப் புகுந்தனர்.

அவ்வேளையிற் பயாபதியரசன் தேவர்கள் கொண்டு வந்த பாற்கடல் நீரிலே முழுகி, முனிவரது ஏவலி னால் அரசபூஷணமெல்லாவற்றையும் நீக்கினான். அர சர்கோனாகிய பயாபதி இராசகிரீடத்தைநீத்த அளவிற், தேவர்கள் அன்னோன் முடிமீது பாற்கடல் அமுதாட் டித் தமக்குரிய முடியுஞ் சூட்டினார்கள். அதனைக் கண்ட குறுநில மன்னவர் ஆயிரவர்களும் தத்தம அரசாட்சிகளைத் தத்தஞ் சிறுவர்க்கு ஈந்து தாமும் முடிகளைக் களைந்து தவஞ்செய்யிய முயன்றனர்.

வெண்ணிற விசயனும் நீனிறத் திவிட்டனுந் தங்கள் பிதாவினுடைய சிரசினின்றுங் கிரீடம் நீங்கினபோது கடல் ஒலித்தாற்போல் இரங்கிப் புலம்பி அத்தனே! தங்களுக்கு யாங்கள் இந்நாள்காறும் புதல்வர்களாய் இருந்தேம், இன்றைக்கே அன்னியராயினேமென்று மனமுருகி அழுதனர். அவர்கள் விழியினின்றுங் கண்ணீர் ஆறுயோடியது. வேந்தர் வந்து அடிபரவ ஏந்தி ஏந்தி எங்களைத் தாந் தம்மார்பின்மீது அணைத்துக் கொண்டாடும் ஆனந்தத்தை வகித்தவர் இன்னராயினர். மார்பிலணிந்த மாலையைக்கழற்றி யாங்கள் அணிந்தும் தோளின்மேலேறியும் விளையாடுங் கொண்டாட்டத்தை இனி இவர்மனமகிழ யாவர்செய்வார்களென்று உருகி வருந்தினர். அப்போது முனிவர்கள் அவர்களைநோக்கி அரசகுமாரர்களே! உங்கள் பிதா நிலையில்லாத உடம்பைக்கொண்டு நித்தியமும் நிலைபெற்ற அறத்தைச் சம்பாதித்து உலகினைத் தன்னடிப்படுத்தமுயன்ற இவ்விரதீரத்துக்காகவா நீவிர் இரங்கிக்கரைவதென்று அவரைத் தேற்றினார்கள். அதைக் கேட்ட இராசபுத்திரர் அங்ஙனமாயின் நாங் கதறுதல் குற்றமுடைத்து; நம்பிதாவின் கருத்துப்படியே ஆகுகவென்று வருத்தம் நீங்கி முனிவர்களை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தமது நகரை அடைந்தனர். சேனைவீரர்களும் ஆறு அரசசெல்வத்தையும் நானுலக அரசாட்சியையுங் காலிற் பட்ட பொடியாகவுங் கருதாத அரசன் நம்மை ஒரு பொருளெனக் கருதுவானல்லனென்று நிச்சயித்து அவனைத் தொழுது கொண்டு தங்கள் நகரத்துக்குத் திரும்பினார்கள்.

பயாபதியரசன் முனிவரருடைய கிருபாநோக்கத்தாற் பஞ்சேந்திரியங்களை அடக்கிக் காமமுதலிய பகையைக்கடந்து முத்தியென்னும் பேரின்பமடந்தையைப் புணர்ந்து பெருவாழ்வடைந்திருந்தான்.

வேற்படைவிடுத்துவீரத்தவ்வரசதனைமேவி
நூற்படைமுனிவர்கண்ணுளேக்கியநயத்தனுகிப்
பாற்படுவிரதநோன்மைப்படைப்பெருந்தலைவனாவர்
மேற்படைசெய்யச்செல்லும்வினைவனைவிலக்கவைத்தான்.

குணப்படையிலக்கமெண்பான்குலவுநான்காகுஞ்சீலக்
கணப்படைபதினெட்டாகுமாயிரங்கருவியாகத்
துணைப்படைபிறர்க்குச்செய்யுந்துன்னயத்தளவுநீக்கி
மணப்புடைசிந்தையென்னுமடந்தையைச்செறியவைத்தான்.

செறிவெனப்படுவமூன்றுசெழுமதில்செறியச்செய்து
பொறியெனும்வாயிலேந்துபொற்கதவடைத்துமாற்றி
அறிவமைசிந்தையின்மாட்டகம்படியுழையராக்கிக்
கறையிலீரறுவர்நிற்பவிறைவராக்காக்கவைத்தான்.

படைகெழுபுரிசைவெல்வார்புறநின்றுபதின்மர்காக்க
இடையவர்தம்முளாரோயுழையரீரறுவராக
உடையதன்னுலகமூன்றுமொருவழிப்படுக்கலுற்று
மிடைகெழுவினைவர்தானைமெலியமேற்சென்றுவிட்டான்.

பின்னணியோகுநான்மையபரகாத்திரம்பெற்றேனைத்
தன்னவயவங்கண்முற்றித்தயங்குநான்மணங்களோவா
துன்னியதிசையினுய்க்குமுணர்வெனும்வயிரத்தோட்டி
இன்னியன்ஞானவேழத்தெழிலெருத்தேறினனே.

திருக்கெயில்காப்புவாங்கத்தடக்கைமால்பகடுநுந்தித்
திருக்கிளர்குணமேற்சேடிச்செழுமலைக்குவட்டினேட்டி
முருக்கியவுருவுவேட்கைமுனைப்புலமகற்றிமுற்றிச்
செருக்கியவினைவர்வாழுந் திண்குறும்பழிக்கலுற்றான்.

்நானமைக

கறையிலீராறுக்கொத்தகண்ணியர்கவரிவீச
முறையினற்பெருகுமுள்ளச்சமாதிநீர்முறுகவுண்ட
குறைவிலாத்தியானமென்னுங்கொற்றவாளுருவிக்கொண்டான்

விண்கடாஞ்செய்யும்வெய்யவினைவர்கட்கரணமாகிக்
கண்கடாமறைக்குமோரோழ்கடிவினைபொடிசெய்திட்டுக்
கொண்கடாநவின்றவீரொண்கொடிமதிற்கோட்டைகுட்டி
எண்கடாமுடையவெண்மர்குறும்பரையெறிந்துவீழ்த்தார்.

ஈடிலர்வெகுளியுள்ளிட்டெண்மரையெறியத்தீயுட்
பேடுவந்தொன்றுபாய்ந்துமுடிந்ததுமுடிந்தபின்னை
ஓடிவந்தொருத்திவீழ்ந்தாளுழையவரறுவர்பட்டார்
ஆடவன்றானன்போழ்துகழித்துவந்தொருவனுழ்ந்தான்.

பின்னுமோர்நால்வர்தெவ்வர்முறைமுறைபிணங்கிவீழ்ந்தார்
அன்னவர்தம்முளானேகுறைப்பிணமொருவனாகித்
தன்னைமெய்பதைப்பநோக்கியவனையுந்தபுப்பநோனார்
துன்னியதுயிலுமேனைத்துளக்குஞ்செய்திருவர்பட்டார்.

ஆங்கவரழிந்தபின்னையரசனையிருவரோடுங்

வீங்கியவனந்தஞான்மைவிழுநிதிமுழுதுங்கைக்கொண்
டோங்கியவுலகிற்கெல்லாமொருபெ(

நெடிதுடனுயதெய்வர்நால்வரைநீறுசெய்திட்
டடிகள்பின்முடிவென்பாளையகப்படுத்தனையராக
இடிமுரசதிருந்தானையரசரோடிங்கணீண்டிக்
கடிகமழமரர்வீரன்கடிவினைமுடிவித்தாரே.

கொடிகளுங்குடையுங்கோலக்கவரியுமமரர்தங்கள்
முடிகளுமடந்தைமாருமுகிழ்நகைக்கலங்களுஞ்செற்
றடியிடுமிடமின்றாகிமூடியாகாயமெல்லாங்
கடிகமழ்மலருஞ்சாந்துஞ்சுண்ணமுங்கலந்தவன்றே.

பொன்னரிமாலைபூவின்பொழிமதுப்பிணையன்முத்தின்
மின்னிவர்விளங்குந்தாமமெனவிவைவிரவிவீசித்
துன்னியவினைவர்கூட்டந்துணித்துவீற்றிருந்தகோனைப்
பன்னிபதுதியராகியமரர்கள்பரவுகின்றார்.

இமையவர்கள் பல்லாற்றானும் இறைஞ்சி ஏத்தித் திருவிழா இயற்றி அகமகிழ்ந்து அறவாழி அமிர்த வாரியுட் குளித்து அவிர்சுடர் ஒளிர் கடவுளாய் நின்ற பயாபதி மூர்த்தியைப் புகழ்ந்து தத்தம் இடஞ்சேர்ந் தார்கள். அரசன் விளங்காத திசையின்றிக் கேவலப் பேரொளியால் உலகெல்லாந் துளங்காது உயர்ந்து அண்டத்தின் முடிக்கு ஓர் சூளாமணியாயினன்.

அருமால் வினையகல வமரர் நாளு மடிபரவப்
பெருமான் பிரசாபதி பிரம லோக மினிதாளத்
திருமால் பெருநேமி திகழ்ந்த செந்தா மரைத்தடக்கைக்
கருமால் கடல்வரைத்த கண்ணார் ஞாலங் காக்கின்றான்.

தங்கோ னமருலக மினிதி னுளத் தரங்கநீர்ப்
பொங்கோ தமதுடுத்த பூமி யெல்லாம் பொதுநீக்கிச்
செங்கோ லினிதோச்சித் தேவர் காப்பத் திருமாலும்
அங்கோல் வேலரச ரடிபா ராட்ட வாழ்கின்றான்.

வலம்புரி வண்ணனு மகர முந்நீர் மணிமேனி
உலம்புரி தோளினனு முலக மெல்லா முடன்வணங்கச்
சலம்புரி வினைவென்ற தங்கோன் செந்தா மரையடிக்கீழ்
நலம்புரி விழவியற்றி நாளு நாளு மகிழ்கின்றார்.

சூளாமணி முற்றிற்று.

MAHAMAHOPADHYAYA
DR. U.V. SWAMINATHA IYER LIBRARY
BESANT NAGAR, MADRAS-600 090